சமுசயக் கயராறுக்கிற

# ஞானத்திறவுகோல்.

குருவுக்கும் சீஷனுக்கும்

வேதாந்த விஷயமாய் நடந்த

சம்பாஷணை.



R. பாலசுந்திரம் சந்நியாசியால்

இயற்றப்பட்டு

மேட்டுப்பாளையம்
இம்மானுவேல் பிரஸில்
அச்சிடப்பட்டது.



2-nd Edition 1000 Copies.



[விலை ரூ 1-6-0

சமுசயக் கயராறுக்கிற

# ஞானத்திறவுகோல்.

குருவுக்கும் சீஷனுக்கும்
வேதாந்த விஷயமாய் நடந்த சம்பாஷணை.

R. பாலசுந்திரம் சந்நியாசியால்
இயற்றப்பட்டு

---

நீலகிரி நான்சச் தோட்டத்தைச்சேர்ந்த கருக்கோடை
தோட்டம் கனம். M. முத்துசாமி மேஸ்திரி,
டுரூக்தோட்டம் கனம். முத்து மேஸ்திரி,
அவாக்கா தோட்டம் கனம்.
ஜோசப் முத்துசாமி மேஸ்திரி,
கனம். டேவிட் பாக்கிய நாத உபாத்தியாயர்
ஆகிய இவர்களின் பொருள் உதவியால்
அச்சிடப்பட்டது.

---

PRINTED AT
THE EMMANUEL PRESS.
METTUPALAIYAM.
1932.



2-nd Edition 1000 Copies.

PRICE RS. 1-6-0] [விலை ரூ. 1-6-0

சமுசயக்கயராலுக்கிற ஞானத்திரவுகோல்.

# சீஷனுடைய சமுசயக் கேள்விகள்





பக்கம்.

### இப்புத்தகம் எழுதின

# ஆக்யோனின் சுருக்க சரித்திரம்.



எப்பேர்ப்பட்ட பாவியையும் நான் புறம்பே தள்ளுவதில்லை என்ற திரிஞான சம்பந்த மூர்த்தியாகிய இரக்ஷா பெருமானுன இயேசு கிறிஸ்துவினுடைய திருவாக்கின்படி, பட்டுப்போன மரத்தில் தமது இரக்கத்தின்படியே துளிர்க்கச்செய்த அவர் என்னை இந்த கனமான ஊழியத்துக்கு, இரக்க சித்தங்கொண்டு கிருபையாய் ஏற்படுத்தினபடியால் அவரை மனத்தாழ்மையோடு ஸ்தோத்திரிக்கிறேன்.

வெகு காலத்திற்குமுன் துவாரகாபுரி என்னும் ஒரு பட்டணம் க்ஷணத்தில் அழிந்துபோய்விட்டது. அது பிரண்டமலை, கழுத்தறுத்தான்மலை, நாராயணன்மலை, கன்னியார்கள் மலை என்ற நாலுமலைகளின் எல்லைக்குள் அமையப்பெற்று துவாரகாபுரி இராஜனுல் ஆளப்பட்டிருந்ததாம். அந்தப்பட்டணத்தின் கோட்டை மேற்புறம் பூருவாய் அழிந்து, கீழ் பாகம் இந்நாள்வரை இருக்கிறது. பிற்காலங்களில் என் முன்னோர்கள் அவ்விடத்திலிருந்த காடு, வனந்தரம், குகைகளை சீர்படுத்தி அதை ஒரு பெரிய கிராமமாக்கி ஆண்டு வந்தார்கள். துவரைகுளம் என்னும் இடுகுறிப்பெயர் அதற்கு இந்நாள்பரியந்தம் வழங்கி வருகிறது. அது திருநெல்வேலி ஜில்லா நாங்குநேரி தாலூக்காவைச் சேர்ந்தது. துவரைகுளம் கிராமம் என் முன்னோர்களுடைய சுயாதீனத்திலிருந்ததுமல்லாமல், அதைச் சுற்றிலுமுள்ள ஆறுபங்கு நாட்டுக்கிராமங்களின் அமுலும் எங்களுக்கிருந்தது. கடைசியாக என் தகப்பனர் அந்தகிராமத்தைப்பற்றிய வியாஜியத்தில், அதை இழந்துவிட்டார். அதற்குமுன் ஆறுபங்கு நாட்டின் அமுலும் எங்களைவிட்டு எடுபட்டுப்போயிற்று.

சுமார் அறுபது வருஷங்களுக்குமுன், என் தாயார்பிறந்த இடையன்குளம் கிராமத்தில் பிறந்து, என்மாமனார் வீட்டில் வளர்ந்து, எட்டுப்பள்ளிக்கூடத்தில் எழுத்தாணிபிடித்து பல தமிழ் சாஸ்திரங்களை எழுதி மனப்பாடம் பண்ணிக்கொண்டவன். சுமார் பதினைந்து வயதாயிருக்கும்போது, என் குடும்பத்திற்கு வந்த கஷ்டங்களை நினைத்து, மனவிசாரங்கொண்டவனாய் வடதேசங்களுக்குப் போய்விட்டேன். உலகத்தால் தள்ளுண்டு, மனுஷரால் கைவிடப்பட்டு, தாய் தந்தையைப் பிரிந்துவந்தவன் இனி என் சொந்தஊருக்குப்போக மனவெறுப்புற்றவனாய், 'என் குடும்பத்தின் பாதகங்களினால் வந்த கொடிதான ஆபத்தினிமித்தம் ஞானத்தின் மூலமாய் தெய்வத்துக்குப் பிள்ளையாகவேண்டும்' எனக்கருதி, சிலநாட்களாய் பல இடங்களில் கூலி ஜீவனம்செய்து, பிறகு பட்டாளத்தில் சேர்ந்து, பர்மா, சீனா, மலாய், சையாம் முதலிய தேசங்களுக்குப்போனேன். அக்காலத்தில் அங்கங்குள்ள ஆலயங்களைத்தரிசித்து, அவைகளுக்குறிய சாஸ்திரங்கற்ற பெரியோர்களிடத்தில் பலவாறாய் தெய்வத்தைப்பற்றி விசாரிக்க அவரவர்கள் தாங்கள் வணங்கிவந்த தெய்வமே தெய்வமென்று சாதித்தார்கள். இவைகளால் எனக்கு யாதொரு நம்பிக்கையும் ஆறுதலுமில்லாமல் இந்தியாதேசத்திலுள்ள பலமார்க்கம், பலசாஸ்திரம், பலபாஷை, பலஜாதி, பலஇடங்களிலுள்ள ஆலயங்கள், தீர்த்தயாத்திரை முதலியவைகளைக் கண்டுபிடித்து, எந்தமார்க்கத்தில் சொல்லப்பட்ட தெய்வம் உண்மையான தெய்வமோ, அதையே மரணபரியந்தம் சாதிக்கவேண்டுமென்று கருதி பட்டாளத்தை விட்டுவிட்டேன்.

வயிற்றுகாரத்திற்காக அஸ்தமிக்கும்வரை பாடுபடவேண்டியிருப்பதால், தேசங்களைச்சுற்றி சீக்கிரத்தில் ஞானம் கண்டுபிடிக்க முடியாதென்றறிந்து, காவி வஸ்திரம் தரித்து திருவோடு கையிலேந்தி பரதேசியாய் இந்தியாவிலுள்ள சகல கோவில் ஸ்தலங்களையும், அங்கங்குள்ள தீர்த்த யாத்திரைகளையும் முடித்து, இவைகளுக்குச் சம்மந்தமான பலபாஷையின் எழுத்துக்கள், கல்சாதனம், செம்புப்பட்டையம், தோல்சுருள்,

ஓலைச்சுருள் முதலியவைகளைக் கற்றறிந்த பெரியோர்களிடம் போய் பூர்வக்யான விபரங்களைத் தெரிந்துகொண்டேன். மேலும் பற்பல இடங்களிலுள்ள சந்நியாசிகள் பரதேசிகளைக் கண்டு அவர்களோடு சம்பாஷணை செய்ததில், ஆத்துமாவுக்கு ஆறுதலான வார்த்தையாவது. தெய்வத்தையறியத்தக்க உண்மையான நேரிய வழியாவது அவர்களிடத்திலிருந்து வெளியாகவில்லை. ஆகையால் மிகவும் துக்கசாகரத்தில் அமிழ்ந்தவனாய் பசி பட்டினியுடன், சாகாமல் செத்து, 'ஒன்று: ஞானத்தின் மூலமாய் தெய்வத்தை யறிந்துகொள்ளவேண்டும்; அல்லது : வனாந்தரங்களில் துஷ்டமிருகங்களுக்கு இரையாக வேண்டும்' எனத்தீர்மானித்து, மேல்சமுத்திர ஓரங்களிலிருக்கும் பல மலைகளிலும் அவைகளிலுள்ள காடு வனங்களிலும் சுமார் பதினைந்து-வருஷம் மகான்களைக்காண பேராவல் கொண்டு உயிர் மறந்தவனாய் அலைந்து திரிந்தேன். திரியுங் காலத்தில் மலை, காடுபிரதேசங்களில், தொதவர், கோத்தர், கசிவர், இருளர், மலசர், குறும்பர், காவுப்பளியர், கறட்டுப்பளியர், சங்குருண்டான்பளியர், சருகுப்பளியர், தெய்வப்பளியர், ஊராளி, புலையர், காணிக்காரர், முதுவார், மண்ணடி, நாயாடி, ஜெர்மக்கள், ஒடியர், இறவாளர் முதலிய பல கோத்திர காட்டு ஜாதிகளைக்கண்டு சந்தித்து அவர்களைக்கொண்டு மலைகளிலிருக்கும் பல விசேஷங்களையும் தங்களைக் காட்டுமிருகங்களுக்கும், விஷமுள்ள ஜெந்துக்களுக்கும், பாஷாணவகைகளுக்கும், நஞ்சுத்தண்ணீர்களுக்கும், விஷக்காற்றுகளுக்கும் பலவித மூலிகைகள் சாதனங்களைக்கொண்டு தப்புவித்துக்கொள்ளும் சாமர்த்தியங்களையும் பலவாறாய் கற்றறிந்துகொண்டு, அவர்கள் கொடுக்கும் மலைவளங்களிலுள்ள காய், கனி, கிழங்கு, மூலிகை, தேன் முதலியவைகளை அருந்தி, அவர்கள் வசிக்கும் கல் பொந்து, மரங்களின்மேல் கட்டப்பட்ட குடிசைகளில் வாசம் செய்து இப்படியாக வேஷமாறி, சிலகாலங்கழித்து குடகு இராஜியத்தில் கொள்ளிடம், காவேரி உற்பத்தியாகிற பிர்மகிரி மலைக்குப்போய்ச்சேர்ந்தேன்.

அவ்விடத்தில்போய் .திக்கற்று திகைத்து உயிர் முற்றி

லும் நம்பிக்கையற்றவனாய் நின்று, 'என்னை உண்டாக்கின ஒருவனே! உன் நாமதேயம், உன் இருப்பிடம் எது என்று நான் அறியாமல், உன்னைத்தேடும் விபரம் நீ அறியக்கூடும். பயங்கரமான இவ்வனத்தில் கொடிதான ஆபத்து எனக்கு நேரிடாதபடி தப்புவித்து உன்னை எனக்கு வெளிப்படுத்துவாயானால், என் மரணபரியந்தம் உனக்கு சாக்ஷியாயிருப்பேன்,' என்று பலவாராய் மனவிசாரத்தோடு புலம்பி நாலாத்திசையில் கண்ணுற்றுப் பார்க்குமளவில் எனக்குச்சமீபமாகவே ஒரு குகை இருப்பதாகத்தென்பட்டது. அதைப்பார்க்கப்போன போது அக்குகையில் ஒரு மகான் இருக்கக்கண்டேன். உடனே அவருக்குப் பணிவுடன் நமஸ்காரம் செய்து எளியேனின் பரதவித்துத் திரியும் நிலைமையைத் தெரிவித்தேன். அப்போது என்னைத் தன்னிடம் மூன்று நாள் இருக்கச்சொன்னார். அந்த மூன்று நாளும் என்னைப் பலவாராய்ச்சோதித்தார். அப்பால் இரக்கசித்தங்கொண்டு எனக்குப் புராணம் காவியம், சித்தர்கள் நூல், யோகாப்பியாசம், காயசித்தி இவைகளைப்பற்றி மூன்னோர்களின் அநேக இரகசிய காரியங்களை அதிக தெளிவாயும் தனிவிபரமாயும் ஏழுவருஷகாலமாக போதனைசெய்தார். பிறகு இவைகளெல்லாம் மாமிசசம்பந்தமான இப்பிரபஞ்சத்துக்கடுத்தவைகளே தவிர மற்றபடி இவைகளால் மனிதர்கள் யாதொரு ஆத்துமஞான பிரயோஜனம் அடைய முடியாதென்று திட்டமாய்த்தெரிவித்தார்.

அவரிடமிருந்த புத்தகங்கள் கீழ்கண்டவாறு:-

யூதப்பாரம்பறையான தல்மூத்தாகமம், அரபு பூர்வக்யான புத்தகங்கள், வெர்ஜில், ஓமர், பிளேட்டோ எழுதிய கிரேக்க தத்துவஞானங்கள், சமஸ்கிரத தத்துவஞானங்கள், சத்திய வேதபுத்தகம் முதலியவைகள்.

இவைகளில் அநேக இரகசிய பூர்வக்யானங்களைப் பொறுக்கி சத்தியவாக்கியங்களுக்கு இசைவாய் இரவும் பகலும் தர்க்கம் செய்து போதித்து எனக்கு கிறிஸ்துவுக்குள் தெளிவாய் வழிகாட்டி, மோசேமுனிவர் எழுதின ஆதியாக

மம் முதல் மூன்று அதிகாரத்துக்குள் தேவன் தமது நியாயத் தீர்ப்பை முடித்துவைத்திருக்கிறாரென்றும், இதை உலகத்தா ருக்குப் பயிரங்கப்படுத்துவதற்காக ஆகமங்களும் நிருபவாக்கி யங்களும் தீர்க்கதரிசனங்களும் பரமசாக்ஷியாகிய வெளிப் படுத்தலோடு எழுதப்பட்டு, இவைகளையெல்லாம் கிறிஸ்துவுக் குள் முடிவுகட்டியிருக்கிறதென்றும், உலகத்தின் பலமார்க்கங் களிலுள்ள சகல சாஸ்திரங்களும் மோசேமுனிவர் எழுதிய துவக்கத்தின் ஆதிக்கும் பரிசுத்தயோவான் எழுதின அனுதி ஆதிக்கும் பீடிகையே தவிர அசல் ஆகாதென்றும் திட்ட மாய்ச்சொன்னார். இந்தசத்தியத்தை மனப்பூரணமாய் எவர் கள் உண்மையுடன் பற்றிக்கொள்ளுகிறார்களோ அவர்கள் ஆத்துமா கிறிஸ்துவுக்குள் அக்கினித்தீர்த்தமாடி இரவுபக லற்ற இடம்போகுமென்றும், ஆத்துமாக்களுக்கு சற்குருவா கிய கிறிஸ்துவானவர் முக்திகொடுப்பாரென்றும், இது காடு, வனாந்தரம், தீர்த்தயாத்திரை, வீடுவாசல் வேறெதிலுமில்லை, அவனுடைய சரீரமாகிய கூட்டுக்குள் இயற்கையாகவே அமைத்துவைத்திருக்கிறாரென்றும், இதை அவனவன் தன் தன் மரணத்துக்கு முன்பாகவே காத்திருந்து பயபக்தியுடன் அவரிடத்திலிருந்து பெற்றுக்கொள்ளவேண்டுமென்றும் எனக்குப்புகட்டினார்.

இப்போது எனக்கு வயது அறுபத்தேழு மகா கனமும் மேன்மையும் தங்கிய இராஜரிஷி ராமதாஸ் அவர்களே போ தனைசெய்து எனக்கு குருவாயிருந்தவர். ஜாதியில் இவர் மலையாள நம்பூரி பிராமணன். இவர் இந்தியாதேசம் முழு வதிலும் அந்நிய இராஜியங்களிலும் சென்று பல மார்க்கங் களிலுள்ள சாஸ்திரங்களில் தேர்ச்சி அடைந்து காயசித்தி யோகாப்பியாசம் முதலியவைகளைச்செய்து ஒளிகளைக்கண்டு பிர்மகிரி குகைக்குப் போயிருந்திருக்கிறார். ஏதோ ஒரு சந் தர்ப்பத்தில் உடுப்பி சுப்ரமணியத்துக்கு அவர் போனதாகவும், அங்கே ஒரு அமெரிக்க கிறிஸ்தவ சந்நியாசி பிரசங்கம் செய் துகொண்டிருந்தபோது, இவர் அவரிடம் பலத்த தர்க்கம் செய்ய, அவர் இரவு பகலற்ற இடம், அக்கினித்தீர்த்தம், சற்

குரு முக்தி கொடுக்கும் ஸ்தானம் மனுஷனுக்குள் இயற்கை யாகவே ஆயத்தமாக்கப் பட்டிருக்கிறதென்றும், இவைகளை ஞானசற்குருவாகிய கிறிஸ்துதான் தம்மை விசுவாசிக்கிறவ னுக்கு தமது சத்தியத்தின்மூலமாய் வெளிப்படுத்திக்கொடுக் கிறவரென்றும் வற்புறுத்தித் தெளிவாய்ப் போதித்தாரென் றும், இவர் அவைகளைக்கேட்டவுடன் மனங்கலங்கி "ஏதோ கிறிஸ்தவன் வேதத்திலும் நாம் கற்றறிந்ததற்கு மேலான அரிதான பெரிய இரகசியம் இருக்கிறது'' என்றுணர்ந்து, இரகசியமாய் ஒரு சத்திய வேதபுத்தகம் வாங்கிக்கொண்டு பழையபடி பிர்மகிரி கெபிக்குப்போய் நன்ருய் அதை வாசித்து இவர் முன்செய்த யோகாப்பியாசத்தைப்போல, தன்னை ஓர் மைப்படுத்தி, கிறிஸ்துவுக்குள் மனதை நேரே திருப்பி, தியா னிக்க ஞான ஒளியாகிய கிறிஸ்து தோற்றமாயினர் என்றும் சொன்னர். அவரை ஆவிக்குள் மனக்கண்ணினல் கண்டபிற் பாடு, உலக மார்க்கங்களிலுள்ள ஞானங்களெல்லாம் ஞான மென்று பேர்பெற்றபோதிலும், அவைகள் உயிரற்ற ஞான மென்றும் அதில் காணப்படும் ஒளியெல்லாம் மாயஒளியென் றும், அதில் "சத்து சித்து'' இருந்தாலும் நித்தியானந்தமில் லையென்றும், அது மனிதர் கண்ணுக்குமுன் தோன்றி மறைந்து, நம்பி இருந்த ஆத்துமாக்களை வஞ்சித்துக் கெடுத் துப்போடுமென்றும், இதை நம்பி தவம்செய்த அநேக ஞானி களையும் கெடுத்துப்போட்டதென்றும், இன்னும் இதை எவ ரெவர்கள் நம்புவார்களோ அவர்களையும் கெடுத்துப்போடு மென்றும், கிறிஸ்துவின் சத்தியமோ இரக்ஷிப்பின் ஞான மென்றும் (இரக்ஷிப்பு என்பது ஆத்துமா மாயையிலிருந்து விடுவிக்கப்படுவதாம்) இதுவே ஞான ஒளியாகிய கிறிஸ்து வைக் காட்டுமென்றும், இதை எவன் கீழ்படிதலோடு நம்பிக் கைகொண்டு பெற்றுக்கொள்ளவில்லையோ அவனுடைய ஆத் துமா, வேதத்தில் சொல்லுகிறபடி செத்தஆத்துமாவென்றும், இந்த சத்தியத்தை எவன் மனதாரப் பற்றிக்கொள்ளுகிருனே, அவன் ஆத்துமா ஜீவஒளியைப்பெற்று அவனும் அவன் குடும் பமும் ஒலிவமரத்தின் கன்றுகளைப்போலிருப்பார்களென்றும், பனையைப்போல் செழித்திருப்பார்களென்றும், அவன்

ஆத்துமாவுக்கு சத்தியமே நித்தியத்துக்கு வழிகாட்டுமென்றும், இப்படிப்பட்டவனே கிறிஸ்துவின்சத்திய ஆவிக்குள் ஆவியைப்பெற்று (இதுக்குத்தான் அக்கினி தீர்த்தம் என்று பேர்) இரவு பகலற்ற இடமாகிய நித்தியா நித்தியத்திற்குள் போய் பரிபூரணமாகிய கிறிஸ்துவுடனே ஐக்கியமாகி ஜீவனுள்ளோரின் வெளிச்சத்திலே என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களிலும் அவருடனே அரசாளுவான் என்றும், தான் கண்டறிந்ததாக எனக்குச்சொன்னார்.

இன்னும் உலக சம்பிரதாயம் போஜனத்துக்குள்தான் இருக்கிறதென்றும் சாத்தானின் வல்லமை இதில்தானடங்கி இருக்கிறதென்றும் (ஏனென்றால் சர்வவல்லவரை சாத்தான் சோதிக்கும்போது போஜனத்தை எத்தனமாகக்கொண்டான்) போதித்து, பொய்யான மானிடதேகமும் அதிலடங்கிய உயிரும், பெண்டுபிள்ளைகள் உலகம் '**ஊண்**' என்னும் ஒருபதத்தில் அடங்கியிருப்பதால், கர்த்தருடைய சத்தியத்தை வெளிப்படுத்த என்னை அவர் அனுப்பப்போகிறதினிமித்தம், கர்த்தரின் கனமான ஊழியம் இந்த அழிவுள்ள அற்ப ஆகாரத்தினால் அலட்சியப்பட்டுப்போகாதபடி, வேண்டிய நல்ல வைத்தியத்தொழில்களையும், ஆசீர்வாதத்துடன் சத்திய வாக்கையும் கொடுத்து, தேசங்களில் யாத்திரைசெய்து கர்த்தரின் வசனத்தை மரணபரியந்தம் உண்மையோடு பிரசங்கம்செய்ய என்னை அனுப்பிவிட்டார்.

எனக்குத்தெரிந்த சத்தியத்தை மலைப்பிரதேசங்களிலும், பலதேசங்களிலும் போய் வெளிப்படுத்தினேன். மலாய் தேசம் பூராவும், தென்னிந்தியா முழுமையும், சில காடு வனங்களிலும் சுற்றி கர்த்தருடைய நாமத்தை தனிச்சம்பாஷணையாகவும் பெரிய கூட்டங்களிலும் பிரசங்கித்தேன். சில இடங்களில் அதிக பிரயாசத்துடன் கிறிஸ்தவ சபைகளுக்கு ஊழியம்செய்தேன். 1923-ம் வருஷம் ஒத்தகமந்திற்கு வந்தேன். (நீலகிரிமலை) கொஞ்சநாள் அவ்விடம் தங்கி பிரசங்கம் செய்த காலத்தில், காந்தல் கனம் மனோவா உபதேசியார் அவர்கள், கனம் G. R. ஜேம்ஸ் அவர்கள் கனம் லாசரஸ் ஐயர் அவர்கள்

குன்னூர் கனம் R. சாமுவேல் ஐயர் அவர்கள், கனம் மைக்கல் உபதேசியார் அவர்கள் முதலியவர்களால் உபசரிக்கப்பட்டு எல்லா மதஸ்தருக்கும் பொதுவாக பலத்த பிரசங்கம் செய்துவந்தேன். அங்கே மகா-ா-ா-ஸ்ரீ லீ. கலெக்டர் அவர்கள் I. C. S. சில பிரசங்கங்களுக்கு விஜயம்செய்தார். அப்போது அநேகருடைய வேண்டுகோளின்பேரில் இந்தப் பிரபந்தத்தை எழுதத்துவக்கினேன். அவர்கள் எல்லோருமாக இப்புத்தகத்தை கொஞ்சம் எழுதத்துவக்கி, இதை சீர்திருத்தி முடிக்கும்படி கோயம்புத்தூருக்கு என்னை அனுப்பினார்கள். இவ்விடத்தில் ராமநாதபுரம் ஜில்லாவில் தேவஊழியம் செய்துவந்த கனம் D. S. பாக்கியநாத ஐயர் அவர்களும், மகா-ா-ா-ஸ்ரீ D. ஜான் சேனாதிபதி அவர்களும் ஐந்துமாதகாலம்வரை என்னோடிருந்து எனக்கு உதவியாக இப்புத்தகம் எழுதி முடித்தார்கள்.

இப்புத்தகத்தில் அறிவுடையோர்கள் யாருக்காவது, ஏதாவது குற்றம் குறைபோல் காணப்பட்டால் அதைத்தயவாய்ப் பொறுத்துக்கொண்டு, விளக்கிக்காட்டியிருக்கும் சத்தியத்தை மட்டும் தழுவிக்கொள்ளும்படி தாழ்மையாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன்.

தேவனுக்கே கனமும் மகிமையும் என்றென்றைக்கும் சதா காலங்களிலுமுண்டாவதாக ஆமேன்.

இதை அச்சிடும் பொறுப்பை கோயம்புத்தூர் போலீஸ் டிப்டி சூப்பரின்டெண்டு மகா-ா-ா-ஸ்ரீ F. B. செல்வநாயகம் அவர்கள் ஒப்புக்கொண்டதற்காக, அவர்களுக்கு மிகவும் நன்றியறிதலுள்ளவனாயிருக்கிறேன்.

அற்பனும் சொற்பபுத்தியுள்ளவனுமான என்னை இந்த கனமான பேரறிவுக்குட்படுத்தின மகா கனமும் சங்கையும் பொருந்திய இராஜரிஷி இராமதாஸ் அவர்களை மிகுந்த தாழ்மையோடும் கீழ்ப்படிதலோடும் நமஸ்கரிக்கிறேன்.

**R. பால் சுந்தரம் சந்நியாசி.**

## சமுசயக்கயராறுக்கிற ஞானத்திரவுகோல்.

# முகவுரை.



முன்காலம், இக்காலம், இனிவரும் காலத்திலுள்ளவர்களில் யாவராயினும் அறியக்கூடாத நான்கு காரியங்கள் உண்டென்று பரம ஞானி சொல்லியிருக்கிருர். அதாவது:-

1. வானமண்டலத்திலிருந்து பாதாளபரியந்தம், ஆண்டவர் உண்டாக்கின வீடாகிய இவ்வுலகத்தின் ஆழம், நீளம், எவ்வளவென்று யார்தான் கணக்கிடக் கூடும்?

2. ஆதாம்முதல் நோவா காலமட்டுமுள்ள ஜனங்களுக்குள் யார் யார், எத்தனை பாஷைகள், எத்தனை ஜாதிகள், எத்தனை கொடிவழிகள், எத்தனை கோத்திரங்கள், எங்கெங்கே இருந்தன? துவக்கத்தின் பூர்வக்யானமும் அதின் முடிவும் யார் சொல்லக்கூடும்?

3. என் ஜீவன் எப்படிப்பட்டது? என் கருவுக்கு நான் யார்? என் ஜீவனின் அளவு, உயரம், நிறம் என்ன? இதைப்பற்றி யார்தான் நிதானித்து அறியக்கூடும்?

4. சர்வ லோகங்களையும் உண்டாக்கினது யார்? தேவன். அதற்கு மேலிருந்து இவரை உண்டாக்கினவர் யார்? அதற்கு மேலிருந்து அவரை உண்டாக்கினவர் யார்? மரண பரியந்தம் உலகத்துக்குள் ஒருவனும் இவைகளை முடிவு சொல்லான்.

மேற் சொன்ன நான்கு காரியங்களையும் முடிவு கட்டிக் கொள்ள இவன் யார்?

தேவனுக்குள் அடங்கி நிற்கும் இயற்கையில் அநேகர் புத்தியைச் செலுத்தி முடிவுக்கு வராமல் அவர்களுக்கு அறிவு கெட்டு, கடைசியாக 'உலகம் இப்படித்தான் தோன்றுவதும், மறைவதும் சகஜம்' என்று சொல்லி தங்களைக் கெடுத்துக்கொள்வதுமல்லாமல் அதிகக்கல்வியில் தற்பெருமை கொண்டவர்களையும் வஞ்சித்துப் போடுகிறார்கள்.

சர்வபூர்வக்கியானங்களுக்கெல்லாம் மேலான மூல காரண கர்த்தாவாகிய திறிஸ்துவைத்தவிர வேறொருவனும் இவைகளை அறியான்.

வேதவாக்கியங்களெல்லாம் தீர்க்கத்தரிசனமாயிருக்கிறது; தீர்க்கத்தரிசனமென்றால்: திரிகால சம்மந்தமானவைகளையெல்லாம் வெளிப்படுத்த தேவனிடத்திலிருந்து உதயமாகிற ஜோசியமாம். ஜோசியம் என்பது கணக்கு; தேவ பாஷையின் கணக்கை உலகபாஷையின் கணக்குக்கு அநேகர் ஒப்பிட்டு, வேதவாக்யங்களை சோதித்தறிய முயற்சி செய்து, அவைகளின் துவக்கமும், முடிவும், காலக்கிரமங்களும் இன்னதென்று அறிய முடியாமலே தங்களைக் கெடுத்துக்கொள்வதுமல்லாமல், இன்னும் அநேகரையும் கெடுத்துக்கொண்டிருக்கிறார்கள்.

திருஷ்டாந்தமாக, உலகத்திலுள்ள சகல சாஸ்திரங்களும் வரிசைக்கிரமப்படுத்தி எழுதப்பட்டிருப்பதால் முதல் துவக்கி கடைசி மட்டும்வாசித்து அவைகளின் கருத்து இன்னதென்று அறிந்து கொள்ளக்கூடும். சத்திய வேதமோ வரிசைக்கிரமப்படி வாசித்து அறிந்துகொள்ளக் கூடியதல்ல. உதாரணமாக ஆதியாகமம் 1-ம் அதிகாரம் 'ஆதி' என்னும் வார்த்தையோடு தொடங்குகிறது. அதின் கீழ்வாக்கியங்களைத் தொடர்ந்து வாசித்தால் முன் வாக்கியத்தின் கருத்து விளங்காது;

முடிவுக்கும் வராது. இந்த துவக்கத்தின் ஆதியை முடிவுக்குக் கொண்டுவரவேண்டுமானுல், அநாதி ஆதியைச் சேர்க்கவேண்டும். இந்த அநாதி ஆதி யோவான் சுவிசேஷம் முதலாம் அதிகாரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த இரண்டு ஆதியையும் ஒன்ருய்ச் சேர்த்து முடிவுக்குக் கொண்டுவர வேண்டுமானுல், ஏசாயா, யோபு, நீதிமொழி, உன்னதப்பாட்டு சகரியா, தானியேல், சங்கீதம், யோவான், கொரிந்தியர், கொலோசெயர், எபிரேயர் இவைகளிலுள்ள அதற்குக் குறிப்பான வாக்கியங்களை யெல்லாம் பொறுக்கி இரண்டு ஆதியையும் ஒன்ருய்ச் சேர்த்து வெளிப்படுத்தலில் கொண்டுபோய் முடிவு கட்டவேண்டியது. முதல் எழுத்துக்கு இவ்வளவு பிரயாசமானுல் வேதாகமத்திலுள்ள மற்ற எழுத்துக்களை யெல்லாம் என்னவிதமாய் அறிந்துகொள்ளலாமென்று இதை வாசிக்கும் நீங்களே நிதானித்துக் கொள்ளுங்கள். பூர்வ காலங்களில் பங்கு பங்காகவும் வகை வகையாகவும் இங்கே கொஞ்சம், அங்கே கொஞ்சமாக தீர்க்கதரிசிகள் மூலமாய் பிதாக்களுக்கு அதாவது பக்தர்களுக்கு தம்மையும் தம்முடைய சித்தத்தையும், கால இயற்கைக்கும், மனுஷருடைய அறிவுக்கும் தக்கதாக தேவன் வெளிப்படுத்தி வந்திருக்கிருர். ஆதலால் பரிசுத்த வேதாகமத்தில் ஒரே தொகுப்பாய் ஓரிடத்தில் கிறிஸ்து மார்க்க சத்தியம் எல்லாம் காணப்படாமல், இங்கே கொஞ்சம் அங்கே கொஞ்சமாக வேதாகமம் முழுவதிலும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் வேதாகமத்தின் பல இடங்களிலுமிருந்து, பொருக்கிச் சேர்த்து முடிவுக்குக் கொண்டுவந்தால் விளங்குமேயல்லாமல் மற்றப்படியல்ல.

பிரியமான நண்பர்களே ! மார்க்க சம்பந்தமான இந்தப் புஸ்தகத்திலடங்கிய குறிப்புகளை நீங்கள் வாசிக்கும்போது மேற்சொன்னதை அறிந்துகொள்ளலாம். கிறிஸ்து இயேசுவானவர் பரத்துக்கெழுந்தருளுமுன் "பிதாவின் வாக்குத்தத்தமானவராகிய பரிசுத்த ஆவியானவருக்காக எருசலேமில் காத்திருங்கள்" என்றும், "அவர் வந்து உங்களைப் பலப்ப

டுத்தி, சகல சத்தியத்துக்குள்ளும் வழி நடத்துவார்'' என்றும் சொன்னார். (அப், 1, 5-8) அவருடைய உதவியில்லாமல் நாம் ஒன்றும் அறியவும் செய்யவும் முடியாது. அந்த பரிசுத்த ஆவியானவர்தாமே உங்களையும் என்னையும் சகல சத்தியத்திற்குள்ளும் வழி நடத்துவாராக. ஆமேன்.

---



## இரண்டாம் பதிப்பு. 1000 காப்பிகள்.

இப்பிரபந்தத்தின் ஆக்யோஜகிய கனம். **R. பால்சுந்திரம் சந்நியாசி** அவர்களின் உத்திரவின் பேரில், நீலகிரி நான்சச் தோட்டத்தைச்சேர்ந்த கருக்கோடை தோட்டம் கனம். **M.** முத்துசாமி மேஸ்திரி, டுருக்தோட்டம் கனம். முத்து மேஸ்திரி, அவாக்கா தோட்டம் கனம். ஜோசப் முத்துசாமி மேஸ்திரி, கனம். டேவிட் பாக்கிய நாத உபாத்தியாயர் ஆகிய இவர்களின் பொருளுதவியால் பிரசுரஞ் செய்யப்பட்டது.

---

# சமுசயக் கயிரறுக்கிற ஞானத்

# திறவுகோல்.

---

## கண்ணாடிக்கடல் வெளி. 4, 7.

**சீஷன்:**—வெளி. 4: 6, 7ல் "அந்த சிங்காசனத்திற்கு முன்பாக பளிங்குக் கொப்பான கண்ணாடிக்கடல் இருந்தது. அந்த சிங்காசனத்தைச் சுற்றிலும் நான்கு ஜீவன்கள் இருந்தன. அவைகள் முன் புறத்திலும் பின் புறத்திலும் கண்களால் நிறைந்திருந்தன. முதலாம் ஜீவன் சிங்கத்திற்கு ஒப்பாகவும், இரண்டாம் ஜீவன் காளைக்கு ஒப்பாகவும், மூன்றாம் ஜீவன் மனுஷமுகம் போன்ற முகமுள்ளதாகவும், நான்காம் ஜீவன் பறக்கிற கழுகுக்கு ஒப்பாகவும் இருந்தன" என்று சொல்லி இருக்கிற கண்ணாடிக் கடலாவது என்ன?

**குரு:**—அது மனிதனுடைய இருதயமாம். "நாம் எல்லாரும் திறந்த முகமாய் கர்த்தருடைய மகிமையை கண்ணாடியினாலே காண்கிறது போலக் கண்டு" என்றிருக்கிறது (மனக் கண்ணாடி.) 2 கொரி: 3, 18.

**சிஷன்:**—ஆத்துமஜீவன், சரீரஜீவன் என்று வேதம் திட்டமாய் சொல்லுகிறது. அப்படியிருக்க மேலே சொல்லிய நான்கு ஜீவன்களும் எவை? அவைகள் எந்த இடங்களில் இருக்கின்றன?

குரு:—இந்த நான்கு ஜீவன்களும், மனுஷனுடைய கூட்டுக்குள் அமைந்திருக்கின்றனவாம். அவை நான்கு ஜீவன்கள் அல்ல; நான்கு ஜீவன்களின் தன்மையாம் (எசே: 1: 5.) "அதின் நடுவிலிருந்து நான்கு ஜீவன்கள் தோன்றின. அவைகளின் சாயல் மனுஷசாயலாயிருந்தது."

சிஷன்:—முதலாம் ஜீவன் சிங்கத்தைப்போல் என்று சொல்லியிருக்கிறதே; அது சிங்கமா?

குரு:—சிங்கத்தைப்போல் என்பதால் அது ஒரு பாவனையாக சொல்லப்பட்டிருக்கிறதேயொழிய, அது யதார்த்தமான சிங்கமல்ல. சிங்கம் என்று சொல்லப்பட்டது: இந்த உலகத்திலிருக்கிற மிருக ஜீவன்களுக்கெல்லாம் இராஜாவாயிருக்கிற சிங்கத்தின் வல்லமையைக் குறிக்கும். இதன் இரகசிய கருத்து என்னவென்றால்:—மனிதனுடைய முழு சரீரத்தில், நான் என்பவன் அவனுடைய உந்தி ஸ்தானத்திலிருந்து, உச்சிக்குளி, அதாவது நாவுஸ்தானம் வரையிலும், நாகப்பாம்பு படம் எடுத்திருக்கிறது போலிருந்து, "நான்" "எனக்கு" என்ற ஆசை பூண்டு, பற்பல கொடிய நினைவுகளை அதில் நினைத்து யாவராலும் புகழ்ச்சியும், பெருமையும், அடைய அபேட்சித்துக்கொண்டிருக்கும் சுபாவமே, அந்த சிங்கம் "நான்" என்பதாம். இவன் வாயில் இயற்கையாகவே ஆதிசர்ப்பத்தின் விஷமிருப்பதாக சங்கீதக்காரனும், பரிசுத்த பவுலும் சொல்லியிருக்கிறார்கள்.

சங்: 140: 3. "சர்ப்பத்தைப்போல தங்கள் நாவை கூர்மையாக்குகிறார்கள். அவர்கள் உதடுகளின் கீழ் விரியன் பாம்பின் விஷமிருக்கிறது."

சங்: 58: 4. சர்ப்பத்தின் விஷத்திற்கு ஒப்பான விஷம் அவர்களில் இருக்கிறது.

**ரோம: 3: 13.** அவர்கள் தொண்டை திறக்கப்பட்ட பிரேதக்குழி; தங்கள் நாவுகளால் வஞ்சனை செய்கிறார்கள்; அவர்களுடைய உதடுகளின் கீழே பாம்பின் விஷமிருக்கிறது.

**சிஷன்:**—இரண்டாம் ஜீவன் காளைக்கு ஒப்பாயிருப்பதாக சொல்லியிருக்கிறதே! அது என்ன?

**குரு:**—காளை என்பது மிருகத்தைக் குறிக்காமல், மிருகத்தின் குணத்தை காட்டுகிறது. காளையானது தன்மையில் முரட்டுத்தனமும், பணியாத குணமும் சமயாசமயங்களில் பிடிவாத சாதனையுமுள்ளது. இப்படிப்பட்ட மிருக சுபாவம் மனுஷனுடைய நடுநெஞ்சில் குடியிருந்துகொண்டு சத்தியத்தையும், தர்மவிஷயங்களையும்பற்றி எவ்வளவாய்ப் போதிக்கப்பட்டு கேட்டறிந்திருந்தபோதிலும், கேட்கிறவனுகப் பாவனைகாட்டி, கோபம், பழி, பாதகம் செய்யத்துணிந்து தர்வம் கொண்டிருக்கும் தார்க்குணமே, அந்த காளை என்பதாம்.

**எரே: 31: 18.** நீர் என்னை தண்டித்தீர், நான் பணியாத மாடுபோல் அடிக்கப்பட்டேன்.

**பிரசங்கி: 3: 18.** மனுப்புத்திரர், தாங்கள் மிருகங்களைப் போலிருக்கிறார்கள் என்பதை அவர்கள் காணும்படிக்கு தேவன் அவர்களை சோதிக்கிறார் என்று நான் மனுஷனுடைய நிலைமையைக்குறித்து என் உள்ளத்தில் எண்ணினேன்.

**சிஷன்:**—மூன்றாவது ஜீவன், மனுஷ முகம்போன்ற முகமுள்ளதாய் இருந்ததாகச் சொல்லியிருக்கிறதே! அது என்ன?

**குரு:**—இந்த அண்ட கோளங்களாகிய வெளி உலகம், மனுஷனுடைய கண் தோற்றத்திற்குள்ளடங்கி, இந்த ஜீவனுக்குரிய சக்தி, தத்துவ சாஸ்திரத்தின்படி உள்ளத்தில்

வாசம் பண்ணி, கண்காணும் உலகப்பொருட்களின் மேல் இச்சையை மூட்டி, கவர்ச்சி பண்ணி, கண் வழியே நோக்கிப் பார்த்து அபேட்சித்துக்கொண்டிருக்கும் அந்த இச்சையின் சக்திக்கு அளவில்லாததால் மனுஷமுகம் போன்ற மிருகமுள்ளதாயிருக்கிறதென்று சொல்லியிருக்கிறது.

சிஷன்:—நான்காம் ஜீவன், பறக்கிற கழுகுக்கு ஒப்பாயிருக்கிறது என்று சொல்லியிருக்கிறதே; அது என்ன?

குரு:—பறவைகளில் கழுகானது ஆகாயத்தை அளாவிய மலைச்சிகரங்களில் கூடுகட்டி, ஆகாயமார்க்கமாய் உயரப் பறந்து வெகு தூரங்களுக்கு அப்பாலுமுள்ள தனது உணவை கண்ணால் கண்டு நாசியால் சுவாசித்து, அறிந்துகொள்ளக்கூடிய சக்தி யுடையதாயிருக்கிறது போல மனுஷனுடைய சரீரத்தை ஒரு மலையாகவும் அவன் சிரசை மலையின் சிகரமாகவும் அவன் வார்த்தையை பறக்கும் கழுகுக்கு சமானமாகவும் பாவித்து, கழுகு ஆகாயமார்க்கமாய் பறந்து போவதுபோல, மனுஷனுடைய வார்த்தையும் ஆகாயமார்க்கமாய் பறந்து சர்வலோகமும் செல்லுமாம்; ஆகவே தத்துவ சாஸ்திரத்தின்படி, மனுஷருடைய வாய்க்குள் பசி, தாகம், ருசி, உண்டாகி, ருசியுள்ள பதார்த்தங்களுக்காக நாவில் நாட்டம் கொள்ளுமாம், ஆகையால் மனுஷனுடைய வார்த்தையை கழுகுக்கு ஒப்பிட்டிருக்கிறது.

சிஷன்:—(1) சிங்கத்தைப்போன்ற நான் என்பதையும் (2) மிருககுணம் போன்றதான முகாந்திரமில்லா வீண் பிடிவாத சாதனையும், (3) உலக முழுவதையும் காணும் கண்களின் இச்சையின் அளவையும், (4) கழுகுகைப்போல ஆகாயமார்க்கமாய் பறக்கும் மனுஷனுடைய வார்த்தையையும், அந்த வார்த்தையின் உயரம் எவ்வளவு? என்ன நிறம், எந்த இடங்களில் எல்லாமிருந்து புறப்படுகிறது என்று கண்டு பிடித்து இவைகளை நிதானிக்க அல்லது அடக்கியாள மனுஷரால் கூடுமா?

குரு:—கூடாது தான்; ஆயினும் இந்த நான்கு ஜீவன்களின் சக்தியையும் அடக்கியாளக்கூடிய ஒருவரை, மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் என்னும் நான்கு சுவிசேஷங்கள் தெளிவாய் வெளிப்படுத்துகிறது.

சிஷன்:—அவர் யார்?

குரு:—நான்கு ஜீவன்கள் குறிப்பிட்டுக் காண்பிக்கிற, மனுஷனின் நான்கு தியகுணங்களின் சக்தியை அடக்கியாளக்கூடியவர், மத்தேயு (சிங்கம்), மாற்கு, (காளை), லூக்கா (மனுஷமுகம்), யோவான் (கழுகு) என்னும் நான்கு சுவிசேஷங்களையும் சொல்லப்பட்டிருக்கும் சர்வவல்லமையுள்ள நித்திய ராஜாவான யூதாகோத்திரத்தின் சிங்கமாகிய கிறிஸ்துவானவர் (வெளி 5, 5.) "இதோ, யூதாகோத்திரத்தின் சிங்கமும், தாவீதின் வேருமானவர்" என்று இருக்கிறது.

சிஷன்:–அப்படியானால் இந்த நான்கு சுவிசேஷங்களன்றி, வேறு சுவிசேஷங்கள் கிறிஸ்துவைப்பற்றி எழுதப்படாததற்குக் காரணமென்ன? கிறிஸ்துவுடன் பன்னிரண்டு அப்போஸ்தலர் இருந்தார்களே! அவர்கள் ஒவ்வொருவரும் ஆளுக்கொரு சுவிசேஷம் கிறிஸ்துவைப்பற்றி ஏன் எழுதவில்லை?

குரு:—நான்கு சுவிசேஷங்கள் மட்டும் எழுதப்படவேண்டுமென்பது தேவ சித்தமாயிருந்தபடியால் இந்த நான்கு சுவிசேஷகர்களும் தேவ ஆவியினால் ஏவப்பட்டு இவைகளை எழுதினார்கள். (2, திமோ 3: 16). "வேதவாக்கியங்களெல்லாம் தேவ ஆவியினால் அருளப்பட்டிருக்கிறது." அப்படி இந்த நான்கு சுவிசேஷம் மட்டும், எழுதினதற்கு காரணம் என்னவென்றால் சர்வலோகத்தின் சாபத்திற்கும் உலகம் எங்குமுள்ள சர்வ ஜனங்களின் பாவங்களுக்கும் கிறிஸ்து இரக்ஷகர் "சிலுவை" என்னும் "பிரமச்சக்கரத்தில்" பாடு

பட்டு, இரக்ஷிப்பின் கிரியையை முடித்து நித்தியத்திற்குபோகும் பாதையை திறந்துவைத்த விபரம் இந்த நான்கு சுவிசேஷங்களில் அடங்கியிருக்கிறபடியால், இந்த நான்கு சுவிசேஷங்களே போதுமென்பது தேவசித்தமாயிருந்தது. ஆகையால் மற்ற சீஷர்கள் வேறுசுவிசேஷங்களை எழுதவேண்டிய அவசியமிருந்ததில்லை. இதை அறிந்து இருந்தவரானபடியால் அப்போஸ்தலனாகிய பவுல் "நாங்கள் உங்களுக்கு பிரசங்கித்த சுவிசேஷத்தையல்லாமல், நாங்களாவது, வானத்திலிருந்து வருகிற ஒரு தூதனாவது, வேறொரு சுவிசேஷத்தை உங்களுக்குப் பிரசங்கித்தால் அவன் சபிக்கப்பட்டவனாயிருக்க கடவன்" என்று கலா: 1, 8-9-ல் இரண்டுதடவையாக சொல்லுகிறார். இப்படியே தேவனுடைய திருத்துவ இரகசியத்தை வெளிப்படுத்தின பரி: யோவானும் மேற்படி நான்கு சுவிசேஷங்களில் ஆத்தும இரட்சிப்புக்குரிய சகலமும் அடங்கியிருப்பதால் இயேசுவானவர்செய்த மற்ற அநேக காரியங்களை எழுத அவசியமிருந்ததில்லை என்றும், அப்படி எழுதினால், எழுதப்படும் புஸ்தகங்கள் உலகம் கொள்ளாதென்றும் சொல்லுகிறார். யோவான்: 21. 25.

**சீஷன்:**—நீங்கள் முன்சொன்ன பிரமச்சக்கரமாவது என்ன?

**குரு:**—நான் உனக்கு அநேக காரியங்களைச் சொல்லி இந்த பிரமச்சக்கரத்தின் இரகசியத்தை பின்னால் விபரித்து முடிக்கிறேன். சர்வலோகங்களும் உண்டாவதற்கு முன்னே நித்தியா நித்தியத்தின் தேவதிரித்துவ ஆலோசனையிலேயே சர்வலோகங்களையும் உண்டாக்கவேண்டுமென்றும், தமது ரூபத்தின்படியேயும், தமது சாயலின்படியேயும், தமது ஆவியை, மனுஷனுக்குள் ஊதிவைத்து அவனுக்கு தமது சுய சித்தத்தைக் கொடுத்து உலகத்தை ஆளச்செய்யவேண்டுமென்றும் தேவன் ஆலோசனை செய்தார். **ஆதி:** 1. 26. "தேவன் நமது சாயலாகவும் நமது ரூபத்தின்படியேயும் மனுஷனை உண்டாக்குவோமாக......என்றார்"

எசா: 9. 6. நமக்கு ஒரு பாலகன் பிறந்தார், நமக்கு ஒரு குமாரன் கொடுக்கப்பட்டார். கர்த்தத்துவம் அவர் தோளின் மேல் இருக்கும், அவர் நாமம், அதிசயமானவர், ஆலோசனைக் கர்த்தா, வல்லமையுள்ளதேவன், நித்தியபிதா, சமாதானப் பிரபு, என்னப்படும். (விபரம் 158-ம் பக்கம் காண்க.)

சீஷன்:—யாரோடு அவர் ஆலோசனை செய்தார்?

குரு:—முன் சொல்லப்பட்ட தேவதிரித்துவம், பிதா, குமாரன், பரிசுத்தாவி யென்னும் மூவராகிய ஒருவராம். (எசா: 9. 6. முன்பார்க்க), பிதாவாகிய தேவன், குமாரனாகிய தேவனோடும் பரிசுத்த ஆவியாகிய தேவனோடும், ஆலோசனை செய்தார். "ஆலோசனைக்கர்த்தா." எசா: 9. 6.

சீஷன்:—இம்மூவரும் மூன்றுதேவர்களா?

குரு:—இம்மூவரும் மூன்று தேவர்கள் அல்ல. சிருஷ்டிப்பின்படி பிதாவாகவும், சிருஷ்டிக்கப்பட்டவைகளை பாதுகாத்து இரக்ஷிக்கிறபடியால் குமாரனாகவும், அவைகளை முடிவுக்குக் கொண்டுவருகிறதால் பரிசுத்த ஆவியானவராகவும், முத்தொழில் உள்ள மூவரொருவராயிருக்கிறாரே யல்லாமல், மூவரும் தனித்தனி ஆட்களல்ல.

சீஷன்:—குமாரன் என்று சொல்லும்போது தேவனுக்கு குமாரன் உண்டோ?

குரு:—குமாரன் என்னும் பதமோ; சமஸ்கிரத கிரந்த, தத்துவ ஞானத்தில் ஒரு மாமிசதேகி அல்லது பூரண மனுஷன் என்று குறிக்குமேயல்லாமல, பெற்ற மகன் என்று

அர்த்தமாகாது. தாவீதின் குமாரனென்று வேதத்தில் கிறிஸ்துவைக்குறித்து சொல்லியிருக்கிறதே! அப்படியானால் கிறிஸ்து தாவீது பெற்ற மகனா? அப்படியல்ல; "கர்த்தரை எப்போதும் என் முகத்திற்கு முன்பாக நிறுத்தி நோக்கிக் காத்துக்கொண்டிருக்கிறேன்." (அப்: 2. 25. சங். 16. 8.) என்று தாவீது சொன்னதாக வேதத்தில் சொல்லியிருக்கிறது. அப்படியானால் இவர் தாவீதுபெற்ற மகனாய் இருப்பது எப்படி? கிறிஸ்துவை தாவீது தேவனென்றும், ஆண்டவனென்றும், கர்த்தரென்றும், நித்திய குமாரனென்றும் சொல்லியிருக்கக் காரணம் யாதெனில், ஆதி தாய்தகப்பன் பாவம் செய்த உடனே, தேவன் தமது வார்த்தையாகிய வாக்குத்தத்தத்தை ஏவாளுக்கும் சாபத்தை சாத்தானுக்கும் கொடுத்தார். ஏவாளுக்கு வாக்குத்தத்தத்தைக்கொடுத்து அதைப் பின்காலங்களில் நோவாவுக்கும், பிறகு ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு, யூதாவுக்கும் புதுப்பித்துக்கொடுத்த அந்த வார்த்தையாகிய தேவன், பிரத்தியக்ஷமாய் யூதாகோத்திரத்தில் மாமிச சம்பந்மான தாவீதின் கொடிவழியில் கிறிஸ்து இரக்ஷகராய் தோன்றினவரானபடியால், இவர் தாவீதின் குமாரனென்றும், யூதாகோத்திரத்துச் சிங்கமென்றும் அழைக்கப்படுகிறார். யோவான்: 1. 1-ல் அந்தவார்த்தை தேவனாயிருந்ததென்றும், 1. 14-ல் அந்த வார்த்தை மாமிசமாயிற்றென்றும் சொல்லியிருக்கிறது. மேற்சொல்லிய அந்த வார்த்தை என்பது ஆதியில் ஏதேனில் ஏவாளுக்குக்கொடுத்த வாக்குத்தத்தமாகிய வார்த்தையே. இதைப்பற்றி கிறிஸ்துவுக்கு முன்னதாக வந்த யோவான் ஸ்நானகனும் தன்னிடத்தில் வந்து நீர் யார் என்று வனாந்திரத்தில் கேட்ட பரிசேயர் வேதபாரகர் முதலியவர்களிடம், நான் எலியாவுமல்ல, தீர்க்கதரிசியுமல்ல, மேசியாவுமல்ல, வனாந்தரத்தில் கூப்பிடுகிறவனுடைய சத்தமாயிருக்கிறேன் என்று சொன்னார். அதாவது வார்த்தையாகிய தெய்வம் நானல்ல. வார்த்தைக்குடையவரை உங்களுக்கு வெளிப்படையாய்க் காட்டும்படி வனாந்தரத்தில் சத்தமிடுகிற ஒரு மாமிச தேகியாயிருக்கிறேன் என்றும் வார்த்தையாகிய தெய்வத்தை கிறிஸ்து என்றும், தேவனென்றும், நித்திய

குமாரனென்றும், சர்வலோகத்தின் பாவங்களைச் சுமந்து தீர்க்கிற தேவாட்டுக்குட்டியென்றும், அவர் உங்கள் நடுவில் இப்போது இருக்கிறார் என்றும், அவரே ஞானமணவாளன் என்றும் அவருடைய பாதரக்ஷையின் வாரை அவிழ்ப்பதற்குத் தான் அபாத்திரனென்றும் வெளிப்படையாக சாக்ஷி கொடுத்திருக்கிறார். யோவான்: 1. 19-23.

**சீஷன்:**—எப்போது ஆலோசனை செய்தார்?

**குரு:**—சர்வமும் உண்டாவதற்குமுன் தேவன் அனாதி காலத்தில் தமது திருவுள்ளத்தில் ஆலோசனை செய்தார். 1 கொரி: 2. 7. உலகத்தோற்றத்துக்கு முன்னே.

**சீஷன்:**—யாருக்காக ஆலோசனை செய்தார்?

**குரு:**—சர்வலோகத்தாருக்காகவும் ஆலோசனை செய்தார்.

தேவன், "சர்வலோகங்களையும் சிருஷ்டித்து நமது ரூபத்தின்படியும், நமது சாயலின்படியும், மனுஷனை உருவாக்கி நமது ஆவியை அவனுக்குள் ஊதிவைத்து, உலகத்தை ஆண்டுகொள்ளத்தக்க சுயாதீன சித்தத்தையும் அவனுக்குக் கொடுப்போம். அவன் தன் சுய சித்தத்தினால் அநேக தந்திரோபாயங்களைச் சேர்த்துக்கொண்டு பாவஞ்செய்வான்; அவன் செய்தபாவத்தால் உலகமெங்குமுள்ள மனுஷர்களுக்குப் பாவமும், சர்வலோகத்திலும் சாபமும் நிறைந்துபோகும்; அப்போது என்னசெய்வோம்" என்று தமது திருவுள்ளத்தில் ஆலோசனைசெய்தார். அவர் பேரொளியாயிருப்பதால், பிதாவின் தத்துவத்தில் தம்முடைய நீதியின்படி தண்டித்து, உலகம் முழுவதையும் அழித்து, சர்வநாசஞ் செய்துவிடவேண்டியதுவரும்; ஏனென்றால் பிதாவாகியதேவன், பக்ஷிக்கிற அக்கினியாயிருக்கிறாரென்று வேதம் சொல்லுகிறது. (எபி: 12. 29.). அவர் மகா பரிசுத்தமுள்ள அரூபியாயிருப்பதால்,

ஆவியின் தத்துவத்தில் நித்திய தண்டனைக்குரிய நியாயத் தீர்ப்புக்குட்படுத்துகிறவர்; ஏனென்றால் பரிசுத்தாவிக்குவிரோதமான எந்தப்பாவமும் இம்மையிலும் மறுமையிலும் மன்னிக்கப்படமாட்டாது என்று வேதம் திட்டமாய்க் கண்டிக்கிறது. (மத்தேயு: 12. 32; மாற்கு: 3. 28, 29.) ஆகையால் அவர் பிதாவின் தத்துவத்திலும், ஆவியின் தத்துவத்திலும், பாவத்தினிமித்தம் வரக்கூடாது. அவர் சர்வலோகங்களும் அறியவும், காணவும் முடியாத ஒளிக்குள் ஒளி மாமிசமாயிருக்கிறதாலும் (பிலிப்பி: 2. 6; கொலொ: 1. 15; வெளி: 19. 13; எபி: 1. 2, 3; 1 கொ: 2. 6, 7.) சமாதானப்பிரபு (எசா: 9. 6.) மத்தியஸ்தர் (1 தீமோ: 2. 5, 6.) இரக்ஷகர் என்றும் அவரே அழைக்கப்படுகிறபடியாலும், அருள் நிறைந்த அன்போடு இரக்கசித்தங்கொண்டு தமது தெய்வீக இலக்ஷணத்தை வெளிப்படுத்தவும் (யோவான்: 3. 16.) பாவங்களுக்காக குமாரதத்துவத்தில் மனுஷனாக வரவும், சித்தம் கொண்டார் மனுஷனான கிறிஸ்து இயேசுவே அவர். அவரே நித்திய தேவன். (ரோமர்: 9. 5)

**சீஷன்:**—உலகம் உண்டாக்கப்பட்டபின் மனுஷர் பவாஞ் செய்வார்களென்று தேவன் தமது திருவுள்ளத்தில் அறிந்திருந்ததாகத் தெரிவித்தீர்களே! அப்படி அவருக்குத் தெரிந்திருந்தும் அவர் உலகத்தையும் மனுஷரையும் என் சிருஷ்டித்தார்? அப்படி சிருஷ்டித்ததுமல்லாமல் அவர்கள் பாவம் செய்தார்களென்று அவர்களைத் தீர்ப்பு செய்து தண்டிக்கிறது நியாயமா?

**குரு:**—தேவன் உலகத்தையும் அதின் சர்வசிருஷ்டிகளையும் உண்டாக்கி, வெறும் மனுஷனாகிய உன் கையில் ஒப்புக்கொடுத்து, அதை ஆண்டுகொள்ளும்படி சுயாதீன சித்தத்தையும், அவருடை நீதிக்குரிய சட்டத்தையும், கொடுத்தார். பரலோகத்திலுள்ள தேவதூதர்களுக்கு உனக்குக்கொடுத்திருக்கிறதைப்போல், தேவசாயல், தேவரூபம், தேவாவியைக் கொடுத்தார் என்றுவது, தம்மைப்போல நித்தியத்திலிருக்கும்

படி ஜீவகனியைக் கொடுத்தார் என்றுவது எவ்வித சாஸ்திரங்களிலும் வேதத்திலும் சொல்லப்படவில்லை. முன் சொன்னவைகள் முழுமையும் உனக்குமட்டும் கொடுத்திருக்கிறார். சகலத்தையும் கொடுத்ததேவன், பாவம் ஒன்று மாத்திரம் உனக்குக் கொடுக்கவில்லை. அவருடைய மகத்துவத்தின் மகிமையைப் பெற்றுக்கொண்ட நீயோ பாவத்தை உன் சுய சித்தத்தினால் செய்து, நீயே உன்னை கெடுத்துக்கொண்டிருக்க அவரை இப்படிக்கேள்விகேட்க நீ யார்?

(யாக்கோபு: 1. 13-15.) சோதிக்கப்படுகிற எவனும் நான் தேவனால் சோதிக்கப்படுகிறேன் என்று சொல்லாதிருப்பானாக. தேவன் பொல்லாங்கினால் சோதிக்கப்படுகிறவரல்ல, ஒருவனையும் அவர் சோதிக்கிறவருமல்ல. அவனவன் தன் தன் இச்சையினாலேயே இழுக்கப்பட்டு சிக்குண்டு சோதிக்கப்படுகிறான். பின்பு இச்சையானது கர்ப்பம் தரித்து பாவத்தைப் பிறப்பிக்கும். பாவம் பூரணமாகும்போது மரணத்தைப் பிறப்பிக்கும்.

அவர் சர்வத்தையும் உண்டாக்குமுன் நீ எங்கே இருந்தாய்? இப்படிக் கேள்விகேட்க நீ அவரிடத்தில் முந்தி என்னத்தைக் கொடுத்திருந்தாய்? அவர் உன்னை உருவாக்குமுன் நீ யார்?

யோபு: 38-ம் அதிகாரத்தைப்பார். யோபு: 38. 3, 4. இப்போதும் புருஷனைப்போல் இடைக்கட்டிக்கொள். நான் உன்னைக்கேட்பேன். நீ எனக்கு உத்திரவு சொல்லு. நான் பூமியை அஸ்திபாரப்படுத்துகிறபோது நீ எங்கேயிருந்தாய்? நீ அறிவாளியானால் அதை அறிவி. மிச்ச அதிகாரத்தை வாசித்துப்பார்.

யோபு: 38. 21. நீ அதையறியும்படி அப்போது பிறந்திருந்தாயோ? உன் நாட்களின் தொகை அவ்வளவு பெரிதோ?

**யோபு: 36. 23, 24.** அவருடைய வழியின் நியாயத்தை விசாரிக்கத்தக்கவன் யார்? நீர் அநியாயம் செய்தீர் என்று சொல்லத்தக்கவன் யார்?

நீ கேட்ட கேள்விகளுக்கு அடியில்கண்ட வேதவாக்கியங்களை அறிந்துகொள்.

**1 கொரி: 2. 14-16.** "ஜென்ம சுபாவமான மனுஷனோ தேவனுடைய ஆவிக்குரியவைகளை ஏற்றுக்கொள்ளான். அவைகள் அவனுக்கு பைத்தியமாகத் தோன்றும்; அவைகள் ஆவிக்கேற்ற பிரகாரமாய் ஆராய்ந்து நிதானிக்கப்படுகிறவைகளானதால் அவைகளை அறியவுமாட்டான். ஆவிக்குரியவன் எல்லாவற்றையும் ஆராய்ந்து நிதானிக்கின்றான். ஆனாலும் அவன் மற்றொருவனாலும் ஆராய்ந்து நிதானிக்கப்படான். கர்த்தருக்குப் போதிக்கத் தக்கதாக அவருடைய சிந்தையை அறிந்தவன்யார்?" ஆகவே அவருடைய திருவுள்ளத்தின் இரகசியத்தை அறிய மனுஷன் எம்மாத்திரம் (ரோமர் 11, 33-35; யோபு 11, 7-9.)

**சிஷன்:**—நீங்கள் போதித்த போதனையிலே, நன்மை தீமை யின்னதென்று நான் அறியக்கூடியவனென்றும், ஒன்றை வெறுக்கவும் ஒன்றை விரும்பவும் கூடிய சுயாதீன சித்தத்தை தேவன் எனக்குக் கொடுத்திருக்கிறார் என்றும் பாவத்தை என் சுய சித்தத்தினால் நானே செய்கிறேன் என்றும், இதனால் நியாயத்தீர்ப்புக்கு உட்படக்கூடியவனென்றும், தேவன் நீதியின்படியே என்னை நியாயந்தீர்க்கிறவரென்றும் அறிந்துகொண்டேன். தேவன் முத்தொழிலுள்ள ஒருவராயிருக்கிறார் என்று சொன்னீர்களே! அதின் விபரமென்ன?

**குரு:**—மூவர் ஒருவராகவும், ஒருவர் மூவராகவும் இருக்கும் ஒன்றான தேவனுடைய திருத்துவ இரகசியத்தைஎவனும் எளிதாய் அறிந்துகொள்ளக்கூடியதல்ல. அவருடைய ஆவியைப்பெற்ற ஆவிக்குரிய மனுஷன் தவிர வேறொருவனும்

இந்த இரகசியத்தை அறியவேமாட்டான்.

1 கோரி 2, 9-12. தேவன் தம்மில் அன்புகூருகிறவர்களுக்கு ஆயத்தம்பண்ணினவைகளை கண்காணவுமில்லை, காது கேட்கவுமில்லை. அவைகள் மனுஷனுடைய இருதயத்தில் தோன்றவுமில்லை. நமக்கோ தேவன் அவைகளை தமது ஆவியினாலே வெளிப்படுத்தினார். அந்த ஆவியானவர் எல்லாவற்றையும் தேவனுடைய ஆழங்களையும் ஆராய்ந்திருக்கிறார். மனுஷரிலுள்ள ஆவியேயன்றி மனுஷரில் எவன், மனுஷருக்குரியவைகளை அறிவான்? அப்படிப்போல தேவனுடைய ஆவியேயன்றி ஒருவனும் தேவனுக்குரியவைகளை அறியமாட்டான். நாங்களோ உலகத்தின் ஆவியைப் பெறாமல் தேவனால் எங்களுக்கு அருளப்பட்டவைகளை அறியும்படிக்கு தேவனிலிருந்து புறப்படுகிற ஆவியையே பெற்றோம்.

ஆகிலும் நீ நிதானித்து அறிந்துகொள்ளத்தக்கதாக சாதாரணமான ஒரு உதாரணத்தை தேவனுடைய சிருஷ்டிப்பைக்கொண்டே உனக்கு விளக்கிக்காட்டுகிறேன். சூரியன் ஒன்று; அதனுள் ஒளியிருக்கிறது; ஒளிக்குள் உஷ்ணமிருக்கிறது. இப்படி முப்பொருளாயினும் சூரியன் ஒன்றே. மனுஷனின் நினைவு, வார்த்தை, செய்கை இம்மூன்றும் ஒன்றித்திருப்பது போல, முத்தொழிலிலுள்ள அவர் ஒருவரே. பிதாவென்றால் அவருடைய திருவுள்ளம்; குமாரனென்றால் அவரிலிருந்து புறப்படுகிற வார்த்தை; ஆவியென்றால் அவருடைய செய்கை.

1 யோவா 5, 7-8:— பரலோகத்திலே சாட்சியிடுகிறவர்கள் மூவர். பிதா, வார்த்தை, பரிசுத்த ஆவி என்பவர்களே இம்மூவரும் ஒன்றாயிருக்கிறார்கள். பூலோகத்திலே சாட்சி

யிடுகிறவைகள் மூன்று. ஆவி, ஜலம், இரத்தம், என்பவைகளே. இம்மூன்றும் ஒருமைப்பட்டிருக்கிறது.

தேவன் சர்வலோகத்தின் பாவங்களையும் நிவர்த்தி செய்வதற்காக அனாதியில் தாமே ஆலோசனை செய்ததில் கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு என்னும் நான்கு திசைகளைக்குறிப்பிடும் கருவியாக பிரம்மச்சக்கரமாகிய சிலுவை († cross) என்னும் பிளானை (plan) ஏற்படுத்தி அதைக் கொண்டு இந்த நான்கு திசைகளிலுள்ள மனுஷர்களின் பாவங்களையெல்லாம் அந்தச் சக்கரத்தில் நிறைவேற்றப்படும் பிராயசித்த பலியினால் நிவர்த்தித்து இரக்ஷை செய்ய வேண்டுமென்பது அவருடைய சித்தமாயிருந்தது.

தேவன் வட்ட வடிவான உலகத்தை இரக்ஷிக்க வட்ட வடிவான பிளானை ஏற்படுத்தாமல், குறுக்குமறுக்கான சிலுவை († ) பிளானை ஏற்படுத்தவேண்டிய முகாந்தரம் என்னவென்றால்:—உலகம் என்று சொல்லப்பட்டது இந்தப்பிரபஞ்சத்தைப் பாவனையாகக் காட்டி இப்பிரபஞ்சத்தில் வசிக்கும் மனுஷனையே குறிக்கிறது. ஏனென்றால் மனுஷன் அந்தக் குறுக்கு மறுக்கான சட்டத்தின் மாதிரியாகவும், நாலு திசைப் பாவனையாகவும் உண்டாக்கப்பட்டிருக்கிறான். மேலும் முழு உலகமும் மனுஷனுடைய கூட்டுக்குள் அடங்கியிருக்கிறதென்று சத்தியவேதம் தெளிவாய்ச் சொல்லுகிறது.

**பிரசங்கி 3, 11.** அவர் சகலத்தையும் அதினதின் காலத்திலே நேர்த்தியாகச் செய்திருக்கிறார். உலகத்தையும் அவர்கள் உள்ளத்திலேயே வைத்திருக்கிறார். ஆதலால் தேவன் ஆதிமுதல் அந்தமட்டும் செய்து வரும் கிரியையை மனுஷன் கண்டு பிடியான். இதன் கருத்து நித்தியத்தையும் என்றிருக்கிறது.

இந்தச் சிலுவையை தெள்ளத்தெளிய குறிப்பிட்டுக் காட்டும் சாக்ஷிகள் மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் என்னும் நான்கு சுவிசேஷங்களே.

சீஷன்:—வார்த்தையினால் உலகங்களை யெல்லாம் சிருஷ்டித்தவர் சர்வசக்தியுள்ள நித்தியதேவன் என்று சொல்லுகிறீர்களே! அப்படியானால் அவர் வார்த்தையினால் சர்வலோகத்தின் பாவங்களும் மன்னிக்கப்பட்டு போகக்கடவது என்று சொன்னால் மன்னிக்கப்பட்டுப் போகுமே! அப்படியிருக்க சிலுவை யென்னும் பிர்மச்சக்கரத்தில் பாவங்களுக்காகப் பாடுபட்டு மரிக்கவேண்டிய தவசியமா?

குரு:—ஆம், அத்தியாவசியம். தேவன் நீதியும் மிகுந்த இரக்கமுமுள்ளவர். ஆகையால் தேவன் தமது நீதியின்படி பாவியைத் தண்டித்துத்தீர்ப்பு செய்கிறபோது, இரக்கமுமுள்ளவராகிய அவர் தம்முடைய இரக்கத்தின்படி பாவியை இரக்ஷிக்கவேண்டியதாயிருந்தபடியால். ஏதேனில் ஸ்திரிக்கு வாக்களித்தபடியே அவர் இந்த உலகத்தில் நம்மைப்போல் சிலுவைப் பாவனையாகிய மனுஷனாகப் பிறந்து பிர்மச்சக்கரம் என்னும் சிலுவையிலேயே பிராயசித்த பலியாகி, தேவனுக்கும், மனுஷனுக்கும் இடையிலிருந்த பாவம் என்னும் கொடிய பகையை நீக்கி, தேவனோடு மனிதனை ஒப்பரவாக்குவதற்காக பாடுபட்டு மரிக்கவேண்டியதவசியமாயிருந்தது. ரோமர் 8, 3.

கோலோ. 2, 13-15. உங்கள் பாவங்களினாலேயும், உங்கள் மாம்ச விருத்தசேதனமில்லாமையினாலேயும், மரித்தவர்களாயிருந்த உங்களையும் அவரோடுகூட உயிர்ப்பித்து அக்கிரமங்கள் எல்லாவற்றையும் மன்னித்து, நமக்கு எதிரிடையாகவும், கட்டளைகளால் நமக்கு விரோதமாகவுமிருந்த கையெழுத்தைக் குலைத்து, அதை நடுவில் இராதபடிக்கு எடுத்து, சிலுவையின்மேல் ஆணியடித்து துரைத்தனங்களையும், அதிகாரங்களையும் உரிந்து கொண்டு அவைகளின் மேல் சிலுவையிலே வெற்றி சிறந்தார்.

சீஷன்:—தேவன் அவர் உண்டாக்கின உலகத்தைப் பாதுகாக்கவேண்டி வானத்திலுள்ள ஒளிமண்டலங்களிலாவது

அல்லது பூலோகத்திலுள்ள வாசனை நிறைந்த அழகான புஷ்பங்களிலாவது நல்ல வெளிச்சமான பஞ்சலோகங்களிலாவது வரலாமே! இந்தப்பாவஜென்மியான ஸ்திரியின் வயிற்றில் உருவெடுத்து பிறக்கவேண்டிய தவசியமா?

குரு:—அத்தியாவசியம்; தேவசாயல், தேவரூபம், தேவாவி இவைகளை மனுஷனுக்குத் தேவன் கொடுத்து தம்மைப்போலுண்டாக்கினர். (ஆதி 1, 26; 2, 7). இதினல் அவர் தகப்பன் என்றும், நாம் பிள்ளைகளென்றும், விளங்குகிறதல்லவா?

**ஏசாயா** 63, 16. "தேவரீர் எங்கள் பிதாவாயிருக்கிறீர். கர்த்தாவே நீர் எங்கள் பிதாவும் எங்கள் மீட்பருமாயிருக்கிறீர். இது பூர்வகாலமுதல் உம்முடைய நாமம்" மனுஷன் பாவம் செய்து தேவசாயலை இழந்தவுடனே, ஏவாளுக்குத்தாம் ஸ்திரியினிடத்தில் பிறப்பதாக ஆதியில் வாக்குக்கொடுத்த தேவன், காலங்கள் நிறைவேரினபோது, மனுஷனின் எலும்பும், மாமிசமும், இரத்தமுமுடையவராக ஸ்திரியின் வயிற்றில் மனுஷருக்காக மனுஷனகப் பிறக்கவேண்டிய தவசியமாயிருந்தது.

திருஷ்டாந்தமாக: ஒருமாட்டின் சமீபத்தில் ஒரு குழந்தை நிற்கிறது. அதைப்பார்த்த ஒரு மனுஷன் "இந்த மாடுதான் இந்தக்குழந்தையைப் பெற்றது" என்கிருன். யார்தான் சம்மதிக்கக்கூடும்? இந்த வார்த்தை இயற்கைக்கு விரோதமல்லவா? இப்படியிருக்க, தேவன் தமது ரூபத்தின் படியும், தமது சாயலின்படியும் மனிதராகிய நம்மை தம்மைப் போலுண்டாக்கியிருப்பதால், நாம் எலும்பும், நரம்பும், மாம்சமும், இரத்தமுமுடையவர்களாயிருப்பதுபோல், நம்மை உண்டாக்கிய தகப்பனும் நம்மைப்போலவே வரவேண்டியதாயிருந்தது. ஆகையால் அவர் வேறெந்த சிருஷ்டிகளிலும் வரக்கூடாது. **எபி.** 2, 14-15 "பிள்ளைகள் மாம்சத்தையும் இரத்தத்தையுமுடையவர்களாயிருக்க, அவரும் அவர்களைப் போல் மாம்சத்தையும் இரத்தத்தையுமுடையவரானர்.

மரணத்திற்கு அதிகாரியான பிசாசானவனை தமது மரணத்தி ஞலே அழிக்கும்படிக்கும், ஜீவகாலமெல்லாம் மரணபயத்தி ஞலே, அடிமைத்தனத்திற்குள்ளானவர்கள் யாவரையும் விடு தலை பண்ணும்படிக்கும் அப்படியானர்."

சிஷன்:—அவர் சிலுவையில் பாடுபடவேண்டியதவசிய மென்றும், அவர் தம்மைப்போல் நம்மை உண்டாக்கினதால் அவர்நமக்குள் தான் தோன்றவேண்டுமென்றும்சொன்னீர்கள் மாற்கு 16, 16ல் விசுவாசமுள்ளவனுகி ஞானஸ்னனம் பெற் றவன் இரக்ஷிக்கப்படுவான்; விசுவாசியாதவனே ஆக்கினைக் குள்ளாகத் தீர்க்கப்படுவான் என்றும், யோவான் 3, 5ல் ஒருவன் ஜலத்தினுலும் ஆவியினுலும் பிறவாவிட்டால் தேவனு டைய இராஜியத்தில் பிரவேசிக்கமாட்டான் என்று மெய்யா கவே மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன், என்றும் சொல்லியிருக்கிறதே! கிறிஸ்து மனுஷ அவதாரமாகி சுமார் 2000 வருஷந்தானே ஆயிற்று. அதற்கு முன்னுன காலத்தி லுள்ளவர்களுக்கு கிறிஸ்துவின் பெயர், ஞானஸ்னனம், இராப் போஜனம் முதலியவைகள் தெரியாதே! இவர்கள் ஆக்கினைக் குள்ளாகவா தீர்க்கப்படுவார்கள்?

குரு:—அப்படியில்லை, கிறிஸ்துவின் நாமமும் நீ கேட்ட வைகளும் ஆதிமுதல் என்றென்றைக்கும் இருக்கின்றன. கிறிஸ்துவைப் பற்றிச்சொல்லுகிறேன்; கேள். கிறிஸ்துவே, முந்தியிருந்த உலகம், இப்போதிருக்கிற உலகம், இனி வரப் போகிற உலகம் இவைகளுக்கெல்லாம் திரிகால சம்பந்த திருத்துவனுன ஒளியுள்ள நித்திய தேவனுயிருக்கிருர். (எபிரேயர் 13, 8)

1 தீமோ. 6, 15-16. "அவரே நித்தியானந்தமுள்ள ஏக சக்ராதிபதியும், ராஜாதிராஜாவும், கர்த்தாதி கர்த்தாவும், ஒருவராய் சாவாமையுள்ளவரும், சேரக்கூடாத ஒளியில் வாசம் பண்ணுகிறவரும் மனுஷரில் ஒருவரும் கண்டிராத வரும் காணக்கூடாதவருமாயிருக்கிறவர்." "நான் அல்பாவும்,

ஒமேகாவும், ஆதியும் அந்தமும், முந்தினவரும் பிந்தினவரு மாயிருக்கிறேன்," என்று வெளி 22, 13ல் கிறிஸ்து தாமே திருவுளம்பற்றியிருக்கிறார்.

சீஷன்:—"சேரக்கூடாத ஒளியில் வாசம்பண்ணுகிற வரும், மனுஷரில் ஒருவரும் கண்டிராதவரும், காணக்கூடாத வருமாயிருக்கிறவர்" என்றால், மனுஷர் எப்படித்தான் அவரைக்காணக்கூடும்?

குரு:—உலகங்களிலுள்ள ஒளிகளெல்லாம் மாயஒளி, அவைகள்முன் தோன்றிமறையும். கிறிஸ்துவோ நித்திய ஜீவ ஞானஒளியாயிருப்பதால் முன் சொன்ன ஒளிகளெல்லாம் இதில் சேரவும், ஒட்டவும் முடியாது. ஞானஒளியோ எல்லாருக்குள் எல்லாமாயும் (கொலோ 3, 11.) சர்வத்திலும் சர்வமயமாயும், நிறந்தறவஸ்துவாயும், மனுஷருக்கு உயிருக் குள் உள் ஒளியாயும் நின்று பிரகாசிக்கிற சர்வ சத்தியுள்ள சுயம்பிரகாசமாயிருக்கிறவர்.

மனுஷனால் 'காணக்கூடாதவர்' என்றால்: உனக்குள் உயிர் இருக்கிறதல்லவா? உன் உயிரை எனக்குக்காட்டு என்று ஒருவன் சொன்னால், நீ காட்டக்கூடுமா? அல்லது உனக்குள் உயிரில்லை என்றாவது சொல்ல முடியுமா? அப்படி யாவரும் சொல்ல முடியாததுபோல, அவரைக் காணவேண்டு மானால் அவருடைய சத்தியத்தைக்கொண்டு ஆவிக்குள் ஆவி யாய் யாரார் பார்க்க விரும்புகிறார்களோ, அவர்களுக்கு அவர் காணப்படுவார். மற்றபடியாரும் அவரைக்காணமுடியாது.

1 கொரி 2-9. தேவன் தம்மில் அன்புகூறுகிறவர்களுக்கு ஆயத்தம் பண்ணினவைகளைக் கண்காணவுமில்லை; காது கேட்கவுமில்லை; அவைகள் மனுஷனுடைய இருதயத்தில் தோன்றவுமில்லை. நமக்கோ தேவன் அவைகளைத் தமது ஆவியினாலே வெளிப்படுத்தினார்.

**சீஷன்:**—எல்லாச்சட்டதிட்டங்களும் கிறிஸ்துவுக்குள் அடங்கியிருக்கிறதென்றும், அது எல்லாருக்குள்ளும் என்றென்றைக்கும் இருக்கிறதென்றும் விளங்குகிறதே! அப்படியானால், வானத்திலிருந்து இரங்கின வேதமாகிய பத்துக் கற்பனைகளை மோசேயுக்கு இடையில் கொண்டுவந்து கொடுத்த காரணம் என்ன ?

**குரு:**—தேவன் ஆதாமுக்குத் தம்முடைய நியாயப் பிரமாணச் சட்டதிட்டங்களை யெல்லாம் அவன் நாசியிலூதி, அவனுடைய மனசாக்ஷிப்பலகையில் சர்வமும் அமைத்து வைத்து, "நீ தொடவும் புசிக்கவும் வேண்டாம்" என்ற வெளியரங்கமான சட்டத்தையும் ஆதியிலேயே கொடுத்தார். நியாயப்பிரமாணமென்றால் தேவனுடையநீதியான ஒரு வார்த்தை அல்லது கட்டளை என்று அர்த்தமாகும். இந்தப் பிரமாணத்தை ஆதாமுக்குள் பதித்துவைத்ததுமல்லாமல் வெளிப்படையாகவும் கொடுத்தார் ஆகையால் வேதப்பிரமாணம் இடையில் வந்ததல்ல. மனுஷவுர்ப்பத்திக்குள்ளேயே நியாயப்பிரமாணமாகிய வேதம் அமைந்திருக்கிறபடியால் நியாயத்தீர்ப்புவரையிலும் இது எல்லாருடைய மனசாக்ஷிக்குள்ளுமிருக்கிறது. இந்த நியாய சட்டத்தை ஆதாம் தன் சுயசித்தத்தினால் மீறிப் பாவம் செய்து தேவசாயலை இழந்து, தன்னையும் தலைவனையு மறியாமல் போனபடியால் பின்காலங்களில் தேவன் மோசேக்கு கற்பலகைகளில் தமதுகையினால் எழுதி, வெளியரங்கமாயும் கொடுத்தார். (மனசாக்ஷிப்பலகை 2 கொரி 3, 3) ஆகையால் நியாயத்தீர்ப்பில் ஒருவனும் போக்குச் சொல்ல இடமில்லை. (ரோமர் 2, 15-16.)

**சீஷன்:**—எல்லாருடைய மனசாக்ஷிக்குள்ளும் வேதத்தை எந்த விதமாய் அமைத்து வைத்திருக்கிறார் ?

**குரு:**—தேவனுடைய சத்தியம் எதிலிருக்கிறதென்று பார். உபா 30, 11-14. "நான் இன்று உனக்கு விதிக்கிற கட்டளை உனக்கு மறைபொருளுமல்ல; அது உனக்குத் தூர

மானதுமல்ல. நாங்கள் அதைக்கேட்டு அதின்படி செய்யும் பொருட்டு எங்கள் நிமித்தம் வானத்திற்கு ஏறி, அதை எங்களுக்குக் கொண்டுவருகிறவன் யார் என்று நீ சொல்லத் தக்கதாக அது வானத்திலுள்ளதுமல்ல; நாங்கள் அதைக் கேட்டு அதின்படி செய்யும்பொருட்டு எங்கள் நிமித்தம் சமுத்திரத்தைக்கடந்து அதைக் கொண்டுவருகிறவன் யார் என்று நீ சொல்லத்தக்கதாக அது சமுத்திரத்திற்கு அப் புறத்திலுள்ளது மல்ல. நீ அந்த வார்த்தையின்படியே செய்யும்பொருட்டு அது உனக்கு மிகவும் சமீபமாய் உன் **வாயிலும்** உன் **இருதயத்தி**லுமிருக்கிறது. **சங்கீதம்** 37, 31. அவனுடைய தேவன் அருளியவேதம் அவன் இருதயத்தி லிருக்கிறது.'' இன்னம் 2 கொரி 3, 3, ரோமர் 2, 16, பிரசங்கி 12, 13-14 இவைகளைப்பார்.

**சிஷன்**:—வேதம் என்பது என்ன?

**குரு**:—அது வெளிச்சம். (நீதி 6, 23) வேதமே வெளிச்சம் என்றிருக்கிறது.

**சீஷன்**:—வானமண்டலங்களிலும், பூலோக சிருஷ்டி களிலும் வெளிச்சமிருக்கிறது. இது எந்த வெளிச்சம்?

**குரு**:—இது அந்தகாரமாகிய காரிருளைப்போன்ற மன இருளை நீக்கும் 'பெரிய வெளிச்சம்.'

**மத்தேயு** 4, 15. இருளிலிருக்கும் ஜனங்கள் பெரிய வெளிச் சத்தைக்கண்டார்கள்; மரண இருளின் திசையிலிருக்கிறவர் களுக்கு வெளிச்சம் உதித்தது.

**சீஷன்**:—இவ்வுலகத்திலுள்ள வெளிச்சங்களெல்லாம் அற்பசொற்பமான வெளிச்சம். இந்தவுலகமுழுவதையுமிழுக் கத்தக்க வெளிச்சம் சூரியன். அதைப்பார்க்கிலும் இந்த வெளி ச்சம் பெரிதா? சூரிய வெளிச்சமும் மற்ற வெளிச்சங்களும்

தோன்றின இடங்களுண்டு. வேதம் என்ற பெரிய வெளிச்சம் தோன்றினயிடமெங்கே?

குரு:—2 கோரி 4, 6. இருளிலிருந்து வெளிச்சத்தைப் பிரகாசிக்கச்சொன்ன தேவன், இயேசுக்கிறிஸ்துவின் முகத்தி லுள்ள தமது மகிமையின் அறிவாகிய ஒளியைத் தோன்றப் பண்ணும்பொருட்டாக எங்கள் இருதயத்திலே பிரகாசித் தார். ஆதி. 1, 3. தேவன் வெளிச்சம் உண்டாகக்கடவது என்றார். வெளிச்சம் உண்டாயிற்று.

இதில் அறியவேண்டியது:—உலகங்களிலுள்ள ஒளிக ளெல்லாம் மாய ஒளியென்றும், அவைகள்முன்னல் தோன்றி மறையுமென்றும், ஞான ஒளியோ கிறிஸ்துவென்றும், உலக முண்டாவதற்கு முந்தி, தண்ணீரும் காரிருளும் கலந்திருக்கும் போது, இவரேயிருந்து, இவர் முகத்தில் தோன்றிய வெளிச் சமே வேதமென்றும், சத்தியயென்றும், ஜீவ ஒளியென்றும், இது மனுஷருடைய இருதயத்தில் உயிருக்குள் உள்ளொளி யாயிருந்து ஆத்துமாக்களை உயிர்ப்பிக்கிற சர்வ சக்தியுள்ள ஞான ஒளியென்றும் 'அவர் நமக்கு அருளிய சத்தியத்தின் மூலமாய்த் தெளிவாய்விளங்குகிறதல்லவா? இதினல் கிறிஸ்து நித்தியா நித்தியமாயிருக்கிற தேவனென்று குறிக்கிறது.

சீஷன்:—மோசேக்குப்பிரமாணத்தை வெளியரங்கமாய் எழுதிக்கொடுக்குமுன்னிருந்த ஜனங்கள், தற்காலத்தில் கிறிஸ் துவின் நாமத்தையும் அவரது சட்டதிட்டங்களையும் குறித் துக்கேள்விப்படாத மிலேச்சரான மலைவாசிகள், தீவாந்தரவா சிகள், தேசவாசிகளான சில அறிவீனர்கள் இவர்களுக்கு எழுத்துப்பிரமாணமாய்க் கொடுக்காமல், எப்படித்தம்மையும் தமது பிரமாணத்தையும் வெளிப்படுத்தினர்? அவர்கள் எந்த விதமாய்க் கண்டு கொண்டார்கள்?

குரு:—இதின் விபரம் சொல்லுகிறேன் கேள். ரோமர் 1, 19-20. தேவனைக்குறித்து அறியப்படுவது அவர்களுக்குள்

ளே வெளிப்பட்டிருக்கிறது. தேவனே அதை அவர்களுக்கு வெளிப்படுத்தியிருக்கிறார். எப்படியென்றால் காணப்படாதவைகளாகிய அவருடைய நித்தியவல்லமை, தேவத்வம் என்பவைகள் உண்டாக்கப்பட்டிருக்கிறவைகளினாலே, உலகம் உண்டானது முதற்கொண்டு தெளிவாய்க்காணப்படும். ஆகலால், அவர்கள் போக்குச்சொல்ல இடமில்லை என்றிருக்கிறது.

இதுவே இயற்கைப் பிரமாணம், தேவன் எல்லாருக்கும் இப்பிரபஞ்சத்தை ஒரு பெரிய புஸ்தகமாகவும், அதிலுள்ள சர்வசிருஷ்டிகளையும் எழுத்துக்களாகவும் அவனவன்மனசாக்ஷியே பள்ளிக்கூடமாகவும், அவன் ஆத்துமாவே மாணாக்கனாகவும் வைத்து, அவர் மனுஷனுக்குள்ளூதிக்கொடுத்த ஆவியே விவேகமாகிய ஞானமென்னும் குருவாகவுமிருந்து, சிருஷ்டிகர்த்தா ஒருவர் உண்டென்று, இயற்கையாய் அவைகளைக் கொண்டு போதித்துக்கொண்டிருக்கிறார். நன்மை தீமை இன்னதென்று பகுத்தறிந்துகொள்ளும்படிக்கான சுயாதீன சித்தத்தின் உணர்வையும் அவர்கள் மனசாக்ஷியில் அவர் பதித்து வைத்திருக்கிறபடியினால் அவர்கள் எந்த விஷயத்திலும் போக்குச்சொல்லயிடமில்லை. ஆகையால் அவர்கள் தங்கள் மனதிலே அவரை சிந்தித்துத்துதி செலுத்தாவிட்டால் இயற்கைப்பிரமாணத்தின் படி தண்டிக்கப்படுவார்களென்பது நிச்சயம்.

(2) **ரோமர் 2, 14-16.** அன்றியும் நியாயப்பிரமாணமில்லாத புறஜாதிகள், சுபாவமாய் நியாயப்பிரமாணத்தின்படி செய்கிறபோது, நியாயப்பிரமாணமில்லாத அவர்கள் தங்களுக்குத்தாங்களே நியாயப்பிரமாணமாயிருக்கிறார்கள். அவர்களுடைய மனசாக்ஷியுங்கூட சாக்ஷியிடுகிறதினாலும், குற்றமுண்டு குற்றமில்லையென்று அவர்களுடைய சிந்தனைகள் ஒன்றையொன்று தீர்க்கிறதினாலும், நியாயப்பிரமாணத்துக்கேற்றகிரியை தங்கள் இருதயங்களில் எழுதியிருக்கிறதென்று காண்பிக்கிறார்கள். என் சுவிசேஷத்தின்படியே, தேவன் இயேசுகிறிஸ்துவைக்கொண்டு மனுஷருடைய அந்தரங்கங்களைக்குறித்து

நியாயத்தீர்ப்பு கொடுக்கும் நாளிலே இது விளங்கும்.

இதுவேசிருஷ்டிப்பின் பிரமாணம். சிருஷ்டிப்பிரமாணத்தின்படி சாஸ்திரங்களைக்கற்றவர்களும், ஞானிகளும் உலக சிருஷ்டிப்புகளின் மூலமாய் தேவனொருவர் உண்டென்று அறிந்திருந்தும், அவர்கள் வாயினால் அவரைத்துதிக்காமலும், தங்கள் இருதயத்தில் அவரைப்புகழாமலும்: "இந்தப்பிரமாணம் எங்களுக்குரியதல்ல, எங்களுக்கு வேதம் தெரியாது, கிறிஸ்து தேவனல்ல" என்று சொல்லி, தங்கள் இருதயத்தைக் கடினப்படுத்திக்கொண்டால் தண்டனைக்குத்தப்பிக் கொள்ளமாட்டார்கள்.

(3) ரோமர் 7, 1. "நியாயப்பிரமாணத்தை யறிந்தவர்களுடன் பேசுகிறேன்." இதுவே அருள் பிரமாணம். அருள் பிரமாணத்தின்படி யூதர்களானாலும். கிறிஸ்தவர்களானாலும், இரக்கம்பெறாமல் தண்டனைக்குட்படுவார்கள். எப்படியெனில்: முன்சொன்ன இயற்கைப்பிரமாணம் அல்லது கிருஷ்டிப் பிரமாணத்தின்படி முன்சொல்லப்பட்டவர்கள், நியாயத்தீர்ப்பில் யாதொருபோக்குச்சொல்லி தப்பிக்கொள்ள முடியாதென்று அறிந்தோமே; முன்சொன்ன இரண்டு பிரமாணங்களும் இவர்கள் மனசாக்ஷிக்குள்ளிருக்கிறதுமட்டுமல்ல; இவர்கள்வாயிலும் வேதமிருக்கிறது; இவர்கள் கைகளிலும் கொடுக்கப்பட்டிருக்கிறது; இவர்கள் இன்னம் உணர்வடையும்படிக்கு போதிக்கும்படியான ஏராளமான ஆட்கள் கொடுக்கப்பட்டும், அவர்களால் போதிக்கப்பட்டுமிருக்க, தங்கள் இருதயங்களைக் கடினப்படுத்தி, உலகக்காரியங்களினால் பலவாறாயிழுப்புண்டு தங்களைக் கெடுத்துக் கொள்ளுகிறவர்களானால் தண்டனைக்கு எப்படித் தப்பித்துக்கொள்ளுவார்கள். எபி 10, 28-29, மோசேயின் நியாயப்பிரமாணத்தைத் தள்ளுகிறவன் இரக்கம் பெறாமல் இரண்டு மூன்று சாக்ஷிகளின் வாக்கினாலே சாகிறானே தேவனுடைய குமாரனைக்காலின்கீழ் மிதித்து, தன்னைப் பரிசுத்தம்செய்த உடன்படிக்கையின் இரத்தத்தை அசுத்தம் என்று எண்ணி, கிருபையின் ஆவியை நிந்திக்கிறவன்

எவ்வளவு கொடிதான ஆக்கினைக்குப் பாத்திரவானயிருப்பான் என்பதை யோசித்துப்பாருங்கள்.

**சீஷன்:**—கிறிஸ்து மனித அவதாரமாய் வருகிறதற்கு முன் ஞானஸ்நானம் இருந்ததா ?

**குரு:**—ஆம்; சில சம்பவங்களைக்கொண்டு சுட்டிப் பொருளாய்க் காட்டி ஆவிக்குறிய வழியாக ஞானஸ்நானம் நடந்துகொண்டே வந்திருக்கிறது. 1 பேதுரு 3, 20-21. "அந்தப்பேழையிலே சிலராகிய எட்டுப்பேர்மாத்திரம் பிரவேசித்து ஜலத்தினலே காக்கப்பட்டார்கள். அதற்கு ஒப்பனையான ஞானஸ்நானமானது மாம்ச அழுக்கை நீக்குதலாயிராமல் தேவனைப்பற்றும் நல் மனசாக்ஷியின் உடன்படிக்கையாயிருந்து, இப்பொழுது நம்மையும் இயேசுக்கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலினல் இரக்ஷிக்கிறது" 1 கொரி 10, 2-5. எல்லாரும் மோசேக்குள்ளாக மேகத்தினலும் சமுத்திரத்தினலும் ஞானஸ்நானம் பண்ணப்பட்டார்கள். எல்லாரும் ஒரே ஞான போஜனத்தைப் புசித்தார்கள். எல்லாரும் ஒரே ஞானபானத்தைக் குடித்தார்கள். எப்படியெனில் அவர்களோடே கூடச்சென்ற ஞானக்கன்மலையின் தண்ணீரைக் குடித்தார்கள். அந்தக்கன்மலை கிறிஸ்துவே."

**சீஷன்:**—ஒரு வார்த்தையினல் உலகத்தை உண்டாக்கின தேவன், அந்த வார்த்தையினலேயே ஒரு நிமிஷத்துக்குள் உலகத்தை அழிக்கக் கூடுமே! அப்படியிருக்க நோவா செய்த கப்பல் 120 வருஷம் தாமதித்த காரணமென்ன ?

**குரு:**—2 பேதுரு 3, 9 "தாமதிக்கிறர் என்று சிலர் எண்ணுகிறபடி கர்த்தர் தமது வாக்குத்தத்தத்தைக் குறித்துத்தாமதமாயிராமல் ஒருவரும் கெட்டுப்போகாமல் எல்லாரும் மனந்திரும்பவேண்டுமென்று விரும்பி, நம்மேல் நீடிய பொறுமையுள்ளவராயிருக்கிறர்." கப்பல் தாமதித்த காரணங்கள் மூன்று.

முதலாவது:- நோவாவின் விசுவாசம், பொறுமையைப் பரீக்ஷைசெய்யும் நோக்கமாகவும், இரண்டாவது:- ஜலத்தினழிவின் மத்தியில், ஜனங்கள் எப்படியாவது மனந்திரும்பி நோவாவின் வார்த்தையைக் கேட்டு கப்பலை நம்பவேண்டுமென்றும், தேவ கோபாக்கினைக்கு அவர்கள் தப்பிக்கொள்ளும்படி, அவர்களுக்கு எச்சரிப்பின் நோக்கமாகவும் தாமதித்தது. மூன்ருவது:- அதுபோல் இக்காலத்திலும், ஆவியின் பேழையாகிய கிறிஸ்துவும், இவ்வுலக அக்கினி சமுத்திரத்தின் அழிவிற்கும், தமது கோபாக்கினையின் நீதிக்குரிய முடிவிற்கும் ஜனங்கள் உட்பட்டு அழிந்துபோகாமல், மனந்திரும்பி தமக்குள் தப்பிக்கொள்ளும்படிக்கு, அவர்களுக்கு எச்சரிப்பின் நோக்கமாய், மத்தியஸ்த்தரும், சகாயரும், நீடிய பொறுமையுள்ளவருமாயிருந்து உலகத்தை அழிக்காமல், தாம் வருவதற்கு தாமதித்துக்கொண்டிருக்கிறுர். (2. பே: 3. 9.)

**சீஷன்:**—முன்பின் காலங்களிலுள்ள இரகசியங்களையும் உலக அழிவையும் தேவன் நோவாவுக்குத் தெரியப்படுத்தியிருந்தாரே! அப்படியிருக்கக் கர்த்தர் அவனை உள்ளே விட்டுக் கதவை அடைத்தார். (ஆதி: 7. 16.) என்று சொல்லும்போது, ஏதோ ஒரு சந்தர்ப்பமிருந்ததாகத்தெரிகிறதே! அது என்ன?

**குரு:**—எல்லா தேவ இரகசியங்களையும் நோவாவுக்குத் தெரிந்திருந்தபோதிலும, அழிவுநேரம் அவன் அறியாதிருந்தபடியால், தேவன் அவனை உள்ளேவிட்டுக் கதவை அடைத்தார். இரண்டாவது:- இந்தப்பேழையை உண்டுபண்ணிய ஆசாரிகள் அதைச்சுற்றிலும் நின்றிருப்பார்கள். அவர்களும் பேழைக்குள் நுழைந்துவிடுவார்களென்று கதவை அடைத்திருப்பார். மூன்ருவது:— தேவநம்பிக்கையற்ற அக்கிரமசிந்தையுள்ள அந்தப்பொல்லாத சந்ததியார் அழிவின்நேரத்தில் பேழைக்குள் பிரவேசித்து இந்தப்பரிசுத்தமுள்ள சந்ததியைக் கெடுத்துப்போடுவார்களென்று கதவை அடைத்தார்.

அப்படிப்போல் இக்காலத்திலும் கிறிஸ்தவ விசுவாசிகள் எல்லாரும், உலகத்தின் முடிவையும் அதற்குப்பின்வரும் கிறிஸ்துவின் மகிமையையும், தெளிவாய் ஆவிக்குள் கண்டும் கேட்டும் அறிந்துமிருந்தபோதிலும், அழிவின் நேரம் அவருடைய திருவுள்ளத்திற்குதெரியுமேயல்லாமல், மாம்ச சிந்தையுள்ள எவனும் அறியமாட்டான். மாற்கு. 13. 32. அந்த நாளையும் அந்த நாழிகையையும், பிதா ஒருவர்தவிர மற்றொருவனும் அறியான். பரலோகத்திலுள்ள தூதரும் அறியார்கள்; குமாரனும் அறியார்.

**சீஷன்:**—குமாரனும் அறியாரென்றால், கிறிஸ்துவுமறியாரென்றர்த்தமா?

**குரு:**—குமாரன் என்னும் பதம், முன் சொன்னபடி மாம்சதேகத்தை அல்லது பூரணமான வெறும் மனுஷனைக் குறிக்குமேயல்லாமல் ஆவிக்குரியமனுஷனாகிய கிறிஸ்துவைக் குறிக்காது. இதில் அறியவேண்டியது: கிறிஸ்துவின் ஆவி எவனிடத்திலில்லையோ, அவன் தேவமகிமையற்ற வெறும் மனுஷனாயிருப்பான். **ரோமர்.** 8. 9. தேவனுடைய ஆவி உங்களில் வாசமாயிருந்தால், நீங்கள் மாம்சத்திற்குட்பட்டவர்களாயிராமல் ஆவிக்குட்பட்டவர்களாயிருப்பீர்கள். கிறிஸ்துவின் ஆவியில்லாதவன் அவருடையவனல்ல. மாம்ச சிந்தையுள்ளமனுஷர் எல்லாரும் உலக அழிவின் முடிவை அறியமாட்டார்களென்று அர்த்தமாம்.

**சீஷன்:**—தேவவுத்திரவைப்பெற்ற நோவா, கப்பல் உண்டுபண்ணும் விதத்தை ஆசாரிகளுக்குச் சொல்லிக்கொண்டிருந்தானேயல்லாமல், இவன் அதைச்செய்தவனல்ல, ஆசாரிகள் 120 வருஷமாக அதிக பிரயாசப்பட்டுக் கப்பலை முடித்துக்கொடுத்துவிட்டு உலகஅழிவின் நேரத்தில் ஒருவனாவது கப்பலில் தப்பிக்கொண்டானென்று இல்லையே! இதின் இரகசியமென்ன?

**குரு:**—“உலகமுழுமையுமுள்ள மனிதஜாதியார் யாவரும்

செய்த பாவஅக்கிரமத்தின் கொடுமை தேவசந்நிதானத்திற்கு எட்டினதினுல், தேவகோபாக்கினே எழும்பி, உலகத்தை அழிக்கப்போகிற விஷயத்தைக் கர்த்தர் எனக்கு அறிவித்து அழிவின் மத்தியில் விசுவாசிக்சிக்கிறவர்களெல்லாரும், தப்புவித்துக்கொள்ளத்தக்கதாக ஒரு கப்பலே உண்டுபண்ணென்று எனக்குச்சொல்லியிருக்கிருர்" என்று அவர்களுக்கு அவன் பிரஸ்தாபப்படுத்தினதுபோல அவன்கைக்குள் வேலேசெய்த ஆசாரிகளுக்கும் விசேஷமாக சொல்லிவந்திருக்கிருன். அவர்களோ தங்கள் அக்கிரமசிந்தையுள்ள அவநம்பிக்கையினுல், நோவாவின் வார்த்தையையும் கப்பலேயும் நம்பாமல், தங்கள் வயிற்றுப் பிழைப்புக்காக வேலேசெய்ததால், அழிவின் நேரத்தில் அதில் தப்பிக்கொள்ள முடியாமல் போனுர்கள்.

அப்படிப்போல் இக்காலத்திலும், அக்கினிசமுத்திரத்தில் விசுவாசிகளேத் தப்புவிக்கக் காத்துக்கொண்டிருக்கிற, ஆவியின் பேழையாகிய கிறிஸ்துவை உயர்த்திக்காட்டும் கள்ளத்தீர்க்கதரிசிகள், கள்ள உபதேசிகள், கள்ளப்பிரசங்கிகள், கள்ளச்சாமியார்கள் முதலியவர்கள், பின்வரும் அபாயங்களே முன்னுல் சத்தியத்தின் மூலமாய்க் கண்டவர்கள் போல் மற்றவர்களுக்கு சாக்ஷி கொடுத்து, தாங்களே கிறிஸ்துவையும் அவருடைய சத்தியத்தையும் இருதயத்தில் பற்றிக்கொள்ளாமலும், இன்னதென்று அறியாமலும், வயிற்றுப்பிழைப்புக்காக தேவ இரகசியங்களேயெல்லாம் தாங்கள் அறிந்துகொண்டவர்கள்போல் போதிப்பார்களானுல், அழிவின் நேரத்தில் இவர்களும் தப்பிக்கொள்ள முடியாது.

"நோவாவின்காலத்தில் நடந்ததுபோல இக்காலத்திலும் நடக்கும்" என்று கிறிஸ்து இரக்ஷகர் தாமே திருவுளம்பற்றினுர் மத்தேயு 24, 37-39. அவர்களுடைய முடிவு அழிவு. அவர்களுடைய தேவன் வயிறு, பிலிப்பி 3, 19.

**சீஷன்**:—இந்தப்பரிசுத்தவானே அந்த அச்சுத்தமுள்ள சந்ததியார் அழிவின்நேரத்தில் போய்க்கெடுத்துவிடுவார்க

ளென்று தேவன் நோவாவை, உள்ளேவிட்டு கதவைஅடைத்தார் என்றுசொன்னீர்களே! அப்படியானல் தேவன்தாமே அசுத்தமான ஜீவஜெந்துக்களில் ஒவ்வொரு ஜோடு கப்பலுக்குள் பிரவேசிக்கக்கட்டளையிட்டாரே? இதின் அந்தரங்கமென்ன?

குரு:—லேவி: 10. 10. 11. பரிசுத்தமுள்ளதற்கும் பரிசுத்தமில்லாததற்கும், தீட்டுள்ளதற்கும், தீட்டில்லாததற்கும் வித்தியாசம் பண்ணும்படிக்கும், கர்த்தர் மோசேயைக் கொண்டு இஸ்ரவேல் புத்திரருக்குச்சொன்ன சகலபிரமாணங்களையும் அவர்களுக்குப் போதிக்கும்படிக்கும், இது உங்கள் தலைமுறை தலைமுறைதோறும் நித்திய கட்டளையாயிருக்கும் என்றார்.

பரிசுத்தமுள்ளது ஏழு ஜோடு என்பது தேவனுடைய பரிபூரணத்தின் நிறைவையும், அவருடைய பரிசுத்த திருச்சபைகளையும் குறிக்கும். அசுத்தமுள்ளது ஒரு ஜோடு என்று சொல்லும்போது, அவிசுவாசிகளையும், கள்ளப்போதகர்களையும், புறமதஸ்தர்களையும் குறிக்கும். மேலேசொன்ன இரண்டு எதிர்வகுப்புகளும் நோவாவின் பேழைக்குள்ளிருந்ததுபோல, பின்சொன்ன இரண்டு வகுப்பாரும் ஆவியின் பேழையாகிய கிறிஸ்துவுக்குள் கலந்தும் நிறைந்தும் முடிவு காலம்வரையிலும் இருப்பார்கள் எனக்கருத்தாம். இதில் நீ அறியவேண்டியவிபரம் சொல்லுகிறேன், கேள். முதலாவது:- அக்காலத்தில் கப்பல் ஜலத்துக்குள்ளிருந்தது. இரண்டாவது:- கப்பலுக்குள் நோவா இருந்தான். ஆகையால் தப்பிக்கொண்டான். ஆகிலும், ஜலம் கப்பலுக்குள் நுழையக்கூடிய ஒரு சிறு துவாரம் இருந்திருக்குமானல், கப்பலும், நோவாவும் அமிழ்ந்து காணமலே போவார்கள். அப்படிப்போல இக்காலத்திலும் நமது சரீரமாகிய கப்பல் உலகமாகிய சமுத்திரத்துக்குள்ளிருக்கிறது. நோவாவைப் போன்ற ஆத்துமாவோ கப்பலாகிய சரீரத்துக்குள்ளிருக்கிறது. இப்படியே இருக்குமானல் ஆத்துமா கெடமாட்டாது. சரீரமாகிய கப்

பலுக்குள் உலகமாகிய சமுத்திரம் நுழையத்தக்க ஒரு சிறு துவாரம் இருக்குமானால், உலகமாகிய சமுத்திரம் சரீரமாகிய கப்பலுக்குள் நுழைந்து சரீரத்தையும் ஆத்துமாவையும் கெடுத்துப்போடுமென்று அறிந்து கொள்.

சீஷன்:—ஆதி: 6. 18-ல் "உன்னுடனே என் உடன்படிக்கையை ஏற்படுத்துவேன்" என்று நோவாவுக்குத் தேவன் சொல்லுகிறாரே! இதின் இரகசியமென்ன?

குரு:—உடன்படிக்கை என்பது தேவநீதியின் சட்டத்துக்குரிய அவருடைய வாக்குத்தத்தத்தை மனுஷனிடத்திலொப்புவித்தலெனக்கருத்தாகும்.

சீஷன்:—உடன்படிக்கை இவனுக்குத்தான் கொடுக்கப்பட்டதா? அதற்கு முன் யாரிடத்திலாவது அதைக் கொடுத்திருந்தாரா?

குரு:—ஆம்; துவக்கத்திலேயே தேவன் ஆதாமுக்குத் தமது வாக்குத்தத்தத்தின் உடன்படிக்கையைக் கொடுத்திருந்தார்.

சீஷன்:—அதை எதற்காகக் கொடுத்தார்?

குரு:—"நன்மை தீமை அறியத்தக்க விருக்ஷத்தின் கனியை நீ தொடவும் புசிக்கவும் வேண்டாம்" என்ற தேவசட்டத்தை, ஆதாம் சுயசித்தத்தினாலே மீறி, பறித்துப் புசித்து பாவம்செய்து, தேவமகிமையற்றவனாகி, பாவம், சாபம், மரணத்திற்குள்ளாகி, தேவநீதியின்படி இவனும் உலகம்முழுமையும் ஒரு நொடிக்குள் அழியவேண்டிய சமயத்தில், தேவன் இரக்க சித்தங்கொண்டு "ஸ்திரீயின் வித்தானவர் பிறப்பார்; உன் தலையை நசுக்குவார்" என்று சாத்தானுக்கு சாபத்தையும், ஏவாளுக்கு வாக்குத்தத்தத்தையும் கொடுத்து, ஆதாமைக் கூப்பிட்டு "உலகம் உன் நிமித்தம் சபிக்கப்பட்டிருக்கும்"

என்று சொன்னார்.

சீஷன்:—"உன் நிமித்தம் உலகம் சபிக்கப்பட்டிருக்கும்" என்று தேவன் ஆதாமுக்குச்சொன்னாரே! ஏவாள் அல்லவா பாவம் செய்தாள்? இவன் அவளிடத்தில் வாங்கிச்சாப்பிட்டதால், அவளையும் சேர்த்தல்லவா சபித்திருக்கவேண்டும்? அப்படியிருக்க பாவஞ்செய்தவளை விட்டுவிட்டு "உலகம் உன் நிமித்தம் சபிக்கப்பட்டிருக்கும்" என்று இவனை மாத்திரம் கூப்பிட்டுச் சொல்லுகிறாரே? இது நியாயமா?

குரு:—இது சரியான நியாயந்தான். ஆதி: 2. 16-18-ல் "தேவனாகிய கர்த்தர் மனுஷனை நோக்கி, 'நீ, தோட்டத்தி லுள்ள சகல விருக்ஷத்தின் கனியையும் புசிக்கவே புசிக்கலாம்; ஆனாலும் நன்மை தீமை அறியத்தக்க விருக்ஷத்தின் கனியைப் புசிக்கவேண்டாம்; அதை நீ புசிக்கும் நாளில் சாகவே சாவாய்' என்று கட்டளையிட்டார்" என்று சொல்லியிருக்கிறது. ஆகையால் தேவநீதிக்குரிய சட்டதிட்டங்களையெல்லாம் ஆதாமுக்குக் கொடுக்கும்போது, ஏவாள் இல்லையென்றும், ஆதி: 2. 21, 22-ல் சொல்லியிருக்கிறபடி ஆதாமுக்குத் தேவன் கட்டளை கொடுத்தபின் ஏவாள் உண்டாக்கப்பட்டாளென்றும் தெளிவாயிருக்கிறது.

முதலாவது இந்தச் சட்டம் கொடுக்கப்படும்போது ஏவாள் இல்லாததாலும், அதை ஆதாமுக்கு கொடுத்திருந்ததாலும் நீ என்னும் பதத்தின்பேரில் "உலகம் உன்நிமித்தம் சபிக்கப்பட்டிருக்கும்" என்று தேவன் நீதியின்படியே சபித்தார்.

இரண்டாவது தாம் சபித்த சாபத்துக்குள் தாம் வருவது நீதியல்லாததால் "ஸ்திரியின் வித்தானவர் பிறப்பார்; உன் தலையை நசுக்குவார்" என்று சாத்தானுக்கு சாபத்தையும், ஸ்திரிக்கு வாக்குத்தத்தையும் கொடுத்து, ஏவாளை நீக்கினார்.

சீஷன்:—சாத்தான் ஆதாமை விட்டுவிட்டு ஏவாளைச் சோதித்த நோக்கமென்ன?

குரு:—"நீங்கள் பலுகிப்பெருகி பூமியை நிறப்புங்கள்" என்று ஆதாமுக்கும் ஏவாளுக்கும் தேவன் சொன்ன வார்த்தையின்படி, உலகமனுமக்கள் யாவரும், ஸ்திரியினிடத்தில் தோன்ற வேண்டுமென்பதைச் சாத்தான் அறிந்து நச்சுவித்தை (நச்சுவித்து என்பது:— உலகம், பொய், மாயை, மாம்சம், பாவம், மரணம், அழிவு) அவளிடத்தில் தான் இயற்கையிலேயே ஊன்றிவைத்துவிட்டால், நியாயத்தீர்ப்பு வரையிலும் (1) இவள் மாயையில் மாமிசத்திற்குரிய பிள்ளைகளைப் பெறுவாள். (2) தேவகோபமும் மாறாது. (3) பாவமும் அறாது (4) அப்போது இந்தவுலகத்தார் எல்லாரையும் மரணத்துக்குள்ளாக்கி நரகத்தில் தள்ளி அடைத்துக்கொள்ளலாம் என்று எண்ணங்கொண்டு ஸ்திரியை சோதித்தான். ஆனாலும் திரிகால சம்பந்தமுள்ள நித்தியாநித்தியத்திற்குள் வாசம் செய்யும் வார்த்தையாகிய தேவன், தமது அனாதி தீர்மானத்தில் இவைகளை யெல்லாம் அறிந்திருந்தபடியால் ஏவாள் பாவம் செய்தவுடனே, தோட்டத்துக்கு வந்து சாத்தானுக்குச் சாபத்தையும் ஏவாளுக்குள் வாக்குத்தத்தமாகிய சத்தியவித்தையும் ஊன்றிவைத்தார். ரோமர் 5, 20. பாவம் பெருகினயிடத்தில் கிருபை அதிகமாய்ப் பெருகிற்று. சத்திய வித்து என்பதற்கு பிர்ம வித்து என்பதாம்.

இருவரும் பாவம் செய்திருக்க, 'பூமி உன் நிமித்தம் சபிக்கப்பட்டிருக்கும்' என்று ஒருவனைக்குறித்துச் சொல்லும்போது, இன்னொரு ஆளினிமித்தம் ஆசீர்வதிக்கப்படுமென்ற இரகசிய சம்பந்தமான ஆவிக்குள்ளான கருத்து அதில் அமைந்திருக்கிறது. 'அந்த வார்த்தை மாம்சமாகி' (யோவா 1, 14) என்றால்: ஏதேனில் ஏவாளுக்குக்கொடுத்த தேவவாக்குத்தத்தமாகிய வார்த்தை யென்னும் கிறிஸ்து ஸ்திரியின் சத்திய வித்தாகத்தோன்றி (1 யோவா 3, 8–9) மாம்சசம்பந்தமாய் பிரபஞ்சத்தில்வெளியரங்கமானார். இதுதான் தேவன், ஆதாம் ஏவாளோடு துவக்கத்தில் செய்த உடன்படிக்கை. இந்த உடன்படிக்கையை பிற்காலத்தில், ஆதி 6,18ல் சொல்லியபடி தேவன் நோவுக்குப் புதிப்பித்துக்கொடுத்தார். புதுப்பித்துக்

கொடுத்த இந்த உடன்படிக்கையின் தெய்வ இரகசியம் ஆதி 8, 21ல் சொல்லிருக்கிறபடி 'இனி நான் **மனுஷன்** நிமித்தம் பூமியைச் சபிப்பதில்லை' என்னும் வாக்கியத்தில் அடங்கியிருக்கிறது. 'மனுஷன் நிமித்தம்' என்னும் வார்த்தை பன்மையில் சொல்லப்படாமல் ஒருமையில் சொல்லப்பட்டிருக்கிறபடியினால் 'உலகமனிதனைக்குறிக்காமல், வானத்திலிருந்து இறங்கிவந்து ஆவிக்குரிய மனுஷனாகிய கிறிஸ்துவையே குறிக்கிறது. எப்படியெனில் முன் ஆதாமை நோக்கி "பூமி **உன் நிமித்தம்** சபிக்கப்பட்டிருக்கும்" என்று சொல்லப்பட்ட தேவ சாபமானது உலக மெங்குமுள்ள சகல மனிதரையும் குறிக்குமல்லவா? இப்போதோ நோவாவை நோக்கி, 'உன்நிமித்தம்' என்று சொல்லாமல், 'நான் இனி ம னு ஷ ன் நிமித்தம் பூமியைச்சபிப்பதில்லை' என்று சொல்லுகிறார். 'மனுஷன்' என்னும் பதம் மனிதர்களுடைய பாவங்களினிமித்தம், ஏவாளுக்கு வாக்களித்து மனிதஅவதாரமாய் வருவேனென்று சொன்ன, பாவத்திற்கும் சாபத்திற்கும் உள்படாத அன்பின் சொரூபியாகிய வார்த்தையென்னும் தேவகுமாரனை கிருஸ்துவையே விளக்கிக்காட்டுகிறது. இதுவே நோவாவுக்கு புதிப்பித்துக்கொடுத்த உடன்படிக்கையின் இரகசியம்.

**சீஷன்:**—இந்த உடன்படிக்கையை அ ப் பு ற ம் யாருக்குப் புதிப்பித்துக்கொடுத்தார்?

**குரு:**—ஆபிரகாமுக்கு புதிப்பித்துக்கொடுத்தார்.

**சீஷன்:**—வேதவாக்கியங்களில் 'நான் ஆபிரகாமின் தேவனும் ஈசாக்கின் தேவனும், யாக்கோபின் தேவனுமாகிய கர்த்தர்' (யாத்தி 3, 15.) என்று அநேக இடங்களில் வருகிறதே! அப்படியானால், இ வ ர் க ள் மூவருக்குந்தானா தேவனாயிருக்கிறார்? மற்றவர்களெல்லாருக்கும் அவர் தேவனல்லவா? சொல்லவேண்டுமானால், தேவன், 'நான் ஏனோக்கு எலியா மோசேயின் தேவனாகிய கர்த்தர்' என்று சொல்லக்கூடாதா? இம்மூவரைப்பார்க்கிலும், ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு, அவ்வளவு விசேஷித்தவர்களல்லவே! ஏனோக்கு தேவனோ

டே சஞ்சரித்து அவராலே எடுத்துக்கொள்ளப்பட்டான்; எலியா உலகமெங்கும் பறந்துதிரியும் மனுஷனுயிருந்து வானத்திலிருந்து இறங்கி வந்த அக்கினிக்குதிரைகள் பூட்டி வந்த இரதத்தில் ஏறிபரலோகத்திற்குப் போனான். (2 இராஜா 2, 11) மோசே வேதத்தை சீனாய் மலையில் பேரொளியாய் நின்ற தேவனுடைய கையிலே வாங்கினவன். இப்படிப்பட்டவர்களின் தேவனுயிருக்கிறேன் என்று தேவன் சொல்லவேண்டுமே! ஆபிரகாம் தன் மனைவியைச் சகோதரியென்று இரண்டு தரம் பொய் சொன்னான் (ஆதி 12, 18-19; 20,) ஈசாக்கும் தன் மனைவியைச் சகோதரி யென்று ஒரு தரம் பொய் சொன்னான் (ஆதி 26, 6-7.) யாக்கோபோ முழு எத்தன் (ஆதி 27, 19.) இப்பேர்ப்பட்டவர்களுக்கு தேவனுயிருக்கிறேனென்று கர்த்தர் சொல்லுவது மிகவும் ஆச்சரியமாயிருக்கிறதே இதின் விபரமென்ன?

குரு:—'நான் ஆபிரகாமின் தேவன்' என்று சொன்னதற்குக் காரணம்: ஆதி 12, 1-4ல் சொல்லியபடி 'நான் உனக்குக் காண்பிக்கும் தேசத்திற்கு போ' என்று தேவன் சொன்னபோது, நீர் யார்; எதற்காக எந்த தேசத்திற்குப் போகச்சொல்லுகிறீர்' என்று ஆபிரகாம் கேட்காமல், கீழ்படிந்து உடனே புறப்பட்டான். அவன் குடியிருந்த தேசத்து ஜனங்களும் அவன் குடும்பத்தாரும் அஞ்ஞான அருவருப்புகளுக்குட்பட்டிருந்தபோதிலும், அவன் மட்டும் அவைகளுக்கு விலகி தன்னை காத்துக்கொண்டான். தன் சிறு பிராயமுதல், தன்னை உண்டாக்கின தேவன் ஒருவரே என்று எண்ணி, ஆவிக்குள் தனித்தியானம் செய்து வந்த காலங்களில், தேவ தரிசனம் பெற்று, அவர் சத்தத்தை அடிக்கடி கேட்டு ஞாபகப்படுத்திக் கொண்டிருந்ததால், இச்சமயத்தில் தன்னை அழைக்கிறவர் இன்னாரென்றும் அவருடைய சத்தமிப்பேர்ப்பட்டதென்றும் அறிந்து, தாமதிக்காமல், உடனே கீழ்படிந்து புறப்பட்டான்.

இதனால் அறியவேண்டியதென்னவென்றால்:—என் சத்தத்திற்குச் செவிகொடுத்து சத்தியத்திற்குக் கீழ்படிகிற

வர்களெவர்களோ அவர்களுக்கெல்லாம் தேவனாயிருக்கிறேன் என்று காட்டும்படி நான் ஆபிரகாமின் தேவனாயிருக்கிறேன் என்று சொல்லியிருக்கிறார்.

சீஷன்:—அவர் ஈசாக்கின் தேவனாயிருப்பது எப்படி?

குரு:—ஆதி 21, 10-12ல் சொல்லியிருக்கிறபடி, ஆபிரகாமின் அடிமைப்பெண் ஆகார் பெற்ற பிள்ளையாகிய இஸ்மவேல், வாக்குத்தத்தத்தின் புத்திரனாகிய ஈசாக்குக்கு மூத்தவன். இஸ்மவேல் தன்னை அடிக்கடி அடித்துப்பரியாசம் செய்து பலவிதமாகத் துன்பப்படுத்திக்கொண்டு வந்ததை, ஈசாக்கு தன்பெற்றோரிடம் ஒன்றுஞ்சொல்லாமலே பொறுமையோடே சகித்துக்கொண்டிருந்திருக்கிறான். பின்பு சாராள் தன் குமாரனை அவன் அடித்துப் பரியாசம்பண்ணினதைத் தானேகண்டு, தன் புருஷனாகிய ஆபிரகாமைக்கூப்பிட்டு 'இந்த அடிமைப்பெண்ணையும் அவள் பிள்ளையையும் வெளியே துரத்திவிடும்.' என்று கடுங்கோபத்துடன் சொன்னாள். ஆபிரகாமோ, இஸ்மவேல் அடிமைப்பெண்ணுக்குப் பிறந்தவனாயிருந்தாலும், தனக்கு மூத்தமகனாயிருந்தபடியால் தன்தேச ஜாதி ஆசார வழக்கத்தின்படி, ஆசாரியத்வம், முதல் பிறப்பு சுதந்தரம், வாக்குத்தத்தம் முதலானவைகள் இஸ்மவேலுக்குரியவைகளென்றெண்ணி, அவனைவெளியே, துரத்திவிட மனமற்றிருந்தான். அப்போது தேவன் ஆபிரகாமைநோக்கி 'அந்தப் பிள்ளையையும் அதின்தாயையும் குறித்துச் சொல்லப்பட்டது உனக்குத் துக்கமாயிருக்க வேண்டாம். ஈசாக்கினிடத்தில் உன்சந்ததி விளங்கும். ஆகலால் சாராள் உனக்குச்சொல்லுகிறதெல்லாவற்றையும் கேள்' என்று சொன்னவுடனே, ஆபிரகாம் கர்த்தருடைய வார்த்தைக்குக் கீழ்படிந்து, அப்பத்தையும் துருத்தியில் தண்ணீரையும் கொடுத்து, ஆகாரையும் அவள் மகனையும் வெளியே அனுப்பிவிட்டான்.

இதனால் அறியவேண்டியதென்னவென்றால்:—இஸ்மவேல் மூத்தவன்; ஈசாக்கு இளையவன் இஸ்மவேல் என்பது இப்பிரபஞ்சத்தின் பிள்ளைகளான அந்நிய மதஸ்தர் எல்லாரை

யும் குறிக்கும். இளையவனை ஈசாக்கு என்பதோ கிறிஸ்து வின் பூரண விசுவாசிகளைக்குறிக்கும். மூத்தவன் கடுங்கோபி யும் கொடூரமான துர்க்குணமும், பரிகாசம் செய்யும் புத்தியும் தாய்தந்தையர்க்குக் கீழ்ப்படியாத அடங்கா அக்கிரம சிந்தை யுள்ளவனுமாயிருந்ததால், தன் தகப்பன் சொத்துக்குப் பாத் தியதையற்றவனாகி, அவனால் புறம்பே தள்ளுண்டு, வனாந்தர வழியாய்ப்போனான். இளையவனோ மூத்தவனால் வரும் துன் பம், நிந்தை கேடுபாடான அவமதிப்பையும், தாய்தந்தைக்கு வெளிப்படுத்தாமல், பொறுமையோடு சகித்து வந்தபடியால், மூத்தவனுக்குக் கிடைக்கவேண்டிய விசேஷித்த பாகத்தை யும் தன்பாகத்தையும் தகப்பனிடத்தில் தயவாய்ப் பெற்றுக் கொண்டான். அதுபோல கிறிஸ்துவின் விசுவாசிகள், இப் பிரபஞ்சத்தின்பிள்ளைகளால் வரும் ஆபத்து, வஞ்சனை, நிந்தை, பலவிதமான பெருந்துன்பம் முதலியவைகளை அவர் நாமத்தி னிமித்தம் பொறுமையோடு சகித்துக் காத்திருப்பார்களேயா னால், ஈசாக்கு தன் அப்பனுடைய பூமியை சுதந்தரித்துக் கொண்டது போல, இவர்களும் கிறிஸ்துவின் பரம இராஜியத் தை சுதந்தரித்துக்கொள்வார்கள் என்பது அதிக நிச்சயம். ஆகவே ஈசாக்கின் தேவனென்று சொல்லியிருக்கிறது. என் நாமத்தினிமித்தம் சத்தியத்தைக்கொண்டு எவன் பொறுமை யோடு காத்திருப்பானோ, அவனுக்கு நான் தேவனாயிருக்கிறே னென்பது கருத்து பிலிப்பி. 3, 20, நம்முடையகுடியிருப்போ பரலோகத்திலிருக்கிறது. அங்கேயிருந்து கர்த்தாகியஇயேசு கிறிஸ்து என்னும் இரக்ஷகர் வர எதிர்பார்த்துக்கொண்டிருக் கிறோம்.

சீஷன்:—யாக்கோபின் தேவனாயிருக்கிறேன் என்பதின் கருத்தென்ன?

குரு:—நீ முன் சொன்னபடியே யாக்கோபு, பொய்ய னும் எத்தனுமாகத்தானிருக்கிறான். ஆனாலும், ஆதியாகமம் 32, 24-30ல் சொல்லியிருக்கிறபடி, 'நீர் என்னை ஆசீர்வதித் தாலொழிய உம்மைப்போகவிடேன்' என்று உயிர் மறந்த வனாய் ஜெபம், விசுவாசமென்னும் ஆத்தும வலதிடது கை களைக்கொண்டு, அவரைப்பெனியேல் என்னுமிடத்தில் பற்றிப்

பிடித்து, அவனுடைய காரியங்கள் முழுவதையும் அவருக்கு ஆவிக்குள் தெரியப்படுத்தி, அருந் தபசினால் தேவனை மேற் கொண்டு, அவரிடத்தில் ஆசீர்வாதத்தையும் வாக்குத்தத்தங் களையும் பெற்றான். 'பெனியேல்' என்பதற்கு 'தேவ சமுகம்' என்றர்த்தமாம். 'அவனை மேற்கொள்ளாததைக் கண்டு' என்றால்:— யாக்கோபு மேற்கொள்ளவில்லை! ஆனால் அவன் செய்த அருந்தியானமே அவரை மேற்கொண்டது. ஓசியா 12, 4ல் அவன் அழுது கெஞ்சினனென்றிருக்கிறது. யாக் கோபு தன் மாம்ச தேக சம்பந்தமான கைகளைக்கொண்டு அவரை இழுத்துப்பிடித்துக்கொண்டவனல்ல. 'உயிர் தப்பிப் பிழைத்தேன்' என்று அவன் சொல்வதே இதற்கு அத்தாக்ஷி; (ஆதி 32-30.) பரமதரிசனங்களில் யாக்கோபு மோசப்பட்டுப் போகாதபடி, அவன் மன்றாட்டுக்கு அவர் கிருபையாயிரங்கி, அவர் தாமே அவனுக்கு இடங்கொடுத்ததால் யாக்கோபு உயிர் தப்பிப்பிழைத்தான். 'இனி உன் பேர் யாக்கோபு என ப்படாமல்' என்றால்:-உன் தந்திரோபாயத்தினாலும், எத்தினாலும் என்னை ஜெயித்து ஆசீர்வாதம் வாங்குகிறவனாகக் காணப் படாமல் என்று அர்த்தமாம். 'இஸ்ரவேல் எனப்படுவாய்' என்றால்:—'உன் முழு உண்மையான மனதோடு, கீழ்படிந்த ஜெபத்தின் மூலமாய், என்னிடத்தில் ஆசீர்வாதம் பெறப்பாத் திரவானாகக் காணப்படுகிற தேவப்பிரபு, தேவனோடு வல்லவன் அவருக்கும் உனக்கும் என்றென்றைக்கும் முடிவில்லாத ஐக்கியம் உண்டு எனப்படுவாய்' என்றர்த்தமாம்.

'நீ தேவனோடும் மனிதனோடும் போராடி மேற்கொண்டாயே என்கிறார் 'தேவனோடு' என்றால்:—உன் ஆவிக்குள்ளான அருந்தபசு மூலமாய்த் தேவனைத்தருவித்து, உன்னை விட்டு எடுபடாத ஆசீர்வாதங்களையெல்லாம், அவரிடத்திலிருந்து பெற்றுக்கொண்டாயென்று அர்த்தமாம். 'மனிதனோடு' என்றால் தேவனிடத்தில் பெற்றுக்கொண்ட ஆசீர்வாதத்தின் மகத்துவமான வல்லமையைக்கொண்டு, பிசாசு, உலகம், மாமிசம், என்பவைகளை மாத்திரமல்ல. அவைகளுக்குரிய உலக மனுமக்கள் எல்லாரையும் ஜெயித்து மேற்கொள்ளுவாயென்று

அர்த்தமாம். யாக்கோபு 'உம்முடைய பெயரென்ன' வென்று கேட்டதற்கு, 'நீ கேட்பானேன்' என்று சொல்லிவிட்டார் அதாவது 'நீ தேடிய தெய்வமாகிய நான் உன் நேரில் நிற்கும் போது என் பேர் அவசியமில்லை' யென்றர்த்தமாம்.

அதுபோல் நாம் யாக்கோபைவிட சகல விஷயத்திலும் கேடு கெட்டவர்களாயிருந்த போதிலும், நம்மை முழுமனதோடும் அவருக்கு ஒப்புக்கொடுத்துத் தத்தம் பண்ணி ஆவிக்குள்ளான ஜெபம், விசுவாசம் என்னும் ஆத்தும வலதிடது கைகளைக்கொண்டு அவரைப்பற்றிப்பிடித்து, சகல விஷயத்திலும் கீழ்படிந்து கெஞ்சிக்கேட்போமானல், நம்முடைய சரீர நாசியின் வழியாய் வெளியாகாயத்தைச் சுவாசித்து, பிராண வாயுவினால் சரீர முழுமையும் உயிர்ப்பிக்கப்படுகிறதுபோல், நமது ஆவிக்குள்ளான தியானத்திலும் கிறிஸ்துவின் ஆவியை நம்முடைய சூக்ஷ்ம தேகமென்னும் ஆத்துமாவின் நாசியில் சுவாசித்து, நித்திய ஜீவனைப்பெற்றுக்கொள்ளுகிறபடியால், நமக்கும் அவர் கிருபையாயிரங்கி நமக்குள்ளிருந்து வேண்டிய ஆசீர்வாதங்களைக் கொடுப்பார். ஆகவே 'விசுவாசிகளுக்குத் தேவனாயிருக்கிறேனே யல்லாமல் அவிசுவாசிகளுக்குத் தேவனல்ல' என்பதைக்காட்டும்பொருட்டு 'யாக்கோபின் தேவனாயிருக்கிறேன்' என்று சொல்லியிருக்கிறார்.

'ஆபிரகாமின் தேவன்' என்றால்:—கிறிஸ்துவின் சத்தியத்துக்கு சகல விஷயத்திலும் மரணபரியந்தம் கீழ்படிந்து அவரை எற்றுக்கொண்டவர்களுடைய தேவனாயிருக்கிறேனென்றும், 'ஈசாக்கின் தேவன்' என்றால் இப்பிரபஞ்சத்தின் மக்களால் வரும் ஆபத்தையும், துன்பத்தையும், கிறிஸ்துவின் நாமத்துக்காக பொருமையோடு சகித்துக் காத்திருக்கிறவர்களின் தேவனாயிருக்கிறேனென்றும், 'யாக்கோபின் தேவன்' என்றால் எப்போதும் தங்களை மறந்துவிடாப்பிடியாய்க் கிறிஸ்துவை விசுவாசம் ஜெபத்தின் மூலமாய்ப் பற்றிக்கொண்டிருக்கிறவர்களின் தேவனாயிருக்கிறேனென்றும் அர்த்தமாம்.

இன்னம் அறியவேண்டியது:—எப்படிப்பட்ட பலத்த விசுவாசியும் சமையாசமயங்களில் சோதனையின் நிகில்களுக்கு இடம் கொடுத்துவிடுகிறதுண்டு. என்றாலும் அச்சமயங்களில், கிறிஸ்து நமக்காக வைத்துவிட்டுப்போன, ஏராளமான வாக்குத்தத்தங்களை அம்புபோல் பாவித்து, எந்தெந்த சமயங்களில் எந்தெந்த வாக்குத்தத்தங்களை பிரயோகிக்க வேண்டுமோ, அந்தந்த சமயங்களில், சமயோஜிதமாய் அந்தந்த வாக்குத்தத்தங்களை விசுவாசம் ஜெபமென்னும் வலதிடதுகைகளைக் கொண்டு கிறிஸ்து மூலமாய்ப் பிதாவினிடத்தில் தெரியப்படுத்துவோமானால், ஆவியானவருடைய அனுக்கிரகத்தால்: சோதனைகளைத் தாங்கவும், அவைகளினின்று தப்பித்துக்கொள்ளத்தக்க போக்கையும் காட்டுவார். 1 கொரி 10, 13. தேவன் உண்மையுள்ளவராயிருக்கிறார். உங்கள் திராணிக்கு மேலாக நீங்கள் சோதிக்கப்படுகிறதற்கு அவர் இடம் கொடாமல் சோதனையைத் தாங்கத்தக்கதாக சோதனையோடு கூட அதற்குத் தப்பித்துக்கொள்ளும்படியான போக்கையும் உண்டாக்குவார்.

**சிஷன்**:—கர்த்தர் ஆபிரகாமைக்கூப்பிட்டு 'உன் ஒரே மகனை மோரியாமலைக்குக் கொண்டுபோய் எனக்குப்பலி செலுத்து' என்றாரே! அப்படியானால் அவருக்கு நரபலி விருப்பமா?

**குரு**:—இதில் அநேக ரகசியங்கள் அடங்கியிருக்கின்றன. சுருக்கமாய் சில விபரங்களை தெரிவிக்கிறேன். வாக்குத்தத்தத்தின் சந்ததியாகிய உலக ரக்ஷகர், சர்வலோகத்தின் பாவங்களுக்காகக் குறித்தகாலத்தில், பலியாகப்போகிற இரகசியத்தையும், வெளியரங்கமான சடங்கு பிரமாணமாகிய ஜடப்பிரமாணத்தில் தமக்கு ஆவிக்குள் பலி செலுத்தும் விபரத்தையும் இவன் செய்யப்போகிற பலியினால் இவனுக்கு அவர் விளக்கிக் காட்டி, இவன் தன் சந்ததியாருக்கும் (ஆதி 18, 19.) அவர்கள் மற்றெல்லாருக்கும் உலக முடிவுவரையிலும், அவைகளை விளக்கிக்காட்டுவார்களென்று ஆபிரகாமைப் பலி செலுத்தச்சொன்னாரேயல்லாமல், நரபலியை விரும்பிச்சொன்னவரல்ல.

சீஷன்:—'உன் புத்திரன் உன் ஏகசுதன், உன் நேச குமாரன்' என்று ஆதி 22, 2ல் சொல்லியிருக்கிறதே! அதின் தார்ப்பரியமென்ன?

குரு:—'உன் புத்திரன், உன் நேசகுமாரன்' என்றால் மாம்ச சம்பந்தமான ஈசாக்கைக்குறிக்கிறதாயிருந்தது. 'உன் ஏகசுதன்' என்னும் பதமோ (ஏகன்) திரியேக தெய்வமாகிய நித்திய குமாரன் என்னும் கிறிஸ்துவையே குறிக்கிறது. யோவான் 3, 16. "தேவன் தம்முடைய ஒரே பேரான குமாரனைத்தந்தருளி இவ்வளவாய் உலகத்தில் அன்பு கூர்ந்தார்."

சீஷன்:—மலையடிவாரத்தில் ஆபிரகாம் தன் வேலைக்காரரை நிறுத்தி: நானும் பிள்ளையாண்டானும்போய் தேவனைத் தொழுதுகொண்டு திரும்பிவருவோம்,' என்றானே என்ன நம்பிக்கையோடு இப்படிச்சொன்னான்?

குரு:—ஆதி 15, 3-4ல் தேவன் ஆபிரகாமுக்குப் பிள்ளையில்லாதிருந்த காலத்தில், பிள்ளை பிறக்கும் என்ற நம்பிக்கையற்ற காலத்திலேயே, உன் வீட்டில் பிறந்த பிள்ளையல்ல, உன் கர்ப்பப்பிறப்பாயிருப்பவனே உனக்குச்சுதந்தரவாளியாயிருப்பானென்று சொல்லி, "நீ வானத்தை அண்ணாந்துபார் வானத்தின் நக்ஷத்திரதிரள் கூட்டங்கள்போல உனக்குச்சந்ததியை உண்டாக்குவேன்" என்றார். ஆபிரகாம் இதை விசுவாசித்தான்; அது அவனுக்கு நீதியாக எண்ணப்பட்டதென்று சொல்லியிருக்கிறது. இந்த நம்பிக்கை அவனை விட்டு எடுபடாமலேயிருந்தது. தேவவார்த்தையின்படி ஈசாக்குபிறந்தபின் தேவன் அவனுடைய விசுவாசம், பொறுமையை பரிசை்ஷ செய்யும் நோக்கமாய், 'உன் கர்ப்பப்பிறப்பாகிய உன் மகனை மோரியாமலையில் எனக்குத் தகனபலியிடு' யென்று சொன்னார். ஆபிரகாம் பலியிடும்படி மலையடிவாரத்தில் வந்தவுடன், தன் மகனைப்பலி செலுத்தும்போது வேலைக்காரர்கள் பார்த்தால்

தடுப்பார்களென்றெண்ணி 'நீங்கள் இவ்விடம் நில்லுங்கள்' என்று சொன்னான். திரும்பிவருவோமென்றால்:— ஈசாக்கு பிறக்குமுன்னே, 'வானத்தின் நக்ஷத்திரங்களைப்போல உன் சந்ததியைப்பெருகப் பண்ணுவேன்' என்று சொன்னதேவன் உண்மையுள்ளவரும், ஒன்றுமில்லாமையிலிருந்து சகலத்தை யும் சிருஷ்டிக்கக்கூடிய சர்வவல்லவருமாகையால், நமது பிள்ளை மரணத்துக்குள்ளாகி சாம்பலாய்ப் போனாலும், சாம்பலிலிரு ந்தும் கோடானகோடி பிள்ளைகளைப்பிறப்பிக்கக் கூடியவரெ ன்ற பூரணநம்பிக்கையோடே 'திருப்பி வருவோம் என்று சொன்னான். எபி 11, 18-19. "ஈசாக்கினிடத்தில் உன் சந்ததி விளங்குமென்று அவனோடே சொல்லப்பட்டிருந்ததே இப்படிப்பட்ட வாக்குத்தத்தங்களைப்பெற்றவன். மரித்தோரி லிருந்தும் எழுப்பதேவன் வல்லவராயிருக்கிறார் என்றெண்ணி தமக்கு ஒரே பேறானவனையே பலியாக ஒப்புக்கொடுத்தான். மரித்தோரிலிருந்து அவனைப்பாவனையாகத்திரும்பவும் பெற் றுக்கொண்டான்."

சீஷன்:—ஆதி 22, 11ல் ஆபிரகாம் தன் மகனை வெட்டு ம்படி கத்தியை ஓங்கினபோது கர்த்தருடைய தூதனானவர் வானத்திலிருந்து தடுத்தாரென்று சொல்லியிருக்கிறதே; தேவ வார்த்தையைத்தடுக்க தூதனுக்கு அதிகாரமுண்டா?

குரு:—தடுத்தவருக்குத் தூதன் என்றும், கர்த்தர் என் றும், உடன்படிக்கையின் தூதன் என்றும், தேவன் என்றும், ஏலோகீம் என்றும், அதிசயமானவர் என்றும், இருக்கிறவராக இருக்கிறேன் என்றும் தேவனாகிய கர்த்தர் என்றும் புருஷனாக காணப்படுகிறவர் என்றும், யெகோவா என் றும், இம்மானு வேல் என்றும், கிறிஸ்து என்றும், பெயர்கள் வழங்கப்பட்டி ருக்கின்றன. பூர்வ பிதாக்கள் காலங்களிலிருந்து இந்நாள் வரையிலும், பல கோத்திரங்களிலுள்ள பல பாஷைகளுக்குத் தக்கபடி ஒவ்வொரு பாஷையிலும், முன் சொன்ன பலபெயர் கள் இவர் ஒருவருக்கே வழங்கப்பட்டு வந்ததாகத் தெளிவாய்

விளங்குகிறது. எழுத்து நடையில்லாமல் பேச்சு நடையாயிருந்த காலங்களில், முற்பிதாக்களும் மனுஷிவயிற்றில் பிறந்தவர்தான் தெய்வமென்றும், புருஷனாகக்காணப்படுகிறாரென்றும் எண்ணியிருந்தார்களாம். பிற்காலங்களில் தீர்க்கதரிசிகள் தோன்றி 'இம்மானுவேல்' என்று பேர் கொடுத்ததிலிருந்து அவர் மெய்யான தேவனும் மெய்யான மனிதனுமாயிருக்கிறார் என்று வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. இங்கே தடுத்தது கர்த்தரே அல்லாமல் அவருடைய தூதன் அல்ல. ஆதி 22, 18ல் சொல்லியபடி இவர் தேவனாகிய கர்த்தரே என்று விளங்குகிறது. ஆகையால் மல்கியா 3, 1ல் 'அப்பொழுது நீங்கள் தேடுகிற ஆண்டவரும், நீங்கள் விரும்புகிற உடன்படிக்கையின் தூதனுமானவர் தம்முடைய ஆலயத்துக்குத் தீவிரமாய் வருவார். இதோ வருகிறார் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்' என்று தொகுப்பாய் அவருக்கே சொல்லப்பட்டிருக்கிறது.

சிஷன்:—தடுத்தகாரணமென்ன?

குரு:—"நீ உன் குமாரனைப்பலிசெலுத்தவேண்டியதில்லை நீ ஏற்கனவே உன் இருதயத்தில் பலி செலுத்தியாயிற்று. மலையடிவாரத்தில் கர்த்தருக்கு பலி செலுத்திவிட்டுத் திரும்பி வருவோம் என்று நீ சொன்னபோதே ஆவிக்குள் மனப்பலி செலுத்திவிட்டாய். இப்போது உன் செய்கையிலும் முழுமனதோடு நிறைவேற்றும்படி கத்தனித்துவிட்டபடியால் உன் செய்கையே பலியாயிற்று. ஆகையால் இந்த பலி நீ செலுத்தவேண்டியதில்லை" என்று சொல்லி, ஆபிரகாமுக்கு இதனால் மிகுந்த ஆறுதலை உண்டுபண்ணவும்' இவனுடைய விசுவாசத்தைப் பூரணப்படுத்தவும் உலகமுழுவதிலுமுள்ள சர்வஜனங்களின் பாவங்களுக்காக, இவன் கொடிவழியில் தாம் முன்குறித்த பிற்காலங்களில் (1 பேதுரு 1, 10-12) ஏகனை திருக்குமாரனாகிய இவரே திருத்துவ இரகசிய சம்பந்தமான தேவபலியை தமது சொந்த மாமிசத்தில் செலுத்தப்போகும் விபரத்தை இவனுக்குத் தெரியப்படுத்தவும், உலகமுடிவுவரையிலும் இவன் மூலமாய் சகலஜனங்களும்

அந்த ஒரேபலியை நினைவுகூர்ந்து ஆவிக்குள்ளான மனப்பலி செலுத்திவரவும் (1 சாமு 15-22.) கர்த்தர் சித்தங்கொண்டு 'பிள்ளையாண்டான்மேல் கை போடாதே' என்று தடுத்தார். மேலும் தாம் நரபலியை விரும்புகிறவரல்ல என்று காட்டி (மீகா 6, 6-8.) இந்த மனப்பலியில் தேவன் பிரியங்கொண்டு அவன் மகனை மரணத்திலிருந்து உயிர்ப்பித்து அவன் வசம் ஒப்புக்கொடுத்ததுபோல, ஆதாமின் கீழ்படியாமையினால் பாவத்தில் மரித்துக்கிடக்கும் மனுமக்களெல்லாரும் கிறிஸ்து தாமே சர்வத்திலும் கீழ்ப்படிந்தவராய் ஒரே தடவையாக செலுத்தப்போகிற பலியை நினைவுகூர்ந்து தங்கள் சரீரம், ஆத்துமா, ஆவியை மனத்தாழ்மையின் கீழ்படிதலோடு கூடிய ஜீவபலியாக (ரோமர் 12, 1) செலுத்துவார்களாகில் அவர்களும் ஞானஒழியாகிய கிறுஸ்துவில் நித்திய ஜீவனைப் பெருவார்களென்னும் விபரத்தை ஆபிரகாமுக்கு விளக்கிக்காட்டினார். ஆபிரகாம் தன்பின் சந்ததியாருக்கெல்லாம் மேற்கூறிய மனப்பலியின் விபரத்தைத் தெரியப்படுத்துவான் (ஆதி. 18, 19.) என்ற நோக்கமாகவும் அப்படித்தடுத்தார்.

சீஷன்:—ஆவிக்குள்ளாக பலிசெலுத்தும் விபரம்விளங்கிக்கொண்டது. ஆகிலும் தேவன் சொன்ன வார்த்தையின்படி வெளியரங்கமான பலியென்ன?

குரு:—ஆபிரகாம் திரும்பிப்பார்த்தபோது புதரிலே கொம்புகள் சிக்கிக்கொண்டிருந்த ஒரு ஆட்டுக்கடாவைக்கண்டு அதைக்கொண்டு வந்து பலியிட்டான். ஆட்டுகடா எங்கிருந்து வந்து புதரில் சிக்கினது என்று ஆபிரகாமுக்குத்தெரியாது. அதுபோல கிறிஸ்துவின் பூர்வக்கியானமும், பிறப்பும், சிலுவையின் மரணமும், உயிர்தெழுதலும் யாவராலும் நிதானித்தறிந்து கொள்ளமுடியாத சமுத்திரக்களஞ்சியம் எனக்கருத்தாம். (ரோமர் 11, 33.) (எசாயா 53, 2-5.) ஆட்டுக்கடா தனியாய் நின்றது. கிருஸ்துவும் பாவங்களுக்கு விலகின தேவ தனிமனுஷனாக இருந்தார் (எபி 7, 26) ஈசாக்குக்காக ஆட்டுக்கடா புதரில் சிக்கிக்கொண்டிருந்ததுபோல், பாவிகளுக்

காக கிறிஸ்துவானவர் சிலுவையில் சிக்கிக்கொண்டிருப்பார் என்னும் இரககியம் வெளியாகிறது. ஆட்டுக்கடா புதரில் தன்னை தப்புவிக்கமுடியவில்லை. கிறிஸ்துவோ சிலுவையில் தம்மைத்தப்புவிக்க இடங்கொடுக்கவில்லை (இப்பொழுது என் ஆத்துமா கலங்குகிறது, நான் என்ன சொல்லுவேன்; பிதாவே இந்த வேளையினின்று இரக்ஷியுமென்று சொல்வேனே; ஆகிலும் இதற்காகவே இந்த வேளைக்குள் வந்தேன். யோவான் 12, 27.) ஆட்டுக்கடா ஈசாக்குக்குப்பதிலாக பலி செலுத்தப்பட்டதுபோல கிறிஸ்துவும் பாவிகளுக்குப்பதிலாய் பலி செலுத்தப்படுவார் என்ற திரிகால சம்பந்தமுள்ள தீர்க்கத்தரிசனம் வெளியாயிற்று. ஆட்டுக்கடா யேசுகிறிஸ்து ஒரே தடவையாக தமது மாமிசதேகத்தில் செலுத்தி நிறைவேற்றி முடிக்கப்போகிற பலிக்கும் இந்த பலிக்கு முன்னடையாளங்களான, மோசேயின் காலம் அதற்கு முன்னுள்ளகாலங்களிலும் செலுத்தப்பட்ட அந்நிய மாமிச ஜடப்பிரமாணத்தின் பலிகளுக்கும் ஒப்பனையாயிருக்கிறது. ஆட்டுக்கடா யேசு கிறிஸ்துவின் மாமிச தன்மைக்கும், ஈசாக்கு யேசு கிறிஸ்துவின் தெய்வீகதன்மைக்கும், ஆபிரகாம் பிதாவுக்கும் ஒப்பனையாயிருக்கிறார்கள் இப்படியானால் பிதாக்குமாரன் பரிசுத்த ஆவியேன்னும் திரியேக தேவனை ஒருவராய் சர்வலோகத்தின் பாவங்களுக்காகத் தாமே பின் காலத்தில் செலுத்தி நிறைவெற்றி முடிக்கப்போகிற, யாகபலியின் தேவ இரகசியத்தை ஆபிரகாமுக்குத் தேவன் விளக்கிக்காட்டும்படி ஈசாக்கைப்பலி செலுத்தச் சொன்னநோக்கமாம்.

சீஷன்:—ஆபிரகாம் பலி செலுத்தியபின், தேவன் பின் காலங்களில், மாம்ச சம்பந்தமான நியாயப்பிரமாணத்தில் தாம் கட்டளையிடப்போகிற அந்நிய மாம்சபலிகளைச்செலுத்துவோர் எல்லாரும் அவனைப்போல் ஆவிக்குள் செலுத்தவேண்டுமென்று அவனுக்கு விளக்கிக்காட்டினதாகக் சொன்னீர்கள். ஆதி 22, 15-18ல் சொல்லியிருக்கிறபடி ஆசீர்வாதம் கூறி 'உன் சந்ததியை வானத்தின் நக்ஷத்திரங்களைப்போலவும்' அதைக்கொடுத்து ஆசீர்வாதமில்லாமலே 'உன் சந்ததியை

கடற்கரை மணலைப்போலவும்' ஆதி 13, 16ல் ஆசீர்வாதமில் லாமலே உன் சந்ததியை பூமியின் தூளைப்போலவும் பெருகப் பண்ணுவேனென்று சொன்னாரே! இதின் அந்தரங்கமென்ன?

குரு:—ஆசீர்வாதம் கூறி 'உன் சந்ததியை வானத்தின் நக்ஷத்திரங்களைப்போல் பெருகப்பண்ணுவேன்' என்பது: கிறிஸ்துவுக்குள் ஆவியின் ஒளியை இருதயத்தில் பெற்றுக் கொண்ட பூரண விசுவாசிகளைக்குறிக்குமாம். தொடுத்து ஆசீர்வாதமில்லாமலே 'கடற்கரை மணலைப்போல் பெருகப் பண்ணுவேன்' என்பது: சத்தியம் என்றறிந்தும் பற்றிக் கொள்ள மனமற்ற ஏராளமான பேர்க்கிறிஸ்தவர்களைக்குறிக் குமாம் ஆசீர்வாதமில்லாமல் 'பூமியின் தூளைப்போல் பெருகப் பண்ணுவேன்' என்பது:—சிருஷ்டிகரைப்பற்றிக்கொள்ளாத, கணக்குக்கடங்கா அந்நிய மதஸ்தர்களைக்குறிக்குமாம். கிறிஸ்து வினுடைய மகிமையின் ஒளி எவன் கூட்டுக்குள் இல்லையோ, அவன் அவருடைய மகிமையையிழந்து வெறும் மண்ணைப் போன பழைய ஆதாமாயிருக்கிறான் எனக்கருத்தாம் (ஆதி. 3, 19.)

சீஷன்: ஈசாக்கு கிறிஸ்துவுக்கு எப்படி முன்னடை யாளமானவன்?

குரு:—ஈசாக்கு தேவ வாக்குத்தத்தத்தின்படி பிறந்தது போல, திரியேக தேவனான கிறிஸ்து, ஆதியில் ஏவாளுக்குக் கொடுத்த வாக்கின்படியே, இவன் கொடி வழியில் (தாமே) வருவார் என்பதற்கு முன்னடையாளமாம். ஈசாக்கு ஆபிரகாமுக்கு ஒறே மகனும் குமாரனுமாயிருந்தான். கிறிஸ் துவோ திரியேக தேவனான நித்தியகுமாரன் "ஈசாக்கினிடத் தில் உன் சந்ததி விளங்கும்" என்ற தேவவாக்கானது, இவன் கொடிவழியில் உதித்த (ஏகனான) கிறிஸ்துவில் நிறைவேறிற்று. ஈசாக்கு தான் தகனிக்கப்படப்போகிற கட்டையைத் தானே சுமந்து மோரியாமலைக்குப்போனது. கிறிஸ்துவும் தம்மைக் கொல்லும் சிலுவையைத்தாமே சுமந்து மோரியா மலைத்

தொடராகிய கல்வாரிக்குப்போவார் என்பதற்கு முன்னடை யாள மாயிருந்தது. ஈசாக்கு பலியிடப்பட்டது மோரி யாமலை. எருசலேம் தேவாலயம் கட்டப்பட்டது மோரி யாமலை. கிறிஸ்துவானவர் பாடுபட்டதும் மோரியாமலைத் தொடர். (2 நாளாகமம் 3, 1.)

ஆதாம் பாவம் செய்தவுடனே, நஞ்சுமரத்தடியிலேயே தேவநீதி அவனைவெட்டி, அக்கினியினால் சர்வத்தையுமழித்து, நியாயத்தீர்ப்பு கொடுக்கப்போகிற அந்நேரத்தில், இரக்க சித்தமும் உள்ளவராகையால், ஏவாளுக்கு, வாக்களித்தபடியே, தாமே நமக்குப்பிணையாகத் தமது கோபத்தையும் நீதியையும் சிலுவைமரத்தில் தமது சொந்தமாமிசத்திலே நிறைவேற்றி நம்மைத் தப்புவிப்பதற்கு முன்னடையாளமாக ஆபிரகாம் கையில் நெருப்புத்தணலும், கத்தியும் இருந்த இரகசியமாம்.

சீஷன்:—இப்படியாக தேவதரிசினம், தேவாசீர்வாதம், தேவவாக்குத்தத்தங்களை ஆதியிலே மனுஷருக்குள் முதலாகப் பெற்ற ஆபிரகாமை, அவன் யுத்தஞ்செய்து, இளைப்பு களைப் போடு வந்த நேரம் பார்த்து, திடீரென மெல்கிசேதேக் அவன் முன் தோன்றி, அப்பமும், திராக்ஷாசமும் கொடுத்து அவனை ஆசீர்வதித்தானே! ஆகவே ஆபிரகாமைப் பார்க்கிலும் மெல்கி சேதேக் மகாபெரியவனைக் காணப்படுகிறான். இவைகளுடைய அந்தரங்க விருத்தாந்தமென்ன?

குரு:—அப்போஸ்தலனாகிய பரிசுத்த பவுல், "மெல்கி சேதேக்கைப்பற்றி, நாம் விஸ்தாரமாய்ப்பேசலாம். நீங்கள் கேள்வியில் மந்தமுள்ளவர்களாயிருப்பதால், அதை விளங்கப் பண்ணுகிறது அரிதாயிருக்கும்," என்று எபி. 5, 11ல் சொல்லுகிறார்.

நோவாவின் முன் பின் காலங்களில், எழுத்து நடவடிக் கைகள் இல்லாததால், யூதருக்குள்ளும், அரபியருக்குள்ளும், மற்ற தேசங்களிலுள்ளவர்க் குள்ளுமிருந்த அநேக

விஷயங்களை பாரம்பரையான பூர்வக்கியானங்கள் மூலமாயும், பேச்சு நடைகளாலுந்தான் அறிந்துகொள்ளக்கூடியதாயிருந் திருக்கிறது. பின்காலங்களில் பரிசுத்த பவுல், கமாலியேல் என்னும் பெரிய சாஸ்திரியினிடம், பல தேசாஜார பழக்க வழக்க பூர்வக்கியானங்களை படித்துத் தேரினவரானபடியால் மெல்கிசேதேக்கைப்பற்றி இவரும் அதிகம் அறிந்திருக்கலாம். ஆனால் பேச்சு நடையிலும் பாஷை நடையிலுந்தான் இவருக்கு வெளிப்பட்டிருந்ததாலும், காலங்கள் கடந்து விட்டபடியாலும் 'உங்களுக்கு ரூபகாரமாய்ச் சொல்லி விளக்கிக் காட்டுவது அரிதாயிருக்கிறது' என்கிறார். ஆதி. 14, 18ல் 'மெல்கிசேதேக் உன்னதமான தேவனுடைய ஆசாரியனும், சாலேமின் இராஜாவுமாயிருந்தான்' என்று கண்டிருக்கிறது. இவன் சாலேமின் இராஜா. இவன் அரபு பூர்வக்கியானங்களாலும், யூதப்பாரம்பரியங்களாலும், சத்தியவேதத்தின் மூலமாயும் வெளியாகிறபடி, பின்னால் எருசலேம் கட்டப்படுவதற்கு முன்னிருந்த இடத்தில் இருந்த சலேமுக்கு இராஜாவாயிருந் தானும். இவன் ராஜ்ஜியபாரம் இராஜாவின் பள்ளத்தாக்கு என்று ஆதி. 14, 17ல் சொல்லப்பட்ட சாவே என்னும் பள்ளத்தாக்குமட்டும் எட்டியிருந்ததாக விளங்குகிறது. மெல்கி சேதேக்கின் பேர் வழங்குவதுபோல, தன் பேரும் வழங்கி வரும்படியாக அப்சலோம்: தனக்கு பிள்ளையில்லாததால், தான் உயிரோடிருக்கையிலேயே இராஜாவின்பள்ளத்தாக்கில் ஏதோ ஓர் பூர்வக்யானம் மெல்கிசேதேக்கைப்பற்றி அறிந்திருந்த படியால் தனக்கு ஞாபகசின்னமாக ஒரு தூண் நிறுத்தி அப் சலோம் என்று பேரிட்டான் என்று கண்டிருக்கிறது. (2 சாமுவேல் 18, 18.) இந்த மெல்கிசேதேக் நோவாவின் மூத்தகுமாரனாகிய சேம் என்று ஞானிகள் திட்டமாய்ச்சாதிக் கிறார்கள். வெகுகாலம் இவன் உயிரோடிருந்தவனும் ஆபிர காம் காடுவனங்களிலே தேவனைத் தேடி தனித்தியானம் செய்து திரிந்தலைந்த காலங்களில் மெல்கிசேதேக்கை அடிக்கடி கண்டு பேசி அவனை அறிந்திருந்தானென்றும், மெல்கிசேதேக் ஆபிரகாமுக்கு மெய்யான தேவனைப்பற்றி அடிக்கடி உணர்த் திக்காட்டி வந்திருக்கிறனென்றும் அதினால் ஆபிரகாம்

இவன் மூலமாய் மெய்யான தேவனைப்பற்றிய உறுதியான விசுவாசத்தில் நிலைநிறுத்தப்பட்டானென்றும் அரபு பூர்வக்யானங்களால் வெளியாகிறது. அதினாலேதான் மெல்கிசேதேக்கை ஆபிரகாம் சந்தித்தவுடன் இவனை அவன் ஒன்றும் விசாரிக்காமல், தான் கொள்ளையிட்ட பொருட்களில் தசமபாகம் கொடுத்து மெல்கிசேதேக்கினிடம் ஆசிர்வாதம் வாங்கினதற்குக் காரணமாயிருந்தது.

இயேசுவானவர் ஞானஸ்நானம் பெற்றயிடமாகிய யோர்தான் நதியோரத்திலுள்ள, பெத்தபாராவில் மெல்கிசேதேக்கின் சிம்மாசனமிருந்ததென்றும், அது இப்போது பூமிக்குள் மறைந்துகிடக்கிறது என்றும், அந்த சிம்மாசனம் மறைந்து கிடக்குமிடத்திலேயே அவர் ஞானஸ்நானம் பெற்றாரென்றும், யூதப்பாரம்பரையாலும், அரபு பூர்வக்யானத்தாலும் வெளியாகிறது. மெல்கிசேதேக் ஒரு தேசத்துக்குமட்டும் ஒரு சக்ரவர்த்தியைப்போலிருந்து, சில காலம் தன் குடிகளை நீதியாய் ஆண்டுவந்தது, கிறிஸ்துவானவர் சர்வலோகங்களுக்கும் நித்தியானந்தமுள்ள ஏகச்சக்ராதிபதியாய் நீதியோடும் அன்போடும் ஆண்டு சத்திய ஒளியைக்காட்டி தேவனிடம் சேரும் வழியில் நடத்தி நித்திய ஜீவனை அளிக்கவல்லவராய் வருவார் என்பதற்கு முன்னடையாளமாம். மெல்கிசேதேக் தன் பிரஜைகளின் சரீரங்களுக்குமட்டும் இராஜாவாயிருந்தான்; கிறிஸ்துவானவரோ, நம்முடைய சரீரங்களுக்குமட்டுமல்ல, ஆத்துமாக்களுக்கும் அரசனாக இருக்கிறாரென்று காட்டும் பொருட்டு இவன் வெளியரங்கமானான்.

சிஷன்:—அக்காலத்தில் உலகத்துக்குள் ஆசாரியன் என்ற பேரும், அதற்குரிய ஊழியம் செய்தவனும், ஒருவனகிலுமில்லையே! அப்படியிருக்க இவனை மாத்திரம் "உன்னதமான தேவனுடைய ஆசாரியன்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆசாரிய ஊழியம் இவன் எந்த இடத்தில் என்ன விதமாய்ச்செய்தான்?

குரு:—இவன் காலத்தில் நியாயப்பிரமாணம் கொடுக்கப் படவில்லை. பலிகள் விஷயமான சட்ட திட்டங்களும் நியமிக் கப்படவில்லை, தீர்க்கத்தரிசிகளுமில்லை, தேவனை ஆராதிக்கும் படியான தேவாலயக்கூடாரமாவது, ஆலயமாவது கட்டப்பட வுமில்லை; ஆ சா ரி ய ஊழியத்துக்கென்று நியமிக்கப்படும் நியமங்களுமில்லை. இவைகளெல்லாமில்லாத காலத்தில், உல கத்துக்குப்பொதுவான ஆசாரியனாய் இவன் இருந்தது, கிறிஸ் துவும் கைகளினாலும், கல், மண், இன்னும் எவ்வித சிருஷ்டிப் பொருள்களினாலும் அமைந்த ஆலயங்களிலல்ல, அவராலேயே சிருஷ்டிக்கப்பட்ட இருதயமாகிய ஆலயத்தில் வாசம் செய்து அவருக்குகந்த ஆவிக்குரிய பலியை இருதயத்திலிருந்து செலு த்த ஏவுகிற சர்வலோகத்துக்கும் பொதுவான உன்னதமான நித்திய பிரதான ஆசாரியராயிருப்பாரென்பதற்கு முன்னடை யாளமாக இவன் தோன்றினான்.

சீஷன்:—மெல்கிசேதேக்குக்கும், கிறிஸ்துவுக்குமுள்ள சம்மந்த வித்தியாசமென்ன?

குரு:—மெல்கிசேதேக் மனுஷன். கிறிஸ்துவோ நித் திய தேவன். (ரோமர் 9, 5.) மெல்கிசேதேக் அழிவுக்குரிய இரவு பகலுள்ள இப்பிரபஞ்சத்துக்குள் சஞ்சரித்துக்கொண் டிருந்தவன்; கிறிஸ்துவோ இரவுப்கலற்றஇடமாகிய, நித்தியா நித்தியமான சத்தியலோகத்துக்குள் என்றென்றைக்கும் நிலை த்திருக்கிறவர், மெல்கிசேதேக் இராஜாவும், தேவனுடைய ஆசாரியனும், தீர்க்கத்தரிசியுமாய்க் காணப்படுகிறான். கிறிஸ் துவோ நித்திய இராஜாவும், நித்திய ஆசாரியரும், நித்திய தீர்க்கத்தரிசியுமாய் வருவாரென்பதற்கு முன்னடையாளமாக மெல்கிசேதேக்குக்கு இந்தப்பேர் கொடுக்கப்பட்டிருக்கிறது. மெல்கிசேதேக் ஆலயங்களில் ஆ சா ரி ய ஊழியம் செய்து வந்ததாக வெளிப்படுத்தப்படவில்லை; கிறிஸ்துவும் கையினால் செய்யப்பட்ட ஆலயங்களிலல்ல, மனுஷனுடைய இருதய மாகிய ஆலயத்தில் பூசை செய்வாரென்பதற்கு அவன் முன் னடையாளமாகக் காணப்பட்டிருக்கிறான். மெல்கிசேதேக்

நியாயப்பிரமாண சடங்காசாரத்தின்படி பலி செலுத்தி னதாகச் சொல்லப்படவில்லை; கிறிஸ்துவும் நியாயப்பிரமாணத் தின்படியல்ல, விசுவாசப்பிரமாணமாகிய ஆவியின் பிரமாணத் தின்படி நாம் மனப்பலி செலுத்த ஏவுவாரென்பதற்கு அவன் முன்னடையாளமாயிருக்கிறான். மெல்கிசேதேக்கும், பின் காலங்களில் ஊழியம் செய்த மற்ற ஆசாரியர்களும் ஆணையி ல்லாமல் வந்தவர்கள்; கிறிஸ்துவோ தமக்கு மேலானவர் ஒரு வருமில்லாததால் தம்மில்தாமே ஆணையிட்டுத்தாமாகவே வந்தவர். மற்ற ஆசாரியர்களெல்லாரும் மரணத்துக்குரியவர் களாயிருந்தார்கள்; கிறிஸ்துவோ என்றென்றைக்குமழியாத, தமது நித்திய ஜீவனைக்கொடுக்கும் பிரதான ஆசாரியராயிருக் கிறார். மற்ற ஆசாரியர்கள் மரணத்துக்கேதுவானவர்களான படியால், தாங்கள் உயிரோடிருக்கும்போதே தங்களுக்குப் பதிலாக இன்னொரு ஆசாரியனை ஆயத்தமாக்கவேண்டியதவ சியமாயிருந்தது; கிறிஸ்துவோ மெல்கிசேதேக்கின் முறைமை யின்படி என்றென்றைக்கும் நிலைத்திருக்கிற நித்திய ஆசாரிய ராயிருக்கிறபடியால் இவருக்குப்பதிலாள் ஆயத்தமாக்கப்பட வேண்டிய தவசியமில்லை. இவ்விதமாக கிறிஸ்துவானவர் சர்வ லோகத்தின் பாவங்களுக்காக குறித்தகாலத்தில் சிலுவையிலே மரணத்தியாகம் செய்து, அடக்கம் பண்ணப்பட்டு, உயிர்த்தெ ழுந்து, மோக்ஷமகிமைக்குப்போகிற பாதையைத்திறந்து, திரி கால சம்பந்தத்திலுமுள்ள, நீதிமான்களையும், விசுவாசிகளையும், பரிசுத்தவான்களையும், தமது ஆவிக்குள்ளிணைத்து பரம இராஜ் யத்தில் சேர்க்கும் விபரத்தின் பொருள் முழுமையும், கிறிஸ்து வுக்குக்காட்டி, மெல்கிசேதேக் இவைகளுக்கு ஒரு முன்னடை யாளமாக ஆபிரகாம் முன்னாலே காணப்பட்டிருக்கிறான். எப் படியென்றால், ஆபிரகாம் யுத்தம்செய்து தவித்துவந்த சம யத்தில், அவனைப்பலப்படுத்தி ஜீவகளையாற்ற மெல்கிசேதேக் கிடமெனக்காணப்பட்டு அவனுக்கு அப்பத்தையும் திராக்ஷ ரசத்தையும் கொடுத்து, களையாற்றி அவனை திடப்படுத்தி ஆசிர்வதித்தான். லோகஇரக்ஷகராகிய கிறிஸ்துவும், உலகம் மாமிசம், பிசாசு, என்னும் ஆத்துமசத்துருக்களோடு, நீதி மான்கள், விசுவாசிகள், ஆவிக்குரிய போர்செய்கிறதினால்,

பலவீனப்பட்டுத் தவறிப்போகாதபடிக்கு தமது மாமிசத்தை அவர்களுக்கு அப்பமாகவும் தமது திரு இரத்தத்தை திராக்ஷ ரசமாகவும் கொடுத்து, ஜீவகளையாற்றி திடப்படுத்தி உயிர்ப்பிப் பாரென்பதற்கு முன்னடையாளமாக அப்படிச்செய்தான். அதின் கருத்தாவது: அவருடைய சத்திய வசனமே பழைய ஏற் பாட்டின் காலத்திலுள்ள நீதிமான்களுக்கும், புதியஏற்பாட் டின் காலத்திலுள்ள விசுவாசிகளான பரிசுத்தவான்களுக்கும் ஆத்தும போஜனமும் அவருடைய ஆவியே அவர்களுக்கு ஆத்துமபானமுமாயிருக்கிறது. ஆகவே பரிசுத்த பவுலும் இவைகளையெல்லாம் தெளிவாயறிந்திருந்தபடியால், "மெல்கி சேதேக் தேவகுமாரனுக்கு ஒப்பானவன்" என்று நிழலாட்ட மான பாவனையாய்ச் சொல்லியிருக்கிறார். இதினால் அவன் தே வனல்ல; தேவகுமாரனுமல்ல; கிறிஸ்துவை வெளிப்படுத்தும் படி அவர் அனுப்பிய ஊழியக்காரன் என்று விளங்குகிறது. ஆதாம் சிருஷ்டிக்கப்பட்டு. தேவன் தமது ஆவியை அவனுக் குள் ஊதிவைத்தது முதல், கிறிஸ்துவானவர் சிலுவையில் ஒரேதரம் சர்வலோகத்தின் பாவங்களுக்காகத் தம்மைத்தாமே பலியாகசெலுத்துமட்டும், அந்நிய மாமிச சம்மந்தமான பலி களைச்செலுத்தித் தேவனை ஆராதித்தார்கள். இவைகள் தங் களில் தாங்களே பாவத்தைப் போக்கக் கூடிய பலிகளல்ல. அவைகளைச்செலுத்தினவர்களுடைய மனசாக்ஷி பூரணப்பட்ட தமில்லை. கிறிஸ்துவானவர் செலுத்தப் போகிற ஒரே பலிக்கு அவைகள் முன்னடையாளங்களாகவும், நிழலாட்டங்களாகவு மிருந்தன. கிறிஸ்தவர்களாகிய நாம் தேவனை ஆராதிக்கும் போது செலுத்தவேண்டிய பலி யென்ன வென்றால்: கிறிஸ்து தாமே ஏற்படுத்திய திவ்விய நற்கருணையை நாம் உட்கொள் ளும்போது அவரையே ஞாபகமாக நினைவுகூர்ந்து, நமது ஆவி க்குள் பலி செலுத்தி அப்பம் இரசத்தை பயபக்தியோடும், விசு வாசத்தோடும் பெற்றுக்கொள்ளுவதினால், அவருடைய திருச் சரீரத்திலும், திருஇரத்தத்திலும் நாம் ஐக்யப்பட்டு, நமது சரீ ரம் முழுமையையும் காணிக்கைகளாகவும், நமது ஆத்துமாவை அவருக்கு சுகந்த வாசனையான ஜீவபலியாகவும் அவருக்குள் படைக்கிறோமென்று அறிந்துகொள்ளவேண்டும். (ரோ. 12, 1)

ஆதாமிலிருந்து உலக முடிவுவரையிலுமுள்ள எல்லா மனுமக்களும் இரக்ஷணிய சத்தியத்திற்கடுத்த முன் சொல்லப்பட்ட பிரமாண சட்டதிட்டங்கள் யாவையும், வெளிப்படையான சிருஷ்டிப்பொருட்களைக்கொண்டு சுட்டிக்காட்டி வெளிப்படுத்தி, உணர்வோடு அவைகளை ஆவிக்குள்ளறிந்து கொள்ளும்படி, ஆதாமுடைய நாசியில் ஜீவசுவாசத்தை ஊதும்போதே அவைகளையும் அதனோடு அவனுக்குள் அமைத்துவைத்ததினால், ஆதிமுதல் அவைகள் நடந்தேறிக் கொண்டே வந்திருக்கின்றன. கிறிஸ்து வந்தபின், தாமே அவைகளை வெளியரங்கப்படுத்தி, நிறைவேற்றி முடித்தார். நியாயப்பிரமாணிக்கன், இராஜா, தீர்க்கதரிசி, ஆசாரியன் இன்னும் யாராயினும்சரி, யாவரும் கிறிஸ்துவின் ஊழியக் காரரும், ஸ்தானாதிபதிகளுமாயிருந்தார்கள். கிறிஸ்துவோ நித்திய குமாரனான தேவன். (சங்கீதம் 110, 4.)

சீஷன்:— தேவஆவி, தேவரூபம், தேவசாயல் மனுஷனுக்குக் கொடுக்கப்பட்டதினால், அவன் கொஞ்சங்குறைய தெய்வத்தைப்போல் காணப்படுகிறானே! இப்படித்தேவ மகத்வம் பெற்றவனை சாத்தான் கெடுத்தான் என்று சொல்லியிருக்கிறது. சாத்தான் என்பவன் எப்போது உற்பத்தி யானவன்?

குரு—அநாதிக்குப் பின், ஆதிக்கு முன் (அதாவது உலகதோற்றத்திற்குமுன்.)

சீஷன்:—இவன் இயல்பாகவே சாத்தானாயிருக்கிறானா? இடையிலானவனா?

குரு:—இவன் இயற்கையிலே வல்லமையான ஒளியுள்ள ஒரு தேவதூதன். இவன் இடையிலே குணக்கேட்டினால் தன்னில் தானே பிசாசானான்.

சீஷன்:—எதற்காக குணக்கேடு செய்தான்?

குரு:—நான் 'தேவனுக்குள் ஒரு இரகசியத்தை யறிய வேண்டும்' என்றகங்காரங் கொண்டு, நேர்ப்பாய்ச்சலாய் நின்று சாத்தானானான்.

சீஷன்:—அதைப் பார்க்கத் துணிந்தானே! அவருக்குள்ளென்ன இரகசியமிருந்தது?

குரு:—ஒரு இன்ஜினியர் ஒரு கட்டடத்தைக் கட்ட வேண்டுமானால், தன்னிருதயத்தில் அதன் பிளானை கிரகித்து முடிவுகட்டிக்கொள்ளுகிறதுபோல, தேவன் சர்வவுலகங்களையும் சிருஷ்டிக்குமுன், அநாதி திருத்துவசம்மந்தமான ஆலோசனை அவருடைய திருவுள்ளத்துக்குள் நடந்தது. பிசாசாய்ப்போன தேவதூதனுக்கு லூசிபர் என்று பெயர், லூசிபர் என்றால் ஒளி என்றர்த்தமாம். ஆதிக்கு முந்தி அநாதிக்கு பிந்தி இவன் கோடானகோடி தேவதூதர்களுக்குத் தலைமைவகுத்தவனும், ஒளியுள்ளவனுமாய் தேவசமூகத்தில் நின்றுகொண்டிருந்தவன். நித்யாநித்ய திருத்துவத்துக்குள் நடக்கும் ஆலோசனைகளில் எவைகள், பராபரத்தில் இவனுக்கு வெளியரங்கமாகிறதோ, அவைகளை இவன் கேட்டு, மற்றும் தூதர்களைக்கொண்டு நடத்தக்கூடியவனாயிருந்தான். நித்தியாநித்தியத்தில் பேரொளியாயிருக்கப்பட்ட அவருக்குள்ளிருப்பதையோ, இவன் பூராவாயறியக்கூடியவனல்ல.

என்றாலும் உலகத்தையும் அதன் சர்வசிருஷ்டிகளையும் சிருஷ்டிக்கப்போகிறாரென்றும், அதன் பிற்பாடு தமது ரூபத்தின்படியும் தமது சாயலின்படியும் மனுஷனை மண்ணினாலுருவாக்கி, சுயாதீன சித்தத்தையும் அவனுக்குக்கொடுத்து, அவன்நாசியில் தமது ஆவியையும் ஊதிவைத்து உலகத்தையும் அதிலுள்ள சிருஷ்டிகள்யாவையும் அவனுக்குள்ளடக்கமாக வைத்து, அவைகள் எல்லாவற்றின்மேலும் ஆளுகை செய்யும் அதிகாரமும் கொடுக்கப்போகிறார்என்றும் தன்னையும் தன்னைச் சேர்ந்தவர்களெல்லாரையும் அவனுக்குக்கீழ்ப்படுத்த போகிறாரென்றுமறிந்து (எபி 1. 5, 6) தேவன்பேரொளியாயிருக்கிறாரே

இவரிலிருந்தல்லவோ யாதோ ஒரு வல்லமை புறப்பட்டு சர்வத்தையும் ஆளுகை செய்யவேண்டும்? பேரொளி தோன்றினால் சர்வமும் அழியுமே! அப்படியானால், அவருக்குள் என்னயிருக்கிறது? எதைக்கொண்டு ஆளுகைசெய்வார்''? என்று அறிய, ஆசையோடு அகங்காரமுங்கொண்டான். பிதாவாகிய பேரொளிக்குள் ஒளிமாமிசமிருந்ததை அவன் அறியாதிருந்தான். 1 கொரி. 2, 6, 8. உலகத்தோற்றத்துக்கு முன்னே, தேவன் நம்முடைய மகிமைக்காக ஏற்படுத்தினதும் (அனுப்பப்போகிறதும்) மறைக்கப்பட்டதுமாயிருந்த இரகசியமான தேவ ஞானத்தையே பேசுகிறோம். அதை இப்பிரபஞ்சத்தின் பிரபுக்களில் ஒருவனும் அறியவில்லை. அதாவது சாத்தானுக்கு தெரியாது. வெளிப்படு. 19, 13. இரத்தத்தில் தோய்க்கப்பட்ட வஸ்திரத்தைத் தரித்திருந்தார் அவருடைய நாமம் தேவனுடைய வார்த்தை என்பதே'' ஆகைபால் பிதாவாகிய ஒளிக்குள் ஒளிமாமிசதேகமாகிய கிறிஸ்து, சர்வமுமுண்டாவதற்குமுன் நமக்காக ஆயத்தமாயிருந்ததை அவன் அறியாதிருந்தான். (பிலி. 2, 6; கொலோ. 1. 15, 16; எபி. 1, 2-3; யோவான். 1, 14.)

'நான்' அதைப்பார்க்கவேண்டுமென்ற அகங்காரங் கொண்டு, இவன் நித்தியாநித்தியத்துக்கு நேரே எதிர்த்துப் பார்க்கத்துணிந்தான் ஆகையால் தேவன் அவனுக்குக் கொடுத்த ஒளியை உருவினார். உடனே அவன் தன்னில் தானே காரிருளாகி அகாதமுமாயினான். அகாதம் என்பதற்கு முடிவில்லாத பாதாளம் என்றர்த்தமாம் யூதா 1-6. "தங்களுடைய ஆதி மேன்மையைக் காத்துக்கொள்ளாமல், தங்களுக்குறிய வாசஸ்தலத்தை விட்டுவிட்ட தூதர்களையும் மகாநாளின், நியாயத்தீர்ப்புக்கென்று நித்திய சங்கிலிகளினாலே கட்டி அந்தகாரத்தில் அடைத்துவைத்திருக்கிறார்.'' 2பேதுரு 2, 4. "பாவம் செய்த தூதர்களை தேவன் தப்ப விடாமல், அந்தகார சங்கிலிகளினாலேகட்டி, நரகத்திலே தள்ளி நியாயத்தீர்ப்புக்கு வைக்கப்பட்டவர்களாக ஒப்புக்கொடுத்து'' ஏசாயா: 14. 12-20 வரை பார்க்கவும்.

படிப்பினை:—யூதா அப்போஸ்தலன் ஆதிமேன்மை அவர்களுக்கு இருந்ததென்றும் அதை அவர்கள் காத்துக் கொள்ளவில்லையென்றும், அவர்களைக் கட்டிப்பூட்டிய சங்கிலி நித்தியமென்றும், கீழே அந்தகாரத்தில் அடைத்துப்போட்டாரென்றும் சொல்லுகிறான். பேதுரு அப்போஸ்தலன்; அவர்கள் தேவனுக்கு விரோதமாய்ப்பாவம் செய்தார்களென்றும், மேலே அவர்களை கட்டியது இருளின் சங்கிலியென்றும், கீழே நரகமென்றும், அதில்தள்ளி நியாயத்தீர்ப்புக்கு வைக்கப்பட்டிருக்கிறார்களென்றும் சொல்லுகிறான். ஆகையால் நரகமும், நியாயத்தீர்ப்பும், தீர்மானத்திலே ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஆகவே இக்காலத்திலுள்ள மனுமக்கள் இவனுக்குரிய புத்திக்கிசைவாய் நடப்பார்களேயானால், அவர்களும் தப்பார்கள் என்பதும் நிச்சயம். (யோபு 38, 15 துன்மார்க்கரின் ஒளி அவர்களைவிட்டு எடுபடும். மேட்டிமையான புயம் முறிக்கப்படும்).

சீஷன்:—யூதா அப்போஸ்தலன்: சாத்தானைக் கீழே தள்ளி அந்தகாரத்தில் அடைத்துப்போட்டாரென்று சொல்லுகிறானே! அவன் அதைத் திறந்துகொண்டு வந்தானென்று வேதவாக்கியங்களில் இல்லாதிருக்கும்போது, அவன் பின் காலங்களில் ஏதேன் தோட்டத்திற்கு எந்த வழியாய் வந்தான்?

குரு—தேவமுத்திரையை உடைக்க இவனுக்கு யாதொரு அதிகாரமுமில்லை. அவன் அடைக்கப்பட்ட நரகத்துக்குள்ளேதான் கிடக்கிறான். ஆதியிலே தேவன் அவனுக்குக்கொடுத்த ஒளியை அவன் பாவஞ்செய்தவுடன் உருவினபோதிலும், அவனுக்குக் கொடுத்த வல்லமையை அவர் எடுத்துக்கொள்ளவில்லை. அவன் தள்ளுண்டயிடத்தில் தானே கிடந்துகொண்டு, நினைவுக்குள் கனவுகண்ட மாதிரி, உலகமெங்கும் தன்னுடைய அந்தகாரத்தின் வல்லமையினால் பரவித்திரிய சக்தியிருப்பதால், ஏதேன் தோட்டத்தில் காணப்பட்டான்.

சிஷன்:—அந்த வல்லமையையும் ஏன் தேவன் பிடுங்காமல் விட்டு விட்டார்?

குரு:—தேவன் நீதியும் இரக்கமுமுள்ளவரென்று அநேகந்தரம் சொல்லியிருக்கிறேன். இப்படியிருக்க அவனுக்குக் கொடுத்த வல்லமையையும் அங்கே அவர் பிடுங்கியிருப்பாரானால், அவனைப்போல், மனுமக்களெல்லாரையும், "நான்" என்ற பெருமைகொண்டவுடனே, தமது நீதியின்படி, பாதாளத்தில் தள்ளியடைத்து, நியாயந்தீர்க்கவேண்டியது வரும். ஆகையினால் அவன் செய்த ஒரே குற்றத்திற்கு அவர், அவனுக்குக் கொடுத்த ஒளியை, நீதியின்படி உருவிக்கொண்டு, அவனுக்குக்கொடுத்த வல்லமையை, இரக்கத்தின்படி பிடுங்கவில்லை.

படிப்பினை:—சாத்தான் "நான்" என்கிற ஒரே பாவத்தினிமித்தம், தேவ நீதியின்படியே பாதாளத்தில் தள்ளுண்டு அடைக்கப்பட்டதுபோல, இதே அகங்காரப்பெருமைகொண்ட உலக மனுமக்களையும் அவனைப்போல உடனே பாதாளத்தில் அவர் அடைத்துப்போடாதபடி, தமது இரக்கத்தின்படியே இவர்களுக்குரிய நியாயத்தீர்ப்பைப் பின்வைத்து இவர்களெல்லாருக்கும் நீடிய பொறுமையோடு தவணை கொடுத்து, அவனுக்கு முன்வைக்கப்பட்ட நியாயத்தீர்ப்பையும் நரகத்தையும் இவர்களுக்கு எச்சரிப்பாகவும் படிப்பினையாகவும் வைத்திருக்கிறார்.

சீஷன்:—வெளிச்சத்துக்கும் இருளுக்கும் பகையாயிற்றே! பரம ஒளி வீசிக்கொண்டிருக்கிறது; மனுஷன் பரிசுத்த நிலைமையிலிருந்து தேவனை முகமுகமாய்த் தரிசித்துக் கொண்டிருக்கிறான்; நித்திய ஜீவ விருக்ஷமிருக்கிறது. இப்படி ஒளி நிறைந்த ஏதேன் தோட்டத்துக்குள் காரிருள் நிறைந்த சாத்தான் எப்படி நுழைந்தான்?

குரு:—தேவன் எதை எங்கே வேண்டாமென்று கட்டளை கொடுத்திருக்கிறாரோ, அந்த இடங்களில் மட்டும், சாத்தான் தன் செயல்களை நடத்த இடமுண்டு ஆகவே ஏதேன் தோட்டத்தில் தேவன் "புசிக்கவேண்டாம்" என்று மனிதனுக்குச் சொல்லிவைத்த நன்மை, தீமை, அறியத்தக்க விருக்ஷத்தண்டையில் இடம் அவனுக்கிருந்ததால் அவன் அங்கே போனான். மனுஷர்களுக்கு எச்சரிப்பும் படிப்பினையுமாக எழுதப்பட்டிருக்கும் சாபத்திடான வேதவாக்கியங்களை, யாவராகினும் ஆதாயத்தொழிலாக உபயோகித்து வருவார்களானால், அப்படிப்பட்டவர்களுக்கு சாத்தான் தகப்பனும், சிநேகிதனுமாயிருந்து தனக்குக் கிடைத்திருக்கும் பங்கையும் அவர்களுக்கு நியமிப்பான்.

சீஷன்:—சாத்தான் ஆதியில் ஒளியையிழந்து, பாதாளத்தில் தள்ளுண்டு அடைக்கப்பட்டிருக்கிறானே! என்ன ரூபத்தோடுகிடக்கிறான்?

குரு:-ஆதிக்கு முந்தி அநாதிக்குப்பிந்தி இவனுக்குக்கொடுத்திருந்த ஒளியை தேவன் உருவினவுடனே, அவன் காரிருள் பூண்டவனாய்மட்டுமல்ல, பாம்பு ரூபம் கொண்டு மாயையாய்த் தலைகீழாய்ச்சாடினனும் (ஏசாயா 14. 12, 20.) அவன் மேலே தள்ளுண்டயிடத்துக்கும், கீழே அவன் போய்ச் சேர்ந்த பாதாளத்தின் எல்லைக்கும் எவ்வளவு தூரமோ, உலகத்தின் சுற்றளவு அவ்வளவு தூரமாம் என்று ஞானிகள் சாதிக்கிறார்கள். அவன் தலைகீழாய் விழுந்தவுடனே வால் கொண்டு சுற்றி உலகத்தைப் பூரணவாய்ப் பொதிந்து கொண்டானும். இந்த இரகசியம் தெரிந்திருந்த அப்போஸ்தலனாகிய யோவனும், 1 யோ 5, 19ல் "உலகமுழுவதும் பொல்லாங்கனுக்குள் கிடக்கிறது" என்று சொன்னார். அவன் வால் கொண்டு உலகத்தைப் பொதிந்து பூரணவாய்ச் சுற்றிக் கொண்டவுடனே, உலகம் ஒழுங்கின்மையும், வெறுமையாயும், குழப்பமான ஸ்திதியிலுமிருந்து, காரிருளும் தண்ணீரும் கலந்துவிட்டதாம். இந்த இரகசியம் தேவனால் தெரிந்து

கொண்ட மோசே முனிவனும், ஆதி 1, 2ல் "பூமியானது ஒழுங்கின்மையும் வெறுமையுமாயிருந்தது; ஆழத்தின்மேல் இருள் இருந்தது" என்று சொல்லியிருக்கிறார். "ஆழம்" என்பதற்குத் "தண்ணீர்" என்றர்த்தமாம்.

யோபு 41. 33, 34ல் "பூமியின்மேல் அதற்கு ஒப்பானது ஒன்றுமில்லை; அது நிர்ப்பயமாயிருக்க உண்டுபண்ணப்பட்டது; அது மேட்டிமையானதை யெல்லாம், அற்பமாய் எண்ணுகிறது; அது அகங்காரமுள்ள ஜீவன்களுக்கெல்லாம் இராஜவாயிருக்கிறது" என்று கண்டிருக்கிறது. ஆகையால் "லிவியாதான்" என்பதை கடற்குதிரை யென்றும், முதலை யென்றும், திமிங்கலமென்றும் சொல்வாருண்டு. இது அப்படியல்ல; பாம்புரூபங்கொண்ட சாத்தானையே குறிக்கிறது. இவன் உலகத்தை சுற்றியிருக்கும் சமுத்திரஆழத்துக்குள் வளைந்து கிடக்கிறானும். கடைசிகாலத்தில் தேவன் தமது பலத்த வல்லமையினால் அவனைத் தண்டிப்பார் என்று ஏசாயா 27, 1ல் தெளிவாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. "அக்காலத்திலே, கர்த்தர் லிவியாதான் என்னும் நீண்டபாம்பை, லிவியாதான் என்னும் கோணலான சர்ப்பத்தையே, கடிதும் பெரிதும் பலத்ததுமான தமது பட்டயத்தால் தண்டிப்பார். சமுத்திரத்திலிருக்கிற வலுசர்ப்பத்தைக் கொன்று போடுவார்." என்றும் சங்கீ. 74, 13. "தேவரீர் உமது வல்லமையினால் சமுத்திரத்தை இரண்டாகப்பிளந்து ஜலத்திலுள்ள வலுசர்ப்பங்களின் தலைகளை உடைத்தீர் என்றிருக்கிறது."

இந்து சாஸ்திரங்களில், கிருஷ்ணனுக்கு மாயவதாரனென்றும், ஆதிநாராயணனென்றும், யாவராலும் வழக்கமாய்ச் சொல்லப்பட்டு வருகிறதுண்டு. நாரா-யண "நாரா" என்பதற்குத் தண்ணீர் என்றர்த்தமாம்; "யண" என்பதற்கு எங்கும் நிறைந்தமைந்திருந்தது என்றர்த்தமாம். ஆதியிலே உலகங்கள் உண்டாக்கப்படுவதற்குமுன் தண்ணீரால் நிறப்பப்பட்டிருந்தது என்று வேதவாக்கியம் சொல்லுகிறது.

மாயாவதாரன்:—மாயை என்பதை, இருளுக்கும், பொய்க்கும், துர்இச்சைக்கும் உலகத்துக்கும், மாம்சத்துக்கும், பெண்ணுக்கும், அவிசுவாசத்திற்கும், மாறுபாடான மறைவுக்கும், பிசாசுக்கும், மரணத்துக்கும், அழிவுக்கும் சொல்லுகிறதுண்டு. இவைகளைக்கொண்டுதான் கிருஷ்ணன் தன் செயல்களை நடத்திக்கொண்டு வருகிறான். கிருஷ்ணனைப்பற்றி மாயாவதாரன் என்றுசொல்லும்போது, இவ்வளவும் அவனுக்கு ஒப்பிடப்பட்டிருக்கிறபடியாலும், இவன் பெண்மாயையிலே பிரியப்பட்டு பலவித துன்மார்க்கமாய்க் கெட்டழிந்து திரிந்தானென்று சாஸ்திரங்கள் பலவாறாய் முறையிடுவதாலும், இவனுக்கு ஆபரணம் சர்ப்பமாயிருக்கிறதினாலும், இவனுடைய நிறம் சமுத்திரத்தண்ணீர்போல நீலவர்ணமுள்ளதாயிருப்பதாலும், இவன் பேர் நீலவர்ணன், நீலகண்டன், நீலமேகன், மாயன், பலவேஷக்காரன், என்று சாஸ்திரங்கள் சொல்லுவதாலும், தண்ணீரினாலாக்கப்பட்ட மாமிசதேகிகளுக்கெல்லாம், இவன் பெண்மாயையைக்கொண்டே தேவ ஞானத்தைத்தடுத்து, ஆத்துமாக்களைக் கெடுத்துப்போடுவானென்று தேவனுடைய சத்திய வேதம் முறையிடுகிறது. இவனை அழிம்பன், நாசகாலன் என்றும் சொல்லுகிறது. "நீங்கள் உங்கள் பிதாவாகிய பிசாசானவனால் உண்டானவர்கள். உங்கள்பிதாவின் இச்சைகளின்படி செய்ய மனதாயிருக்கிறீர்கள்......அவன் பொய்யனும் பொய்க்குப் பிதாவுமாயிருக்கிறான்." என்று யோவன் 8, 44ல் சொல்லப்பட்டிருக்கிறது. மாம்சதேகத்தில் பொதிந்திருக்கும் இரத்த சக்திக்குள் (சத்தி பெண் வேசி) அவன் கண்பார்வையின் பிரபஞ்சமாயாதோற்றத்தினுடைய கவர்ச்சியைக்கொண்டு இழுத்து, துணிகரமான கர்வத்தோடு ஆத்துமாக்களை சர்வ பாவத்துக்குள்ளும் உட்படுத்திவிடுகிறான். ஆகவே இவனுக்கு "கண்ணன்" என்ற பேருமுண்டு. 1 யோவா 2, 16. "ஏனெனில் மாம்சத்தின் இச்சையும் (பெண்ணாசை,) கண்களின் இச்சையும் (மண்ணாசை,) ஜீவனத்தின் பெருமையுமாகிய (பொன்னாசை) உலகத்திலுள்ளவைகளெல்லாம்

(மூவாசை) பிதாவினாலுண்டானவைகளல்ல; அவைகள் உலகத்தினாலுண்டானவைகள்.''

சீஷன்:—தண்ணீரினாலாக்கப்பட்ட மாமிசதேகம் என்றீர்களே! அது எப்படியாக்கப்பட்டது?

குரு:—ஆதியிலே தண்ணீர் நிறைந்திருந்தது. தண்ணீரிலிருந்து பூமியாகிய மண் உண்டாயிற்று. மண் பூமியிலிருந்து ஆகாரங்கள் உண்டாயின. ஆகாரங்களைப் போஷித்து மாமிசதேகம் உண்டாயிற்று. இதிலிருந்து இனித்திருப்பிப் பார்த்தால் மாமிசத்துக் கடுத்தது ஆகாரம்; ஆகாரங்களுக் கடுத்தது மண்; மண்ணுக்குமுன் தண்ணீர். ஆகையால் தண்ணீரிலிருந்து மாமிசதேகம் ஆனது என்று சொன்னது அதிசயமில்லை. (இதைப்பற்றி வெளிப்படுத்தல் 17: 15 லும் பார்க்க.)

மாமிசதேகமுழுவதிலும் இரத்தம் பரவியிருக்கிறது. மாமிசத்தின் உயிர் இரத்தத்திலிருக்கிறது. இந்த மாமிச இரத்தத்தில் பரவியிருக்கும் உயிராகிய மாயவெளிச்சத்தைத்தான், சாஸ்திரங்களில் 'சத்தி, சிவன்' என்றும், (சத்தி=இரத்தம்; சிவன்=உயிர்), 'மனோன்மணித்தாய்' என்றும், 'வாலைப்பெண்' என்றும், 'பராசத்தி' என்றும், 'சிறுபெண்' என்றும், 'யௌனஸ்திரி' என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த 'சத்தி'யாகிய பெண்ணை, 'மாமிசதேகங்களுக்கெல்லாம் தாய்' என்றும், அவள் 'விபசாரி' என்றும் அநேக சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

சத்திய வேதத்திலும் இவள் 'பாபிலோன் மகாவேசி என்றும், தண்ணீர்களின் மேல் வீற்றிருந்தாள்' என்றும், 'இரத்தாம்பர சிவப்பான ஆடை தரித்திருந்தாள் என்றும், 'வேசிகளுக்கும் பூமியிலுள்ள அருவருப்புகளுக்கும் தாய்' என்னும் நாமம் அவள் நெற்றியில் எழுதியிருந்தது என்றும்

(வெளி: 17. 1-5 லும், வெளி: 17. 15 லும் பார்க்க) எழுதப்பட்டிருக்கிறது. சகரியா: 5. 5-8 வரையில் இவள் அக்கிரமக்காரி' யென்றும், மரக்காலாகக் காணப்படுகிற இந்த உலகமெங்கும் 'மாயையாய் நிறைந்திருக்கிருள்' என்றும், இவள் மாயையினலே உலகத்திலுள்ள ஜனங்களெல்லாரும் கண்ணுக்குத்தோன்றிய சிருஷ்டிப்பொருள்களை தெய்வயாகப்பாவித்துக் கும்பிட்டார்களென்றும் (ரோ: 1. 25), ஆகையால் அவர்கள் கண்காக்ஷியாகிய இப்பிரபஞ்சத்தின் மாயையைக்கண்டு நம்பி மோசம்போய், மனக்காக்ஷியிலளிக்கும் கிறிஸ்துவின் சத்தியத்தையோ விட்டு, அதைப்பற்றிக்கொள்ள மனமற்றுப் போனுர்களென்றும் (ரோமர்: 1. 28.) சகரியாவுக்குக்கர்த்தருடைய தூதன் வெளிப்படுத்தியிருக்கிருன். இதைப்பற்றி எரேமியா தீர்க்கதரிசியும் 15-ம் அதிகாரம் 9-ம் வசனத்தில் "எழு பிள்ளைகளைப் பெற்றவள் களைத்துப்போகிருள். அவள் தன் பிராணனை விட்டுவிட்டாள் இன்னும் பகலாயிருக்கையில் அவள் சூரியன் அஸ்தமித்தது. வெட்கமும் இலச்சையும் அடைந்தாள்" என்று சொல்லுகிருன். 'எழு பிள்ளைகளைப் பெற்ருள்" என்பதற்கு: 'இப்பிரபஞ்சத்துக்குள் மாயையிலே அந்தகாரத்துக்குரிய மாமிச சிந்தையுள்ள ஏராளமான பிள்ளைகளைப் பெற்ருள்' என்று அர்த்தமாம். 'இன்னம் பகலாயிருக்கையில்' என்ருல்: 'மாமிசத்தின் உயிர் இருக்கும்போதே' என்றர்த்தமாம். 'அவள் சூரியன் அஸ்தமித்தது' என்ருல்: 'இப்பேர்ப்பட்ட பிறவியுள்ள அந்தகாரத்துக்குரிய பிள்ளைகள் மாமிசத்திலே கொழுந்து ஆத்துமாவிலே செத்தவர்கள்' என்றர்த்தமாம்.

"இப்படிப்பட்ட அவளுடைய பிள்ளைகளையெல்லாம் கொல்லவே கொல்லுவேன்; அப்போது நானே உள்ளிந்திரியங்களையும், இருதயங்களையும் ஆராய்கிறவர் என்று எல்லா சபைகளும் அறிந்துகொள்ளும்" என்று தேவன் சொல்லுகிருர். (வெளி: 2. 23.) மாமிசசிந்தையுள்ள சந்ததியார் யாவருக்கும் தேவனுடையகிருபையும், இரக்கமும் ஒவ்வொருவரும் இரக்ஷிக்கப்படும்படிக்கு போதுமான பலவித ஏதுக்களால்

கொடுக்கப்பட்டதை அவர்கள் கண்டு, கேட்டு, அறிந்திருந்தும், சுயமாய் பாவதோஷங்களில் சிக்குண்டு சத்தியத்தைப்பற்றிக்கொள்ளாததால், தங்கள் அக்கிரம சிந்தையினாலே இருதயம் மென்மேலும் கடினப்பட்டு, தங்கள் வருத்தங்களாலும், புண்களாலும் பரலோகத்தின் தேவனைத் தூஷிப்பார்களேயல்லாமல், தங்கள் பொல்லாத கிரியைகளை விட்டு ஒருநாளும் மனந்திரும்பார்கள், என்று சத்தியவேதம் கூறுகிறது (வெளி: 16. 10. 11.)

**சீஷன்:**—கிருஷ்ணனைப்பற்றி நீங்கள் இப்படி சொன்னீர்களே! வேதத்தில் பிதா, குமாரன், பரிசுத்த ஆவி யென்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்து சாஸ்திரங்களிலும் சிவன், பிரம்மா, விஷ்ணு என்ற மூவரையும் இதற்கு ஒப்பிட்டு, இவர்கள் மூவரும் அப்படியே தங்களுக்குத் திரிமூர்த்திகளாயிருக்கிறார்கள் என்று சொல்லுகிறார்களே! இதின் விவரமென்ன?

**குரு:**—நான் சொல்லுகிற விபரங்களை நன்றாயுணர்ந்து பார். பொதுவாக உலகத்துக்குள் எத்தனையோ மார்க்கங்களிலும், பலவித சாஸ்திரங்களிலும், இயற்கையாகவே தெய்வம் ஒருவர்தான் உண்டென்று யாவரும் ஒன்றுபோல் சாதிப்பதுண்டு. தெய்வமானால், மூன்று இலக்ஷணங்களிருக்கவேண்டும். இந்த மூன்று இலக்ஷணங்களும் எந்த மார்க்கத்தில் சொல்லப்பட்ட தெய்வத்திற்கு இருக்கிறதாகக் காணப்படுகிறதோ அந்த மாக்கத்தில்சொல்லப்பட்டவரே சர்வத்திற்கும் மேலான பூரணதெய்வமென அறிந்துகொள்.

**சீஷன்:**—அந்த மூன்று இலக்ஷணங்கள் எவை?

**குரு:**—(1) சுத்தபரிசுத்தம். (2) சர்வஒளிமயம். (3) நித்தியாநித்தியம். இந்த மூன்று இலக்ஷணங்களும் எவரிடத்திலிருக்கிறதோ, அவரே தெய்வமாகும். அப்படி

இல்லாமல், இவைகளில் ஏதாவது ஒன்று குறைவிருந்தால், அது தெய்வமாகாது; அதற்கு இராக்ஷதலக்ஷணம், அல்லது மனுஷலக்ஷணம், அல்லது நீசலக்ஷணம், அல்லது அவலக்ஷணம் என்றுதானாகும். மேற்சொன்ன மூன்று இலக்ஷணங்களும், சர்வலோக சமரசசம்மந்த சர்வசிஷ்டிகளைப் பற்றிய சாஸ்திரங்களிலும், கிறிஸ்துவுக்குமட்டும் காட்டுமே யல்லாமல், வேறே எந்தத்தெய்வமென்று அல்லது தேவர்கள் தேவிகளென்று பேர்பெற்றதுகளுக்கு இல்லை.

(1) சுத்தபரிசுத்தம். நக்ஷத்திரங்களும் அவர் (கிறிஸ்துவின்) பார்வைக்கு சுத்தமில்லையென்றும் (யோபு: 25. 4.) வானங்களும் அவர் பார்வைக்குச் சுத்தமானவை களல்லவென்றும் (யோபு: 15. 15.) தமது பரிசுத்தவான் களென்றும் பேரெடுத்த எவர்களையும் அவர் மதிக்கிறதில்லை யென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படியே சர்வ லோகத்திலுமுள்ள சர்வசிருஷ்டிகளும் அவருடைய பரிசுத் தத்துக்கு ஈடானதல்லவென்று வேதவாக்கியங்களில் திட்ட மாய் சொல்லியிருப்பதால், அவர் சுத்தாசுத்த பரிசுத்தங் களுக்கெல்லாம் மேலான பரிசுத்தமாயிருக்கிறார் என்று தெளிவாய் விளங்குகிறது. ஆகையால் வெளி: 4. 8ல், தெய்வலோகத்திலுள்ளவர்களெல்லாரும் கிறிஸ்துவைத் திரி கால சம்மந்தமுள்ளவரென்றும், பரிசுத்தர்! பரிசுத்தர்!! பரிசுத்தர்!!! என்றும் ஓயாமல் முழங்கிக்கொண்டிருக்கிறார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியானால் நீச தத்து வமுள்ள மனுமக்களெல்லாரும் கிறிஸ்துவை ஈசனே என்று ஏன் வணங்கக்கூடாது?

(2) சர்வ ஒளிமயம். சர்வலோகங்களிலுள்ள ஒளிக ளெல்லாம் கிறிஸ்து வீற்றிருக்கும் சிம்மாசனத்தின் ஒளிக்கே நிகரல்லவென்றும், அவர் ஒருவரே நித்தியா நித்தியமாயிருக் கிறவரென்றும் சர்வலோகங்களுக்கெல்லாம் ஏகசக்ராதிபதி யான நித்திய இராஜாவென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. 1. தீமோ: 6. 15, 16.

படிப்பினை:—பாவத்திலே பிறந்து மரணத்துக்குள்ளாகி நரகத்துக்குப் பாத்திரமான நாமெல்லாரும், இப்படி நித்தியா நித்தியத்துக்குரியவராயிருக்கிற கிறிஸ்துவையே தெய்வமாகக்கொண்டு, பயபக்தியோடே கீழ்ப்படிந்து, விசுவாசத்தின்மூலமாய் அவர் நமக்குக்கொடுக்கிறேன் என்று சொன்ன நித்திய ஜீவனைப்பெற்றுக்கொள்ளத் தீவரிப்போமாக. (1 யோவான்: 2. 25.) அப்போஸ்: 4. 12லும், வானத்தின்கீழெங்கும் மனுஷர்களுக்குள்ளே, நாம் இரக்ஷிக்கப்படும்படிக்கு இயேசு என்னும் நாமத்தைத்தவிற வேறொரு நாமம் கட்டளையிடப் படவில்லை யென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'கிறிஸ்துவில் எவ்வளவேனும் இருள் இல்லை'. (1 யோவான் 1. 5.) அப்படியானால் தம்மில்தாமே என்றென்றைக்கும் பேரொளியான சுயம்பிரகாசமாய் இருக்கிறவராகவேயிருக்கிறாரென்று விளங்குகிறது. அப்படியே நான் உலகத்துக்கு ஒளியாயிருக்கிறேன்' (யோவா: 8. 12.) என்று சொன்னார். சொன்னவர்தாமே தாபோர்பர்வதத்தில் சீஷர்கள் முன்னாலே தமது திருவுள்ளம் திறக்கப்பட்டு சர்வமகத்துவத்தின் வல்லமையான ஜீவஒளி வெண்சூரியனைப்போல பிரகாசித்தது. சீஷர்கள் அந்த ஒளிக்குள் மோக்ஷத்தையும் அதிலிருந்தவர்களையும் தெளிவாய்க்கண்டார்கள். (மத்தேயு: 17. 2.) ஆகவே அவருடைய கடந்தவுள்ளமே விசுவாசிகளுக்கு மோக்ஷலோகமாயிருக்கிறது.

இவர் பழைய எற்பாட்டின் காலத்திலும் சீனாய்மலையில் பேரொளியாய் நின்று மோசேக்கு வேதத்தைக் கையில் கொடுத்தவர். (யாத்தி: 19. 10.) இவருக்கு நீதியின் சூரியன் (மல்கி: 4. 2.) வெண்ணிலா வெண்சூரியன் என்றும் பெயர்களுண்டு. மரித்து அடக்கம் பண்ணப்பட்டு நான்கு நாளான ஒரு பிரேதத்தை ஒரேவார்த்தையினால் உயிர்கொடுத்து வெளியாக்கின வார்த்தையாகிய தேவனும் இவரே (யோவா: 11. 43. 44.)

இப்படி என்றென்றைக்கும் உயிரோடிருக்கிற நித்திய தெய்வத்தை விட்டுவிட்டு செத்துப்போன தேவர்களையும் தேவிகளையும் வணங்குவது எவ்வளவு வெட்கமும், ஈனத்தனமும், பரிதாபமுமாயிருக்கிறது.

(3) நித்தியாநித்தியம். அவர் இருக்குமிடத்தில் இரவு பகலில்லையென்றும் (சகரி: 14. 7.) அங்கே இராக்காலமில்லை, உலகங்களிலுள்ள வெளிச்சங்களெல்லாம் அதற்கு வேண்டுவதுமில்லை; கிறிஸ்துவே நித்தியாநித்தியமுள்ள ஞான ஒளியாய்ப் பிரகாசிக்கிறாரென்றும் (வெளி: 22. 5.) சொல்லப்பட்டிருக்கிறது.

ஆகையால் கிறிஸ்துவே இந்த மூன்று லக்ஷணங்களுக்குரிய மெய்த்தேவனாகிய ஒருவராய் இருக்கிறாரென்று சத்தியத்தின்படி பிரத்தியக்ஷமாய் விளங்குகிறது.

**சீஷன்:**—சாத்தான் பாதாளத்தில் தள்ளப்பட்டானென்றும், உலகத்தைச் சூழ்ந்துகொண்டிருக்கிறானென்றும் சொன்னீர்களே! வெளி: 12. 3ல் சொல்லியிருக்கிற சாத்தான் வால்தலையோடு சிவப்பு நிறமுள்ளவனாய் வானத்திலிருக்கிறானென்றும், அவன் வால்கொண்டு வானத்தின் நக்ஷத்திரங்களில் மூன்றிலொருபங்கைஇழுத்து பூமியில் விழத்தள்ளிவிட்டானென்றும் சொல்லப்பட்டிருக்கிறதே! இந்த சாத்தானுடைய இரகசியமென்ன?

**குரு:**—இது சாத்தானுமல்ல; வானத்திலிருந்தவனுமல்ல; வாலுந்தலையுமல்ல; நக்ஷத்திரமுமல்ல. முடிவுகாலத்தில் வலுசர்ப்பமாகிய பிசாசின் அந்தகார ஆவியின் தந்திரோபாயத்தினால் பீடிக்கப்பட்டு சத்தியத்தைப் பொய்யாக மாற்றிப் போதிப்பவர்களால் நடக்கும் இரகசிய சம்பவங்கள் இதனால் வெளியாயிருக்கிறது. வால்தலையைப் பின்னால் கவனிப்போம்; நக்ஷத்திரங்களை இப்போது கவனிப்போம்.

தானி: 12 7-10ல் 'அப்போது சணல் வஸ்திரம் தரித்தவரும்: ஆற்றின் தண்ணீர்களின்மேல் நிற்கிறவருமான புருஷன் தமது வலதுகரத்தையும், தமது இடதுகரத்தையும் வானத்துக்கு நேராக ஏறெடுத்து, ஒருகாலமும், காலங்களும், அரைக்காலமும் செல்லுமென்றும், பரிசுத்த ஜனங்களுடைய வல்லமையைச் சிதறடித்தல் முடிவுபெறும்போதே இவைகளெல்லால் நிறைவேறித்தீருமென்றும் என்றென்றைக்கும் ஜீவித்திருக்கிறவர்பேரில் ஆணையிடக்கேட்டேன். அதைக்கேட்டும் அதன்பொருளை நான் அறியவில்லை.' திரும்பிப்போய்: 'என் ஆண்டவனே! இதின் முடிவு என்னமாயிருக்கும்' என்று கேட்டேன். அதற்கு அவன்: 'தானியேலே போகலாம்; இந்த வார்த்தை முடிவுகாலபரியந்தம் புதைபொருளாக வைக்கப்பட்டும் முத்தரிக்கப்பட்டுமிருக்கும். அநேகர் சுத்தமும், வெண்மையுமாக்கப்பட்டு புடமிடப்பட்டவராய் விளங்குவார்கள். துன்மார்க்கரோ துன்மார்க்கராய் நடப்பார்கள். துன்மார்க்கரில் ஒருவனும் உணரான். ஞானவான்களோ உணர்ந்துகொள்வார்கள்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'சணல் வஸ்திரம் தரித்தவரும் தண்ணீர்களின்மேல் நிற்கிறவருமாகிய புருஷன்' என்று சொல்லப்பட்டவர் 'ஜனங்களுக்கு அதிபதியாகிய கிறிஸ்து'. 'பரிசுத்த ஜனங்களுடைய வல்லமையைச் சிதறடிக்குதல்' என்பது இக்காலத்தில் கிறிஸ்துவின் ஒளியை இருதயத்தில் பெற்றுக்கொண்ட பூரணவிசுவாசிகளுக்கு சத்தியத்தினிமித்தம் வரும் கொடிதான துன்பங்களையும், மார்க்கபேதகங்களால் வரும் ஆபத்துகளையும், கள்ளப்போதகர்களுடைய போதனையால் அவர்களுடைய அன்பு குன்றி, அவர்கள் மனச்சோர்வடைந்து, ஒட்டுறவற்று மனவேதனையால் தளும்பித்திரிகிற விதத்தையும் காட்டுகிறது. ஆகையால் நக்ஷத்திரமாய்க்காணப்பட்டது நக்ஷத்திரமல்ல; கிறிஸ்துவின் ஒளியைப்பெற்றுக்கொண்ட இக்காலத்து விசுவாசிகளையே குறிக்கிறது. தானி. 12. 3ல் 'ஞானவான்கள் ஆகாயமண்டலத்தின் ஒளியைப்போலவும், அநேகரை நீதிக்குள்படுத்துகிறவர்கள் நக்ஷத்திரங்களைப்போலவும் என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களிலும் பிரகாசிப்பார்கள்' என்றும்,

ஆதி: 22. 17ல் 'உன்சந்ததியை வானத்தின் நக்ஷத்திரங்களைப் போல பெருகப்பண்ணுவேன்' என்றும், வேதத்தில் இன்னும் பல இடங்களில் 'விடிவெள்ளி நக்ஷத்திரம் உங்கள் இருதயங்களில் உதிக்கும்' என்றும், 'நீங்கள் விடிவெள்ளி நக்ஷத்திரத்தைப்போலிருப்பீர்கள்' என்றும், விடிவெள்ளியின் நக்ஷத்திரத்தை உங்களுக்குக்கொடுப்பேன்' என்றும் (வெளி: 2. 28.) சொல்லப்பட்டிருக்கிறபடியால், 'நக்ஷத்திரங்கள்' என்பது கிறிஸ்துவின் விசுவாசிகளையே குறிக்கிறது.

**சீஷன்:**—மேற்சொல்லியவைகளினால் விசுவாசிகள்தான் நக்ஷத்திரங்களைப்போல் காணப்படுகிறார்களென்று தெளிவாகிறது. வாலும் தலையும்கொண்டல்லவோ பூமியில் தள்ளிவிட்டது? இதின் கருத்தென்ன?

**குரு:**—அது வாலுந்தலையுமல்ல; வானத்திலிருக்கிற சாத்தானுமல்ல! இதனுடைய கருத்து என்னவென்றால்: சிருஷ்டிகரைத் தொழுது சேவியாமல், அவர் உண்டாக்கின உலக சிருஷ்டிகளைத் தெய்வமாகத் தொழுது சேவிக்கும்படி உலக சாஸ்திரங்களை சத்தியத்தைப்போல காட்டி கள்ளத்தனமாய்ப் போதித்துக் கெடுத்துப்போடுகிற லௌகீக ஞானிகளையும், சத்தியத்தையறிந்தும் மனசாக்ஷியிலே சூடுண்ட பொய்யராய் வஞ்சிக்கிற ஆவிகளுக்கும், பிசாசுகளின் உபதேசங்களுக்கும், செவிகொடுத்து கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்தைவிட்டுத் தாங்கள் விலகி தங்களைக் கெடுத்துக்கொள்ளுகிறதுமல்லாமல் சத்தியத்தைப் பற்றிக்கொண்டிருக்கிற அற்பவிசுவாசிகளையும் பிசாசின் வஞ்சகத்துக்குட்படுத்திப்போடுகிற கள்ளப்போதகர்கள், கள்ளப்பிரசங்கிகளையே குறிக்கும். இவர்களே வாலும் தலையுமாம். ஏசாயா: 56. 10-12ல் சொல்லியிருக்கிறதாவது:—அவனுடைய காவற்காரர் ஒன்றுமறியாத குருடர்; அவர்கள் எல்லாரும் குலைக்கமாட்டாத ஊமையான நாய்கள்; தூக்கமயக்கமாய்ப் புலம்புகிறவர்கள்; படுத்துக்கொள்ளுகிறவர்கள்; நித்திரைப்பிரியர்; திருப்தியடையாமலிருக்கும் பெரு

வயிற்று நாய்கள்; பகுத்தறிவில்லாத மேய்ப்பர்; அவர்களில் ஒவ்வொருவனும் தன்தன் வழியையும், அவனவன் தன்தன் மூலையிலிருந்து தன்தன் பொழிவையும் நோக்கிக்கொண்டிருக்கிறுன். "வாருங்கள்! திராக்ஷரசத்தைக் கொண்டுவருவேன்; மதுவைக்குடிப்போம்; நாளையதினம் இன்றைய தினம்போலவும் இதற்கு அதிகமாகவும் இருக்கும்" என்பார்கள். (கள்ளப்போதகர்கள்.) இப்படித் தந்திரோபாயமாய்ப் போதிக்கிறவர்களுடைய சீர்கேட்டை இக்காலத்துப் பூரணவிசுவாசிகள் கண்டறிந்து மனத்தளர்ச்சியுள்ளவர்களாய் அவர்களை விட்டு விலகித்திரிகிறபாவனையைக் காட்டியிருக்கிறதால்தான் ஏசாயா: 9. 13-15ல் இப்படிப்பட்ட போதகர்களை 'வாலும் தலையும்' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

"ஜனங்கள் தங்களை அடிக்கிறவரிடத்தில் திரும்பாமலும் சேனைகளின் கர்த்தரைத் தேடாமலும் இருக்கிறுர்கள். ஆகையால் கர்த்தர் இஸ்ரவேலிலே தலையையும் வாலையும் கிளையையும் நாணலையும் ஒரே நாளிலே வெட்டிப்போடுவார். மூப்பனும் கனம் பொருந்தினவனுமே (அந்த) தலை. பொய்ப் போதகம் பண்ணுகிற தீர்க்கதரிசியே (அந்த) வால்."

சீஷன்:—பிசாசின் வரலாறு சொன்னீர்கள் தேவன் மனுஷனை, மண்ணெடுத்து, தம்மைப்போலுண்டாக்கி, அவன் நாசியில் ஜீவ சுவாசத்தை ஊதினுர். அவன் ஜீவாத்துமாவானுன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. மண்ணினுல் இவனை மட்டும் உண்டாக்கினுரா? மற்றும் எந்த ஜீவராசிகளையாவது இப்படியே உண்டாக்கினுரா?

குரு:—நீ கேட்கிறது சரியே. இது எளிதில் வெளியாகி அறியப்படக்கூடியதல்ல. முதலாவது நீதி சாஸ்திரம், இரண்டாவது நியாய சாஸ்திரம், மூன்ருவது தத்துவ சாஸ்திரம், நாலாவது தர்க்க சாஸ்திரமாகிய இவைகளில் பலவாருய்ப் பொருள் பொறுக்கி, ஐந்தாவது சத்தியவேதமாகிய அருள் சாஸ்திரத்தில் முடிவு கட்டினுல்மட்டும், எதும் முடிவுக்குவரும்.

மிருகங்களையும், பறவைகளையும் மண்ணினாலே உருவாக்கினார். ஆதி: 2. 19ல் "தேவனாகிய கர்த்தர் வெளியின் சகலவித மிருகங்களையும் ஆகாயத்தின் சகலவித பறவைகளையும் மண்ணினாலே உருவாக்கினார்" என்று சொல்லியிருக்கிறது.

சிஷன்:—அப்படியானால் மனுஷனுடைய தேகத்துக்கும், மிருகங்கள் பறவைகளின் தேகத்துக்கும் வித்தியாசமென்ன?

குரு:—வித்தியாசமில்லை; ஆயினும் மனிதனுடைய நாசியில் தேவன் ஜீவசுவாசத்தை ஊதினதுமட்டும் வித்தியாசம். மற்றபடி அவன் மிருகத்துக்குச்சமானம் என்பதற்கு வேத வாக்கியத்தைக்கொண்டே உனக்கு விபரம் சொல்லுகிறேன். பிரசங்கி: 3. 18-21. "மனுப்புத்திரர் தாங்கள் மிருகங்களைப்போல் இருக்கிறார்களென்பதை அவர்கள் காணும்படிக்கு தேவன் அவர்களைச் சோதிக்கிறாரென்று நான் மனுஷனுடைய நிலைமையைக்குறித்து என் உள்ளத்தில் எண்ணினேன். மனுப்புத்திரருக்குச் சம்பவிக்கிறது, மிருகங்களுக்கும் சம்பவிக்கும். அவர்களுக்கும், இவைகளுக்கும் ஏக சம்பவமுண்டு. இவைகள் சாகிறதுபோலவே அவர்களும் சாகிறார்கள். ஜீவன்களுக்கெல்லாம் சுவாசம் ஒன்றே. மிருகத்தைப்பார்க்கிலும் மனுஷன் மேன்மையுள்ளவனல்ல. எல்லாம் மாயையே. எல்லாம் ஒரே இடத்துக்குப்போகிறது. எல்லாம் மண்ணிலே உண்டாகிறது. எல்லாம் மண்ணுக்குத்திரும்புகிறது. உயர ஏறும் மனுஷனுடைய ஆவியையும், தாழப்பூமியிலிரங்கும் மிருகங்களுடைய ஆவியையும் அறிகிறவன் யார்?

சிஷன்:—உயர ஏறும் மனுஷனுடைய ஆவியென்றும், தாழப்பூமியிலிரங்கும் மிருகங்களுடைய ஆவியென்றும் சொல்லப்பட்டிருக்கிறதே! அதற்கும் இதற்கும் வித்தியாமென்ன?

குரு:—உயர ஏறும் மனுஷனுடைய ஆவியைப்பற்றி

பின்சொல்லுகிறேன்; தாழப்பூமியிலரங்கும் மிருகங்களுடைய ஆவியைப்பற்றி இப்போது கவனிப்போம். தரையிலும் ஆகாயமார்க்கங்களிலும் உலாவுகிற ஜீவராசிகள்: நான்கு அவைகளாவன:—ஆகாயத்துப்பறவைகள்: மிருகங்கள்; ஊர்வனங்கள்; மனுஷர். இன்னும் தத்துவசாஸ்திரத்தின்படி நயனபாஷையின் மௌனசாதனத்தினுள் அடங்கியிருக்கும் ஜீவராசி ஒன்றுண்டு. அதாவது தாவரங்களே. இவைகளுக்கு 'மூலராசிகள்' என்று பெயர். இவைகள் நின்ற இடத்திலேயிருந்து மூச்சுவிடுகின்றன. ஆகையால் இவைகளுக்கு ஜீவன் உண்டு.

'ஜீவசுவாசராசிகள்' என்றால், ஜீவனோடு சுவாசமும் சேர்ந்திருப்பதால், தாவரங்களைப்போல் நின்றயிடத்திலேயிருந்து மூச்சுவிடுகிறதுமாத்திரமல்ல, இவைகளுக்கு ஜீவனோடு சுவாசமும் பிரத்தியேகமாய்ச் சேர்ந்திருப்பதால், இவைகள் ஓடியும் நடமாடியும் திரியும். பறவைகள், ஊர்வனம், மிருகங்கள், மனுஷருடைய நாசியில் வெளியாகாயத்தை சுவாசிக்கும் சுவாசத்தோடுசேர்ந்த மாமிசதேகம் ஆகிய இவைகள் 'ஜீவசுவாசராசிகள்' என்று சொல்லப்படும். இவைகள் மண்ணிலே தோன்றி, மண்ணைத்தான் ஆகாரமாகப்போஷித்து, மறுபடியும் மண்ணாய்மாறி, நாசியின் சுவாசம் வெளி ஆகாயத்தோடு சென்றுவிடுகிறது.

மாமிசதேகத்தில் அடங்கிய தத்துவம்: ஊண், உரக்கம், போகம். (ஊண் என்பது உலகசிருஷ்டி முழுமையையும் போஜனமாய்க்கொள்ளுகிறது.) இம்மூன்றுதான் மாமிஷத்திலடங்கிய தத்துவம். இவைகள் இப்பிரபஞ்சத்தோடே அழியும். ஆகையால்தான் சத்தியவேதத்தில் இவைகளை 'மிருகத்தின் ஆவிக்கு' ஒப்பிட்டிருக்கிறது.

ஆத்தும விஷயத்தைப்பற்றி பலரும் பலவிராய் சாஸ்திரங்களில் சொல்வதுண்டு. சிலர், 'ஜீவாத்மா, பரமாத்மா,

அந்தராத்மா' என்றும், சிலர், 'ஸ்தூலதேகம், சூக்குமதேகம், காரணதேகம்' என்றும், சிலர், 'அத்வைதம், துவிதம், துவிதாயுதம்' என்றும் சொல்வதுண்டு. அருள் வேதத்திலும் 'ஆவி, ஆத்துமா, சரீரம்' என்னும் மூன்றுபாகங்களுள்ள ஒருவனுக மனுஷன் உருவாக்கப்பட்டான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. (1 தெச: 5, 23.)

அத்வைதம் என்பது: 'ஏகத்வம் பரப்ர்மம்; பரப்ர்மம் ஏகத்வம்.' வேதத்தில் 'சரீரம்' என்று சொல்லியிருக்கிறது. அதற்கு 'ஸ்தூலதேகம்' என்று பெயர். இதின் தொகுப்பாவது: இப்பிரபஞ்சத்தின் சர்வசிருஷ்டிகளிலும் ஜீவன் உண்டென்பதேயாம். இதின் முடிவு என்னவென்ருல்:— 'இவைகள் எவரிடத்திலிருந்து தோன்றினதோ, அவரிடத்தில் அடங்கிக்கொள்ளும். ஆகையால், பாவமென்ன! புண்ணியமென்ன! நீ என்ன! நான் என்ன! மோக்ஷமென்ன! நரகமென்ன! என்று மனுஷன் தான் முடிவிற்குக் கொண்டுவர முடியாத தேவனுக்குள்ளடங்கி நிற்கும், இயற்கைபிரமாணத்தில் புத்தியைச்செலுத்தி வீண் பிடிவாதமான வாயாடித்தனம் பண்ணி, நாஸ்தீகனுய்க்கெட்டுப்போயிருக்கிருன். இதுவே 'அத்வைதம்' 'இரண்டல்ல; சர்வமும் ஒன்றே ஒன்று' என்று அர்த்தமாம். துவக்கத்திற்கும் முடிவிற்கும் மூல காரணகர்த்தாவாகிய கிறிஸ்துவேயல்லாமல் மனுஷன் முடிக்க எம்மாத்திரம்?

'துவிதம்' என்பது: 'இரண்டு' தத்துவசாஸ்திரத்தின் படி 'பரமாத்மா' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதற்கு வேதத்தில் 'ஆத்துமா' என்று பெயர். ஏசாயா: 34, 16ல் 'ஜோடில்லாமல் சிருஷ்டிகளில்லை' என்று சொல்லியிருக்கிறது. தேவன் ஒருவர். அவர் உண்டாக்கின சிருஷ்டிகள் வேறு. 'சிருஷ்டிகளில் ஜோடு உண்டு. இவரோ சுயம்பிரகாசமாய் தம்மில் தாமாயிருக்கிறவர். சிருஷ்டிகளோ அவரால் உண்டாக்கப்பட்டன. ஆகையால் சிருஷ்டிகர் வேறு; சிருஷ்டிகள் வேறு. இதுதான் 'துவிதம்' அதாவது இரண்டு. (ஜோடு).

'துவிதாயுதம்':—என்பது 'காரணதேகம்'. கிரந்தசாஸ்திரத்தின்படி 'அந்தராத்மா' என்று சொல்லப்பட்டது. சத்திய வேதத்தில் 'ஆவி' என்று சொல்லப்பட்டிருக்கிறது. சத்தியத்துக்காக ஒருவன் இந்தப்பிரபஞ்சமாகிய உலகத்துக்கும் பாவத்துக்கும் மாமிசத்திலே செத்து ஆத்துமாவிலே ஆவியோடு கிறிஸ்துவுக்குள் உயிராகி, ஆதிமனுஷன் இழந்துவிட்ட அருணோதயமாகிய தேவசாயலின் ஒளியை கிறிஸ்துவினிடத்தில் திரும்பப்பெற்றுக்கொண்டு அவரோடு ஐக்கியப்படுவதேயாம் இதுவே 'துவிதாயுதம்' என்னப்படும். ஏசாயா: 60, 1-2, "எழும்பிப்பிரகாசி. உன் ஒளி வந்தது. கர்த்தருடைய மகிமை உன்மேல் உதித்தது. இதோ இருள் பூமியையும், காரிருள் ஜனங்களையும் மூடும். ஆனாலும் உன்மேல் கர்த்தர் உதிப்பார். அவருடைய மகிமை உன்மேல் காணப்படும்." 1 தெசலோ: 5, 23ல் உங்கள் ஆவி, உங்கள் ஆத்துமா, உங்கள் சரீரமென்றிருக்கிறது. இதில் நாம் கவனிக்கவேண்டிய முக்கிய குறிப்புகள்:—தேவன் மனுஷனை மண்ணினாலே உருவாக்கி, தமது ஜீவசுவாசத்தை அவனுக்குள் ஊதிவைத்து, உலகத்தை ஆளத்தக்க சுயாதீன சித்தத்தையும் அவனுக்குக் கொடுத்திருந்தார். இவன் பாவம் செய்யுமுன் என்ன வரிசைக்கிரமமாயிருந்தானென்றால்:—தேவனுக்கு ஆவி கீழ்ப்படிந்து, ஆவிக்கு ஆத்துமா கீழ்ப்படிந்து, ஆத்துமாவுக்கு சரீரம் கீழ்ப்படிந்து, சரீரத்துக்கு உலகம் கீழ்ப்படியவேண்டிய நிலைமையில் தேவன் அவனை வைத்திருந்தார். இவன் சுய சித்தத்தில் பாவம் செய்தவுடனே, தலைமாறி உலகத்துக்கு சரீரம் கீழ்ப்படிந்து, சரீரத்துக்கு ஆத்துமா கீழ்ப்படிந்து, ஆத்துமாவுக்கு ஆவி கீழ்ப்படிந்து, ஆவிக்கு தேவ ஐக்கியம் அல்லது சமுகம் விலகிவிட்டது. ஆகவே தேவனை நோக்கிக்கொண்டிருந்த அவனுடைய மனக்கண் அடைபட்டு, சாத்தான் சொன்னபடியே அவனுடைய மாமிசக்கண் திறந்து, அவனுடைய மனதோடு ஆத்துமா, மாமிசசம்பந்தமானபிரபஞ்சம், பிசாசு, நரகத்தையும் நோக்கினது. ஆகையால், வேதவாக்கியம் 'மனந்திரும்புங்கள்' என்று வற்புறுத்துகிறது. ஆதி: 3, 9ல் தேவன்

ஆதாமைக்கூப்பிட்டு 'நீ எங்கேயிருக்கிறுய்' என்று கேட்டார். கேள்வியின் நோக்கமென்னவென்ருல்: அவன் பாவம் செய்து வெட்கத்தினுல் ஒளித்துக்கொண்டானென்னும் கருத்தாய்க் கேட்காமல், 'பரம இராஜியத்தையும் என்னையும் உன் மனக்கண்களால் நோக்கிக்கொண்டிருந்த நீ இப்பொழுது பாதாளலோகத்தையும் பிசாசையும் நோக்கிக்கொண்டிருக்கிருயே' என்று அவனை உணர்த்திக்காட்டும் தன்மையாய்க் கேட்ட கேள்வியாம். அதோடு கூடி 'ஆதாமே! நீ எங்கே இருக்கிருய்?' என்னும் கேள்வி, 'ஆத்துமாவே! நீ இப்போது எந்த நிலைமையிலிருக்கிருய்' என்று நம்மில் ஒவ்வொருவரையும் கேட்கும் கேள்வியைப் போலாம். அதற்கு ஆதாம் 'தோட்டத்தில் உம்முடைய சத்தத்தைக் கேட்டு, நான் நிர்வாணியாயிருப்பதால் பயந்து ஒளிந்துகொண்டேன்' என்ருன் இவன் தேவசித்தத்துக்கு கீழ்படிந்திருந்த காலத்தில் அடிக்கடி மனேதத்துவத்தில் தேவசத்தத்தைக்கேட்டு ஆனந்தித்துக்கொண்டிருந்தவன். தேவசித்தத்துக்கீழ்படியாமல் பிசாசின் போதனையைக்கேட்டு தன் சுயசித்தமாய் நின்று, தேவசாயலை அல்லது ஒளியை இழந்தவுடனே, ஆத்துமா மரணநித்திரைக்குறிய ஸ்திதியில் இருந்தபடியால், 'ஒளித்துக்கொண்டேன்' என்று சொல்லுகிருன். ஒளித்துக்கொண்டேன் என்பதற்கு 'மறைவு, அவிசுவாசம், அந்தகாரம், பாவம், காரிருள், மரணம், பிசாசு, பாதாளம், என்பவைகளை நோக்கிக்கொண்டிருக்கிறேன்' எனக்கருத்தாம். ஆகையால். வேதவாக்கியத்தில் ,தூங்குகிற நீ மரித்தோரை விட்டு எழுந்திரு; கிறிஸ்து உன்னை பிரகாசிப்பார்' என்று சொல்லியிருக்கிறது. (எபேசி: 5, 14.) உலக மனுக்கள் யாவருடைய ஆத்துமாக்களும் சுவாவப்படி இப்படியே மரணநித்திரையில் இருக்கிறதாம் 'மனந்திரும்புங்கள்' என்று சொல்லும்போது தேவனுடைய வார்த்தையை நம்பி மனம் மாமிசத்துக்குள் திரும்பியிருக்கிறதைப் பற்றறவிட்டு அல்லது தன்னை மறந்து, கீழ்ப்படிதலோடு சத்தியத்தைப் பற்றிக்கொள்ள மனம் திரும்பி கிறிஸ்துவை நோக்கிப்பார்த்தால் மட்டும்

ஆதாம் இழந்துபோன காரணசரீரமாகிய தேவசாயலின் ஒளி நமக்குத் திரும்பக்கிடைக்கும்.

'விலக்கப்பட்டமரத்தின்கனியைப் புசித்தாயோ' என்று தேவன் ஆதாமைக்கேட்டார். அதற்கு ஆதாம், தன் குற்றத்தை ஒத்துக்கொள்ளாதபடி, தன் பெண்ஜாதியாகிய ஏவாள் பேரிலும், சிருஷ்டிகர்த்தாவாகிய தேவன் பேரிலும் பழிசாட்டினான். அப்படிப்போல இக்காலத்திலும் மனிதர்யாவரும் தாங்களே பாவத்தைச் செய்துகொண்டு, முகாந்தரமில்லாத வார்த்தைகளினாலே பிறர்பேரிலும், பாவங்களுக்கு தேவன் தான் காரணஸ்தர் என்றெண்ணி அவர்பேரிலும் பழிசாட்டுகிறதுண்டு. இது இயற்கையாகவே எல்லாருக்குள்ளுமிருக்கிறது.

ஆதாம் தன்பாவத்துக்கு தன் பெண்ஜாதியாகிய ஏவாள் பேரில் பழிசாட்டினதுபோல், அவனவன் தன்தன் ஆத்துமா தன்னில்தானே பாவத்துக்குள் சிக்கிக்கொண்டு தன் சரீரமாகிய ஏவாளின் பேரிலும் பழிசாட்டுகிறதுண்டு.

'விலக்கப்பட்டமரத்தின் கனியை நீ புசித்தாயோ' என்று தேவன் கேட்டபோது, 'என்னுடனே இருக்கும்படி தேவரீர் தந்த ஸ்திரியானவள் எனக்குக்கொடுத்தாள். நான் புசித்தேன்' என்கிறான். 'என்னுடனே இருக்கும்படி தேவரீர்' என்று அவன் சொல்லும்போது, கீழ்ப்படியாமை என்னும் குணத்தைக்காட்டி, அவரோடு எதிர்த்து நிற்கிறவனாகக்காணப்படுகிறான். 'ஸ்திரியானவள்' என்று சொல்லும்போது, அவள்பேரில் கடுங்கோபம்கொண்டு, அவளை ஆவிக்குள் புறம்பாக்கி, தான் அவளைவிட்டு விலகிவிடவும் யோசிக்கிறான்; தன்னை சுத்தவானைப்போலவும் காட்டிக் கொள்ளுகிறான்: இவன்செய்த பாவத்துக்கு தேவனே காரணஸ்தராகக்காட்டுகிறான், ஏவாள் ஒரு பாவம்செய்ய, ஆதாம் நான்கு பாவத்தைக் கூட்டிச்சேர்த்துக்கொண்டான்.

(ஆதி: 3. 13.) தேவனுகிய கர்த்தர் ஏவாளைப்பார்த்து, 'நீ இப்படி செய்தது என்ன?' என்று கேட்டார். அதற்கு அவள் 'சர்ப்பம் என்னை வஞ்சித்தது; நான் புசித்தேன்' என்ருள். அப்போது தேவன் சர்ப்பத்தைப்பார்த்து, 'நீ இதைச் செய்தபடியால் சகல நாட்டு மிருகங்களிலும் சகல காட்டு மிருகங்களிலும் சபிக்கப்பட்டிருப்பாய். நீ உன் வயிற்றினுல் நகர்ந்து, உயிரோடிருக்கும் நாளெல்லாம் மண்ணைத்தின்பாய். உனக்கும் ஸ்திரிக்கும், உன் வித்துக்கும் அவள் வித்துக்கும் பகையை உண்டாக்குவேன். அவர் உன் தலையை நசுக்கு வார். நீ அவர் குதிங்காலை (நசுக்குவாய்,') என்ருர்.

**சீஷன்:**—'நீ இதைச் செய்தபடியால்' என்று தேவன் சர்ப்பத்தைப்பார்த்துச் சொல்லுகிருரே! ஆதாமும் ஏவாளும் இந்தப்பாவத்தைச் செய்யாததுபோல் காணப்படுகிறதே! இதன் தார்ப்பரியமென்ன?

**குரு:**—ஆதாமும் ஏவாளும் தங்கள் சுயபுத்தியினுல் மரத்தின் கனியைப்புசியாமல், பிசாசின் வஞ்சகத்துக்குள் ளும் ஏவுதலுக்குள்ளும் அகப்பட்டுப் புசித்தபடியால், 'ஆதாம் ஏவாள் பாவத்துக்கு நீ தான் காரணஸ்தன்' என்னும் கருத் தாய், 'நீ இதைச்செய்தபடியால்' என்று சர்ப்பத்தைப்பார்த்து நீதியாய்ச் சொல்லுகிருர்.

**சீஷன்:**—'நீ உன் வயற்றினுல் நகர்ந்து மண்ணைத்தின் பாய்' என்ருல், அதற்குமுன் அது என்ன ஸ்திதியிலிருந்த தாம்?

**குரு:**—ஆதாம் ஏவாளிடத்தில் எல்லா சிருஷ்டிகளும் வந்து போய்க்கொண்டிருந்தன! ஒவ்வொரு சிருஷ்டியையும் அவர்கள் நன்ருய் அறிந்திருந்தார்கள். நிறம், சாடை, சப் தம், நடை ஒன்றுக்கொன்று வித்தியாசப்பட்டிருந்ததையும்

கண்டிருந்தார்கள். ஆனால் மனுஷனைப்போல வார்த்தைகள் பேசக்கேட்டதில்லை, சாத்தான் இந்த மாயாப்பிரபஞ்சத்துக்குள் தன் சுயசக்தியினால் பலரூபங்களாய் மாறக்கூடும். ஆகவே சர்ப்பத்தின் ரூபம்கொண்டு மனுஷர்பேசுவதுபோல் வார்த்தைகளை இவன் பேசினதினால், ஏவாள் கண்ணுற்றுக் கவனித்து, வார்த்தை கொடுக்கும்படி நேர்ந்தது. இவன் அந்தகார ஆவிக்குரியவனாகையால், அந்த வார்த்தை வழியாகவே அவள் செவியில் புகுந்து அவள் இருதயத்தைக்கவர்ந்து கொண்டான். 'உன் வயிற்றினால் நகர்ந்து' என்று தேவன் சொன்னதால், அதுமுன் பறக்கக்கூடிய சக்தியுள்ளதாயிருந்ததென்றும், 'நீ மண்ணைத் தின்பாய்' என்று சொன்னதால் முன் ஏதோ ஓர் விசேஷித்த ஆகாரத்தைப் புசித்துவந்ததென்றும் ஞானிகள் சொல்லுகிறார்கள். ஆகவே சர்ப்பம் சபிக்கப்பட்டு சாத்தானே மாறாதசாபத்துக்குள்ளானான்.

**சீஷன்**:—ஆதி: 3. 15ல் 'உனக்கும், ஸ்திரிக்கும், உன் வித்துக்கும், அவள் வித்துக்கும் பகையை உண்டாக்குவேன்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. தமக்கு எதிரில் நிற்பவளாகிய ஏவாளைப்பார்த்து, 'இவள் வித்து' என்று சொல்லாமல் 'அவள் வித்து' என்று சொல்லுவதால், வித்துக்குமட்டும் வேறொரு ஆளைக்காட்டுகிறதே! இதின் அந்தரங்கமென்ன?

**குரு**:—தேவன் மத்தியஸ்தராய் வந்து நீதி விசாரணை செய்யும்போது, 'உனக்கும் ஸ்திரிக்கும்' என்று சொன்னது:- 'பிசாசுக்கும், ஏவாளுக்கும்' சாத்தானை நோக்கி, 'உன்வித்து' என்கிறார். சாத்தானுடைய வித்து எதென்றால்:— அவன் துர் இச்சைக்கும், பொய்க்கும், சத்தியத்தை மாறுபாடு பண்ணுகிறதற்கும் தகப்பனானதால், அவைகளைச் செய்கிறவர்களெவர்களோ, அவர்களே அவனுடைய வித்தாவார்கள். அப்போஸ்: 13. 10ல், 'எல்லாக்கபடமும், எல்லாப்பொல்லாங்கும் நிறைந்தவனே, பிசாசின் மகனே, நீதிக்கெல்லாம் பகை

ஞனே, கர்த்தருடைய செம்மையான வழிகளைப்புறட்டுவதில் ஓயமாட்டாயோ' என்றிருக்கிறது. 'அவள் வித்து என்பது; சத்தியவித்தாகிய கிறிஸ்துவையே குறிக்கிறது. 1 யோவா: 3. 8-9ல் 'பாவம்செய்கிறவன் பிசாசினுலுண்டாயிருக்கிறுன். ஏனெனில் பிசாசானவன் ஆதிமுதல் பாவம் செய்கிறுன். பிசாசினுடைய கிரியைகளை அழிக்கும்படிக்கே தேவனுடைய குமாரன் வெளிப்பட்டார். தேவனுல்பிறந்த எவனும் பாவம் செய்யான். ஏனெனில் அவருடைய வித்து அவனுக்குள் பிரித்திருக்கிறது,' என்றிருக்கிறது. சாத்தான் வித்துக்குப் தறந்தவர்களின் முடிவு: அநீதியினுல் பாவத்தைச்செய்து மரணத்திற்குள்ளாகி நரகத்துக்குப்போவார்கள்; கிறிஸ்துவின் சத்தியவித்துக்குப் (சத்தியவித்து என்பது பிர்மவித்தாகும். 1 யோவா: 3. 9.) பிறந்தவர்களெவர்களோ, அவர்கள் அவரைப்பற்றும் விசுவாசத்தின் மூலமாய், மனுேதத்துவத்தில் கீழ்ப்படிதலோடு நீதியைச்செய்கிறதினுல் நித்திய ஜீவனைப் பெற்று சத்தியலோகத்துக்குப்போவார்கள். 'இவள்' என்று சொல்லாமல், 'அவள்' என்றது: மாமிச சம்பந்தமான ஏவாளைக்குறிக்காமல், ஆவிக்குரிய ஸ்திரியான 'ஞான மணவாட்டியாகிய திருச்சபையையே' குறிக்கிறது.

சீஷன்:—'இவள் எங்கே பிறந்தவள்?

குரு:—'இவள்' என்பவளாகிய ஏவாள் ஆதாமுடைய அயர்ந்த நித்திரையிலே அவனுடைய விலாவில் பிறந்தவள். வித்துக்கு 'அவள்' என்று குறிக்கப்பட்ட ஆவிக்குரிய திருச்சபையாகிய ஆத்தும தாயோ, சிலுவை மரத்திலே கிறிஸ்துவின் மரண நித்திரையில் அவருடைய திருவிலாவிலே பிறந்தவள். ஆதாமுடைய அயர்ந்த நித்திரையில் விலாவில் பிறந்த ஏவாள் பாவத்தைச்செய்து மாமிசத்துக்குரிய பிள்ளைகளைப்பெற்று மரணத்துக்குள்ளாக்கி, மரித்தோரின் தேசத்திலே புதைத்துப்போடுகிறுள். சிலுவையில் கிறிஸ்துவின் மரணநித்திரையிலே அவருடைய திருவிலாவில் ஆவிக்குரிய

திருச்சபையாகிய தாய் பிறந்து, மனோராஜியத்தில் ஆத்துமாவை உயிர்ப்பித்து பரமாராஜியத்துக்கு அழைத்துக்கொண்டுபோக வந்தவள். ஆகையால், நமக்கு மாமிசத்துக்குரிய தாயும் தகப்பனும் இருக்கிறதுபோல, ஆத்துமத்துக்குரிய தாயும் தகப்பனும் உண்டு.

சீஷன்:—மாமிசத்துக்குரிய தாயும் தகப்பனும், பழைய ஏவாளும் ஆதாமுமென்று விளங்குகிறது. ஆனால் ஆத்துமாவுக்குரிய தாயும் தகப்பனும் யார்?

குரு:—சத்தியமே தாய், பரிசுத்த ஆவியானவரே தகப்பன். ஆகிலும் இது ஒரு ஆணுமல்ல; அது ஒரு பெண்ணுமல்ல.

சீஷன்:—ஆணுமல்ல பெண்ணுமல்ல என்றால், எப்படி தாயும் தகப்பனுமாகும்?

குரு:—உன் ஆத்துமா ஆணா? பெண்ணா?

சீஷன்:—அது எனக்குத் தெரியாது.

குரு:—உனக்குத் தெரியாததால் அதன் அந்தரங்கம் சொல்லுகிறேன்; கேள். மனுஷருக்குள் வாசமாயிருக்கும் ஆத்துமா, ஆண்ரூபம் பெண்ரூபமற்று எப்படி அரூபியாயிருக்கிறதோ, அப்படியே ஆத்துமாக்களை உயிர்ப்பிக்கிற சத்தியமாகிய தாயும், ஆவியாகிய தகப்பனும் இருக்கிறார்கள். இந்தஇரகசியம் நீக்கோதேமுக்கு கிறிஸ்துவானவர் சொன்ன போதனைக்குள்ளடங்கியிருக்கிறது. யோவான்: 3. 5-8. "இயேசு பிரதியுத்தரமாக: ஒருவன் ஜலத்தினாலும், ஆவியினாலும் பிறவாவிட்டால் தேவனுடைய இராஜியத்தில் பிரவேசிக்கமாட்டான் என்று மெய்யாகவே மெய்யாகவே உனக்குச்சொல்லுகிறேன். மாமிசத்தினால் பிறப்பது மாமிச

மாயிருக்கும்; ஆவியினால் பிறப்பது ஆவியாயிருக்கும். நீங்கள் மறுபடியும் பிறக்கவேண்டுமென்று நான் உனக்குச் சொன்னதைக்குறித்து அதிசயப்படவேண்டாம். காற்றானது தனக்கு இஷ்டமான இடத்தில் வீசுகிறது. அதின் சத்தத்தைகேட்கிறாய். ஆகிலும் அது இன்ன இடத்திலிருந்து வருகிறதென்றும், இன்ன இடத்துக்குப்போகிறதென்றும் உனக்குத்தெரியாது. ஆவியினால் பிறந்தவனெவனோ அவனும் அப்படியேயிருக்கிறான்' என்றார்."

சிஷன்:—ஆண்ரூபம் பெண்ரூபமற்ற ஆத்துமாவுக்கு, ஆண்ரூபம் பெண்ரூபமற்ற தாயும் தகப்பனுமிருக்கிறதாகச் சொன்னீர்களே! தேவன் வரம்பு தவறமாட்டாரே! ஏசாயா 34, 16ல் 'ஜோடில்லாமல் சிருஷ்டிகளில்லையென்றும் சொல்லியிருக்கிறதே! உலகத்துக்குள் தாயும் தகப்பனுமில்லாமல் பிள்ளை இல்லையே! கிறிஸ்துவுக்குத் தகப்பனெங்கே?

குரு:—வேதவாக்கியத்தை நன்றாய் கவனித்துப் பார். கலாத்தியர் 6, 7ல் 'நீங்கள் மோசம்போகாதிருங்கள்; தேவன் தம்மை பரிகாசம் பண்ணவொட்டார்' என்று சொல்லியிருக்கிறது. ஆகையால் நாம் இதையறியாமல் மனுஷன் புத்திக்கு விளங்காத தேவகாரியங்களில் தலையிட்டுக்கொள்வோமென்றால், அவரே நம்மைப்பரிகாசம்பண்ணி புறம்பே தள்ளிப் போடுவார் என்று தீர்மானித்துக்கொள். ஆதியிலே ஆதாமை பத்துமாதம் சுமந்து பெற்ற தாய் இல்லை. கிறிஸ்துவுக்கோ தகப்பனில்லை. ஆகையால் மனிதனுக்குத் தாய் இல்லை; தெய்வத்துக்குத் தகப்பனில்லை. இந்தப்பரம இரகசியம் தெரிந்த மட்டும் சொல்லுகிறேன், கேள். கிறிஸ்துவுக்கு ஏன் தகப்பனிருக்கக்கூடாதென்றால்: சர்வலோகங்களிலுள்ளவைகளெல்லாம் அவருக்குள்ளிருந்து வெளியரங்கமாய்த்தோன்றினதால், அவரே சர்வத்துக்கும் மேலான தகப்பனாய், தாயாய்த்தாமே சுயம்புவாய் இருக்கும்போது, நீதியின்படியே கிறிஸ்துவுக்குத் தகப்பனிருக்கக்கூடாது. இது இயற்கை.

சிருஷ்டிப்புகளின்படியும் இவருக்குத் தகப்பனிருக்கக் கூடாது. எப்படியென்றால்: ஆதித்தகப்பனாகிய ஆதாம் தேவன் கொடுத்த நீதியின் சட்டத்தை, அவன் சரீரத்தின் அவயவங்களில் ஒன்றாகிய மாமிசமான கையை நீட்டி, செய்கையில் மீறி கனியைத்தொட, தன்னையும் சர்வசிருஷ்டிகளையும் பாவதண்டனைக்குட்படுத்திவிட்டபடியால், அவனிலிருந்து பிறக்கும் பிள்ளைகளும் நியாயத்தீர்ப்பு முடிவுவரையில் செய்கை ஞானத்திலே செத்துப்பிறக்கிறார்கள். ஆகையால் கிறிஸ்து தமது செய்கை ஞானத்தினாலே ஆத்துமாக்களை மரணத்தினின்று உயிர்ப்பிக்கும்பொருட்டு மாமிச சம்மந்தமான தகப்பனில்லாமலே, தம்மிலே தாமே மனுஷனாய்ப் பிறக்க வேண்டிய தவசியமாயிற்று.

அருள் போங்கின்படியும் இவர் சர்வத்துக்கும் மேலான தகப்பனாயிருக்கிறபடியால் சர்வத்தையும் துவக்கினவரும் இவரே; சர்வத்தையும் முடிக்கவேண்டியவரும் இவரே. ஆகையால் இவருக்குத் தகப்பன் இருப்பது கூடாது. கொலோசே. 1, 16-17. "அவருக்குள் சகலமும் சிருஷ்டிக்கப்பட்டது. பரலோகத்திலுள்ளவைகளும் பூலோகத்திலுள்ளவைகளுமாகிய காணப்படுகிறவைகளும் காணப்படாதவைகளுமான சகல வஸ்துக்களும்..............சகலமும் அவரைக் கொண்டும் அவருக்கென்றும் சிருஷ்டிக்கப்பட்டது. அவர் எல்லாவற்றிற்கும் முந்தினவர். எல்லாம் அவருக்குள் நிலை நிற்கிறது."

தாயும் தகப்பனும் சேர்ந்து பிறக்கும் பிள்ளைகள் ஜென்ம பாவமுள்ளவர்களாய்ப் பிறப்பதால் அவர்களுக்கு, ஆதாம் தேவவார்த்தையை மீறி கனியைத்தொட்டதினாலே செய்கை ஞானம் உயிறற்றுப்போயிற்று. இனி உலகப்பிரகாரமாய்ப் பிறந்தாலும், தகப்பனற்றுப் பிறக்கும் பிள்ளையே வித்தில்லாதசம்பிரதாயம் அதாவது ஒன்றுமில்லாமையிலிருந்து உண்டாக்கக்கூடிய சக்தி உள்ளதென்றும், அது இரவு பகலற்ற நித்தியா நித்தியத்துக்குரியதென்றும், அதுவே செய்கை

ஞானத்துக்குரியதென்றும், சாஸ்திரங்களில் மட்டுமல்ல சத்தியவேதத்தின் மூலமாயும் தெளிவாயிருக்கிறது. இவைகளெல்லாம் கிறிஸ்துவுக்குள்ளே நிறைவேறிவந்திருப்பதால், இவரே நித்தியத்துக்குரிய பூரணதெய்வமென்று விசுவாசிக்கிறோம். இது யாருக்கு இடறலாயிருக்கிறதோ, அல்லது அறிந்தும் பற்றிக்கொள்ள யார் மனமற்றிருக்கிறார்களோ, அவர்கள் நித்திய ஆக்கினைக்குத் தப்பார்கள்.

சீஷன்:—செய்கை ஞானமென்றால் என்ன ?

குரு:—'செய்கைஞானம்' என்பது வாயிலிருந்து வார்த்தை பிறந்தவுடனே சர்வமும் தாமதமில்லாமல் நடக்கும். இதை கிறிஸ்துவில் மட்டும் காணலாம். அதாவது பிறவிக்குருடன், பிறவிச்சப்பாணி, பிறவிச்செவிடன் பிறவிஊமையன், மரித்துப்போன பிரேதம் முதலியவைகள் விஷயமாய் இவரிலிருந்து வார்த்தை உதயமானஉடனே ஒன்று உயிரடைந்தது; ஒன்று கேட்டது; ஒன்று பேசினது, ஒன்று மானைப்போல் குதித்தோடினது; ஒன்று பார்வையடைந்தது. கிறிஸ்துவே இந்தச்செய்கை ஞானத்தைச்செய்துகாட்டினவர் இதினால் அவர் சர்வ வல்லமையுள்ள நித்திய தேவன் என்று தெளிவாய் விளங்குகிறது.

உலக ஞானிகள் தங்கள் சுயபாவத்தை உணராமலும், தாங்கள் பிறந்த பிறவியின்கூர் இன்னதென்று அறியாமலும், அல்லது சிலர் அறிந்திருந்தாலும் இப்படிப்பட்ட செய்கை ஞானமாகிய சுயஞானத்தைத்தேடி, தேவனுக்குக் கீழ்படிந்தல்ல, தங்கள் சொந்த தபசை நம்பி, அவரைவிசுவாசித்தல்ல, தங்கள் சுயபலத்தை நம்பி, வனாந்தர வழியாய்ப்போய் தெய்வத்தைக் கண்டுகொள்ளலாம் என்று அருந்தபசுசெய்தும், அறியாமலும், வெளிப்படாமலும், பெற்றுக்கொள்ளாமலும் தட்டுத்தடுமாறிப்போனார்கள்.

"உலகிலே பிறந்தமுன்னோர்-ஓதியகலைகளெல்லாம்—நிலையதாம் ஜோதிதன்னை - நிசமதாய்ச்சொல்லவில்லை- பலபல

பேதமாக-பங்கமதாய்க்கூறு செய்தே - அலகைபோல் பொய்யைப்பேசி-அருநரகில் அழிந்துபோனர்" என்று ஒரு ஞானி சொல்லியிருக்கிருர்.

ஆகிலும் வானரிஷி ஒருவர் வரவேண்டுமென்றும், அவர் வந்துதான் சர்வலோகத்தின் பாவங்களே நிவர்த்திசெய்து ஆத்துமாக்களே முத்தியடையச்செய்வரென்றும், எல்லாத்தேசங்களிலுள்ள பலபாஷை, ஜாதி, கோத்திரங்களிலிருந்த அநேக ஞானிகள் இயற்கையாகவே அறிந்திருந்தார்கள். அறிந்து வானரிஷியைப்பார்க்க வனாந்தரத்தில் பலவாருன தபசு நிலேகளில் அநேக ரிஷிகள் காத்திருந்தும் காணுமலும் அறியாமலும் போனுர்கள். (லூக்கா 10, 24). ஆயினும் யோவான் ஸ்நானகனும் நாத்தான்வேலும் வானரிஷியாகிய கிறிஸ்துவைக்கண்டு வார்த்தையாகிய தெய்வம் இவர்தான் என்று திட்டமான சாக்ஷி கொடுத்தார்கள்.

இக்காலத்தில் கிறிஸ்துவினுடையவர்களாயிருக்க விரும்புகிறவர்கள் எவர்களோ, அவர்கள் பிரபஞ்சத்தோடு சார்ந்து நிற்கும் மாமிசத்துக்குரிய விசாரணேகளே விட்டுவிட்டு, மனேதத்துவத்தில் தங்களே மறந்து, கிறிஸ்துவுடனே சத்தியத்துக்குள் ஆத்தும விசாரணேசெய்து, ஆவிக்குள் தேவனுக்குத் தங்களே ஜீவபலியாக செலுத்துவார்களானல், அவர் வாய் ஞானத்தையும், செய்கை ஞானத்தையும் மனேதத்துவத்தில் ஆவிக்குரிய அருள் ஞானத்தையும் அவர்களுக்கு அருளுகிருர்.

(1 கொரி. 2, 12; லூக்கா 12, 11-12; யோவா. 14, 12; யோவா. 16, 13 வாசித்துக்கொள்ளவும்).

சீஷன்:—கிறிஸ்துவானவர் "ஒருவன் ஜலத்தினுலும் ஆவியினுலும் பிறவாவிட்டால் தேவனுடைய இராஜியத்தில் பிரவேசிக்கமாட்டான், என்று மெய்யாகவே மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன்" என்று நீக்கோதேமுக்குச்

சொல்லுகிறாரே! (யோவா. 3, 5-8) இந்தப்பிறப்பு எப்படிப் பட்டது?

குரு:—மறுபடியும் பிறக்கும் விதம் சொல்லுகிறேன்; கேள். நாம் மாமிசப்பிரவியாய் ஆதாம் ஏவாளுக்குள் பிறந்ததுபோல, நம்முடைய ஆத்துமாவும் சத்திய ஆவிக்குள் மனோதத்துவத்தில் புதுப்பிறப்பு பிறக்கவேண்டியதவசிய மாயிருந்தது. ஆதாம் பாவம் செய்யவில்லையானால் மறுபடியும் பிறக்கவேண்டியதவசியமில்லை. ஆதாம் பாவம் செய்தபடியால் அவனுடைய இரத்தத்தில் பாவநஞ்சுகலந்து மாமிசத்திலே மரணத்துக்கேதுவான பிள்ளைகளைப்பெற்றான். கிறிஸ்துவானவர் சுத்தபரிசுத்தராகையால் தம்முடைய மரணத்தினாலே பாவத்தையும் மரணத்தையும் பரிகரித்து நீதியையும் இரக்கத்தையும் ஏகநேரத்தில் நிறைவேற்றினதால், அவர் சிந்திய திருஇரத்தத்தினாலே அழியாமையுள்ள நித்திய ஜீவனுடைய ஆவிக்குரிய பிள்ளைகளை ஆத்துமாவிலே பெறுகிறார்.

கிறிஸ்துவின் சத்திய ஆவிக்குள், ஆத்துமாவோடு ஆவி மறுஜனனம் அடைகிற விபரத்தை அவருடைய சிருஷ்டியைக் கொண்டே சுருக்கமாய் விளக்கிக்காட்டுகிறேன், கேள். வேட்டாளி அல்லது செங்குளவியென்று சொல்லப்பட்ட ஓர் ஜாதி வண்டானது தன்னைப்போல் பிள்ளைகளைப்பிறப்பிக்க வேண்டுமானால், மண்ணினால் ஒரு பெருங்கூடுகட்டி, நான்கு திசைகளின் இருபுரத்தில் நேருக்குநேரே, தன் தலைமட்டும் நுழையக்கூடிய வாசலை உண்டுபண்ணி, தன் ஜாதியில்லாத அந்நியஜாதி பச்சைப்புழுக்களில் எதையாவது ஒன்றைக் கொண்டுவந்து, தான் கட்டிய வீட்டுக்குள், மத்தியில்வைத்து, ஒருபுறம் வாசலை நன்றாயடைத்து மறுபுறத்து வாசலை தன் முன்கையினால் தோண்டித்திறந்து. வெளியாகாயம் உள்செல்லாதபடி, தன் தலையை வாசலின் துவாரத்தில் வைத்துக் கொண்டு, ரீங்காரம் செய்து மறுபடியும் மண்கொண்டு வாசலையடைத்துவிட்டு, வெளியே இரைதேடப்போய்விடும்.

இப்படியே அடிக்கடி திறந்து ரீங்காரம் செய்து அடை அடைத்து, போகிறதும் வருகிறதுமாயிருக்கும். இந்த சத்தத்தின் ஒலி பச்சைப்புழுவின் காதில் கேட்கக்கேட்க, அது பிரதிபிம்பமாகி' இந்த செங்குளவியைப்போல உருவெடுத்து வெளிப்புறப்படுகிறது. அதுபோல, மனுஷருடைய சரீரம் குளவியின் மண்கூட்டுக்கு ஒப்பாயிருக்கிறது. அந்நிய ஜாதி பச்சைபுழுவென்பது இப்பிரபஞ்சத்தினுள் எந்த தேசத்தில், எந்த ஜாதியில், எந்த கோத்திரத்தில், எந்த பாஷையில் யார் யார் யாருக்குப்பிறந்திருந்தாலும் சரி, அவர்களுடைய ஆத்துமாவுக்கு ஒப்பாயிருக்கிறது. அந்த பச்சைப்புழு செங்குளவியின் ரீங்காரத்தின் ஒலி தன் காதில் படபட, பிரதிபிம்பமாகி, செங்குளவி ரூபமெடுத்து வெளிப்படுவது போல, கிறிஸ்துவின் சத்திய ஆவியின் வசனத்தை காதில் கேட்கக்கேட்க, நாமும் கிறிஸ்துவின் சாயல், ஒளி, ரூபம் எடுத்து, பச்சைபுழு கூட்டைவிட்டு வெளிப்புறப்படுவது போல நமது சரீரமாகிய கூடாரத்தைவிட்டு (2 கொரி. 5, 1.) வார்த்தையினாலும் கையினாலும் கட்டப்படாத நித்திய கூடாரமாகிய சத்தியலோகத்துக்குப்போவோம்.

படிப்பினை:—வார்த்தையினாலுண்டாக்கப்பட்ட கூடாரம் இப்பிரபஞ்சமாகிய உலகம்; கையினாலுண்டாக்கப்பட்ட கூடாரம் நமது சரீரம்; வார்த்தையினாலும் கையினாலும் உண்டாக்கப்படாத கூடாரமோ கிறிஸ்துவின் தெய்வலோகம். பாவத்தில் விழுந்த ஆதாமின் இரத்தம் அழிவிற்கேதுவான மாமிச சரீரத்தைப்பிறப்பிக்கிறதுபோல, இயேசு கிறிஸ்து தமது திருஇரத்தத்தால் சகல பாவங்களினின்றும் நம்மைச் சுத்திகரித்து, மனோகத்துவத்தில் ஆத்துமாவை சத்தியஆவியைக்கொண்டு மயையிலிருந்து விடுவித்து, ஆத்துமாவில் ஆவிக்குள் உயிருண்டாக்கி, தம்முடைய ஆவிக்குரிய சரீரமாகிய சூக்கும காரணதேகத்தை அதற்குக்கொடுத்து தம்மோடே நித்திய மகிமைக்குள் சேர்த்துக்கொள்ளுகிறார். (கொலோ 3, 4). இதுதான் கிறிஸ்துவானவர் நீக்கோதேமுக்கு விளக்கிக்காட்டின மறுபிறப்பின் ஆத்தும இரகசிய

**சீஷன்:**—எல்லாரும் இந்த உலகத்துக்குள் ஒன்றுபோல் தானே காணப்படுகிறார்கள். அப்படியிருக்க ஸ்தூலதேகத்திலிருக்கும்போதே, ஆத்துமா ஆவிக்குரியசரீரமாகிய சூக்கும காரண தேகத்தை கிறிஸ்துவுக்குள் பெற்று மறுபிறப்படைந்திருக்கிறார்கள் என்று நாம் என்னவிதமாய் அவர்களை அறிந்து கொள்ளலாம்?

**குரு:**—முன் சொன்ன ஆவிக்குரிய மறுஜனனப்பிறவிக்கும், மாமிசசம்பந்தமான பிறவிக்கும் வித்தியாசம் சொல்லுகிறேன், கேள். பார்வைக்கு ஒன்றுபோல்தான் காணப்படுவார்கள். கருத்தோடு அவர்களைக் கவனித்தால் விளங்கும். ஆவிக்குரிய பிறவி (1) உலகத்தை வெறுக்கிறான். (2) உறமுறை, பந்துக்கள், உலகத்திலுள்ளவர்களை வெறுக்கிறான். (3) தன்னையும் வெறுக்கிறான். (4) தான் மரணத்துக்குள்ளானவன் என்றெண்ணி, நித்தியத்துக்குள் பிரவேசிக்கும் வழியென்னவென்று தேடிக் கண்டுபிடித்துக்கொள்ளுகிறான். இப்படிப்பட்டவனே கிறிஸ்துவுக்குள் மறுஜனனப் பிறவி பிறந்தவன்.

நீ அறிந்துகொள்ளும்படி ஓர் திருஷ்டாந்தம் சொல்லுகிறேன், கேள். புளிய மரத்தில் பழம் பழுத்திருக்கிறது. ஒருபழத்தைப் பிடுங்கி உடைத்துப்பார்த்தால் தோட்டுக்கும் அதன் உள்ளிருக்கும் பழத்துக்கும் ஒட்டில்லை; அப்புறம் பழத்துக்கும் கொட்டைக்கும் ஒட்டில்லை. அப்படிப்போல, சத்திய ஆவியினால் மறுபிறப்படைந்தவனும், உலகத்தில் மாமிசதேகத்திலிருந்தாலும், மாமிசத்திலே பாவத்துக்குச் செத்து, ஆத்துமாவிலே ஆவியுடன் கிறிஸ்துவுக்குள் நீதியின்படியே உயிரடைந்திருக்கிறான். உலகம் அப்படிப்பட்டவனைப் பகைக்கும். அவன் அடைவதோ நித்தியானந்தம்.

மற்றவர்களோ புளியங்காயில் தோடு, சதை, கொட்டை

ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டிருப்பதுபோல, உலகம், பாவம், மாமிசம், மரணத்தோடு சிநேகம்பண்ணி, அவைகளோடு ஒட்டிக்கொண்டேயிருப்பார்கள். இப்படிப்பட்டவர்களை உலகம் நேசிக்கும். இவர்கள் அடைவதோ நித்திய நரக ஆக்கினை.

சிஷன்:—ஆதி 3, 16-ல் "அவர் ஸ்திரியை நோக்கி 'நீ கர்ப்பவதியாயிருக்கும்போது, உன் வேதனையை மிகவும் பெருகப்பண்ணுவேன். வேதனையோடே பிள்ளை பெறுவாய். உன் ஆசை உன் புருஷனைப் பற்றினதாயிருக்கும். அவன் உன்னை ஆண்டுகொள்ளுவான்' என்றார்," என்றிருக்கிறதே. இதன் கருத்தென்ன?

குரு:—'உன் வேதனையை மிகவும் பெருகப்பண்ணுவேன்.' வேதனை என்றால்: இச்சீவனுக்குரிய பலஉபத்திரவங்களையும், பாவத்தினால் வரும் மரண உபாதிகளையும், ஆவிக்குரிய ஆத்தும சத்துருக்களால் வரும் அபாயத்தையும் குறிக்கும். 'வேதனையோடு பிள்ளை பெறுவாய்' என்பது: தான் கர்ப்பப்பாரம் சுமந்து திரியும்போதே, தன் ஜீவன் பேரில் நம்பிக்கையற்றவளாய், 'இந்த உபாதியின் சமுத்திரத்தைவிட்டு எப்போது கரை சேர்வேன்,' என்று திகில்கொண்டிருப்பாள் எனக்கருத்தாம்.

'உன் ஆசை உன்புருஷனைப்பற்றியிருக்கும் என்றால்:— குழந்தை பிறந்து, வளர்ந்து இவள் கண்களுக்கு முன் விளையாடித்திரியும்போதே, இவள் பிள்ளையின்பேரில்மனச்சந்தோஷத்தோடு, பூரண அன்பை செலுத்திக் கொண்டிருப்பாளாம். சாத்தானின் தூதர்களாகிய பல வியாதிகளால் பிள்ளை பீடிக்கப்பட்டிருக்கும்போது தன்பலத்துக்கு மிஞ்சின மனவிசாரம் அவளுக்கு உண்டாகி, இவளும் கொஞ்சம் குறைய மரண அவஸ்தையிலிருப்பதுபோல் காணப்படுவாளாம். பிள்ளை மரணமாகிவிட்டால், பிள்ளையின்பேரிலுள்ள பூரண அன்பு, திடீரென அம்புபோல அவளைத் தாக்க, அவள்

உள்ளிந்திரியங்களெல்லாம்கலங்கி, கொதிப்பாகி, இரத்தாசயம் வெடித்து, உயிர் துறக்கக்கூடிய ஒரு சந்தர்ப்பம் ஸ்திரிகளுக்குள் இரகசியமாய் அடங்கியிருப்பதால், திரிகால சம்பந்தமுள்ள தேவன், இதை அறிந்து 'உன் ஆசை உன்புருஷனைப் பற்றியிருக்கும்' என்று சொன்னாராம். இதின் அந்தரங்கம் யாதெனில் பிள்ளை இறந்தவுடனே, அவள் உயிர்தப்பிக் கொள்ளத்தக்கதாக, அநேக ஜனங்கள் பக்கத்தில் நின்று கொண்டு அவளை ஆற்றித்தேற்றி அவளிடம், பயப்படாதே! தெய்வம் இருக்குது. உன் புருஷனும் மலைபோலிருக்கிறான்; உனக்கு என்னகுறைவு? இது போனாலும், தெய்வம் எத்தனை பிள்ளைகளை உனக்குக் கொடுப்பார்!' என்று இன்னம் பலவாராய் உலக எசியங்களைச் சொல்லி அவள்மனதை ஸ்திரப்படுத்துவதால், உடனே அவள் பிள்ளைபேரிலிருந்த அன்புக்கு பதிலாக, மாமிசத்தின் ஆசை தன் புருஷன்பேரில் நினைவுக்குள் தாக்குவதால் உயிர் தப்பிப் பிழைக்கிறாளாம்.

**சீஷன்:**—அன்புமட்டும் பிள்ளையின் பேரிலும் ஆசை புருஷன்பேரிலுமிருப்பதென்ன?

**குரு:**—(ஆதி 2, 19.) மண்ணினாலே மனுஷமாமிச தேகத்தை உண்டாக்கினது போல, மண்ணினாலே மிருகங்களையும் பறவைகளையும் உண்டாக்கினார் என்று முன்சொல்லியிருக்கிறேன். ஒரு பக்ஷி தவிற மற்ற பக்ஷிகளெல்லாம் முட்டையிட்டுக் குஞ்சுபொரித்து, இரைகளை பொறுக்கி அவைகளுக்குக் கொடுக்கும். மிருகங்களோ மனுஷரைப்போல பிள்ளைகளைப்பெற்று பால் கொடுக்கும். கொடுக்கும் இடமோ இரண்டுகாலுக்கும் ஊடே. ஸ்திரிகளோ பிள்ளைகளுக்கு ஆலோசனை சங்கம் நிறைந்ததும், ஆத்துமா வசிக்கிறதுமான மார்பு ஸ்தானத்திலிருந்து பால் கொடுக்கிறார்கள். ஆகவே பூரண அன்பு பிள்ளையின்பேரில் இருக்குமேயல்லாமல். புருஷன் பேரில் ஐக்கியமட்டுமிருக்கும்.

உதாரணமாக:—புருஷனுக்கும் பெண்ஜாதிக்கும் கடும்

வெறுப்பான சண்டையுண்டாகி அவர்கள் ஒருவரைவிட்டொருவர் பிரிகிறதாயிருந்தாலும், அவர்களுக்குப் பிள்ளையிருந்தால், 'நீ போனாலும் போ! பிள்ளையைமட்டும் என்னிடத்தில் விட்டுவிடு' என்று தாய்மார் சாதிப்பது வழக்கம். இதுமாத்திரமல்ல; மிருகங்கள் கன்று போட்டு, ஒழுங்காய்ப் பால் கொடுத்து வளர்த்து வந்தபோதிலும், கன்று பால்குடி மறந்தவுடனே, தாய் கன்றை கன்றுதாயை அறியாமல் விலகிவிடும். ஸ்திரிகளோ அன்புநிறைந்த தங்கள் மனோதத்துவத்திலிருந்து குழந்தைகளுக்குப் பாலூட்டி வளர்ப்பதால், சிசுவிலிருந்து பிள்ளை தாயைவிட்டு நெடுங்காலம் பிரிந்து போனாலும், பிள்ளை தாயையும், தாய் பிள்ளையையும் மரணபரியந்தம் மாறாமல் நினைப்பூட்டுக்கொண்டிருக்குமாம். இது தான் தாய்மார்கள் பிள்ளைகளின்மேல் வைத்திருக்கும் அன்பின் இரகசியமாம்.

சிஷன்:—ஒரு பக்ஷி தவிற மற்ற பக்ஷிகள் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்குமென்று சொன்னீர்களே! அந்தப்பக்ஷி எது? அதின் குணங்களென்ன?

குரு:—அது வௌவால். அதற்குப் பல்லிருந்தாலும் மிருகஜாதியல்ல; (தோலடர்ந்த) இரக்கையிருந்தாலும் பக்ஷி ஜாதியைச் சேர்ந்ததாகவுமல்ல; பிள்ளை பெற்றுப்பால் கொடுத்தாலும் மனுஷஜாதியுமல்ல. இரைதேடுவதோ இருட்டுப் பார்த்துத்தான். படிப்பினை. மனுஷரில் திருடருக்கும் நீதியின் மார்க்கத்தைப்புறட்டுகிறவர்களுக்கும், ஒவ்வொரு மார்க்கத்திலும்போய் மாய்மாலவேஷம் தரித்து யாதொரு முடிவுமில்லாமல் போகிறவர்களுக்கும், தேவநம்பிக்கை மனுஷநம்பிக்கையற்றவர்களுக்கும், விபசாரத்திலே பிள்ளைகளைப்பெற்று, புருஷரையும் பிள்ளைகளையும் விட்டுவிட்டுப்பிரிந்து தாறுமாறாய்த்திரிகிற வேசிகளுக்கும் வௌவால் ஒப்பிடப்பட்டிருக்கிறது.

சிஷன்:—'உன் ஆசை உன் புருஷனைப்பற்றியிருக்கும்' என்று சொல்லுகிறாரே! அதற்குமுன் எவாளுக்குப் புருஷனைப்பற்றிய ஆசையில்லையா? அவன் உன்னை ஆண்டுகொள்ளுவான்' என்று சொல்லும்போது, அதற்குமுன் அவனுடைய அதிகாரத்துக்குள் இல்லாமலா இருந்தாள்?

குரு:—உலகமுழுவதும் உங்களிடத்தில் ஒப்புக்கொடுத்திருந்தும், இதெல்லாம் போதாதென்று சாத்தானின் போதனையைக்கேட்டு, கனியைப்புசித்து தேவனைப்போலாகவேண்டுமென்று எண்ணங்கொண்டாயல்லவா? ஆகையால், நீ இப்படி எதிர்த்துப் புசித்ததால் உன் ஆசை உன் புருஷனைப்பற்றியிருக்கும்' என்று தேவன் சொன்னார்.

'அவன் உன்னை ஆண்டுகொள்ளுவான்' என்றால்:—ஆதாம், ஏவாளுடன் சேர்ந்து பாவத்தை செய்ததுமல்லாமல், 'ஸ்திரி எனக்குக் கொடுத்தாள்' என்று சொல்லும்போது, அவன் அவளை ஆவிக்குள் புறம்பாக்கி தான் அவளை விட்டு விலகிவிட எண்ணியிருந்தவனும். ஆகையால் அவளை விட்டு அவன் விலகிவிடாதபடிக்கு தேவன் ஏவாளுக்கு வாக்குத்தத்தத்தைக்கொடுத்து 'அவன் உன்னை ஆண்டுகொள்ளுவான்' என்றார்.

ஆதியிலே ஆதாம் ஏவாளுக்கு தேவன் ஏற்படுத்தின பரிசுத்த விவாகத்தை சாத்தான் தந்திரோபாயத்தினால் பிரித்துவிட்டான். 'உன் ஆசை உன் புருஷனைப்பற்றியிருக்கும்; அவன் உன்னை ஆண்டுகொள்ளுவான்' என்று அவர் சொன்னபோது, அற்றுப்போகும் நிலைமையிலிருந்த மங்கிலியத்தை ஆவிக்குள் திரும்பப்பூட்டினார் இந்த இரகசியம் பெரியது (எபேசி 5, 32.)

இதனால் கிறிஸ்துவுக்கும் திருச்சபைக்குமிருக்கும் ஐக்கியம் வெளியாகியது. ஆகையால்தான் அக்காலத்திலுள்ள பரமஞானிகள் இதையறிந்து இராஜாக்களிடம்பேசி "விவாஹமானது தள்ளிப்போடக்கூடியதில்லை. மங்கிலியத்தை மரணபரியந்தம் கட்டுப்பாடுசெய்து நிலைநிறுத்தவேண்டும்," என்று திட்டமான சட்டம் பிறப்பித்திருக்கிறார்கள். கிறிஸ்து மார்க்கத்தின் தாலிக்குமட்டும் இராஜாக்களுடைய அமுலும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

சீஷன்:— 'பாவம் பெருகின இடத்தில் கிருபை அதிகமாய்ப் பெருகிற்று' (ரோமர் 5, 20.) என்று சொல்லியிருக்கிறது. பாவம் பெருகின இடம் என்பது இருளாச்சுதே! கிருபை என்பது ஒளியாச்சுதே! இது எப்படியாகும்? ஒளிக்கும் இருளுக்கும் சம்பந்தமேது என்றும் வேதம் சொல்லுகிறதே! இதன் இரகசியமென்ன?

குரு:—பாவம் பெருகின இடமென்பது ஏவாளுடைய வயிறாம். ஏனென்றால் அவள் ஆவிக்கேற்ற நித்ய ஜீவவிருக்ஷத்தின் கனியைப்புசிக்காமல், தேவசாபத்தீடான கனியைப் புசித்ததால், அவள் வயிற்றுக்காகாரமாக மரணத்துக்கேதுவான கனியைப் புசித்தாள். ஸ்திரிகளுக்குப் பிள்ளை பிறந்த பின், நஞ்சுக்கொடி (இ ர க சி ய ம்) வராவிட்டால் உடனே மரணம் நேரிடும். இந்த இரகசியங்களையெல்லாம், அறிந்து பரி. பவுல்: "பாவம்பெருகின இடத்திலே;" அதாவது: ஏவாளுடைய வயிற்றிலே; "கிருபையும் அதிகமாய்ப் பெருகிற்று;" அதாவது: ஒளியாகிய கிறிஸ்துவும் ஏவாளுக்குக் கொடுத்த வாக்குத்தத்தத்தின்படி அந்த வழியாகவே பிறக்கும்படி நேரிட்டது, என்று சொல்லியிருக்கிறார்.

முந்தினது நச்சுவித்தாகிய சாத்தானின் வித்து; பிந்தினது கிறிஸ்துவின் சத்தியவித்து. ஆகையால் ஸ்திரியின் வயிறு அந்த இரண்டு வித்துக்கும் சம்பந்தப்பட்டிருப்பதால் "பாவம் பெருகினயிடத்தில் கிருபையும் அதிகமாய்ப்பெருகிற்று," என்று சொல்லப்பட்டிருக்கிறது. 1 தீமோ 2, 15ல் "ஸ்திரியானவள் பிள்ளை பேற்றினால் இரக்ஷிக்கப்படுவாள்" என்று சொல்லியிருக்கிறது. இதினாலே மாமிசத்திற்குரிய பிள்ளைகளைப்பெற்றவர்கள் எல்லாரும் இரக்ஷிக்கப்படுவார்கள் என்பது கருத்தல்ல; ஆதிவார்த்தையின்படியே, ஸ்திரியினிடத்தில் தோன்றின கிறிஸ்துவானவர் அவனவனுடைய மனோதத்துவத்தில் ஆவிக்குள் உருவாகிறதைக் காட்டியிருக்கிறது. (கலா. 4, 19.)

சிஷன்:—'ஸ்திரியானவள் பிள்ளை பேற்றினால் இரக்ஷிக் கப்படுவாள்' என்று சொல்லியிருக்கிறது. பரிசுத்த கன்னி மரியம்மாளுக்கு: 'ஸ்திரிகளுக்குள்ளே நீ ஆசீர்வதிக்கப்பட் டவள்' என்று தேவதூதன் சொல்லுகிறானே! இதின் கருத் தென்ன?

குரு:—உலகத்தில் தாயும் தகப்பனுமுடைய பிள்ளை களுக்கெல்லாம் ஜென்மபாவமுண்டு. இப்படியே வேதவாக் கியங்களிலும், கிறிஸ்து ஒருவர் தவிற மற்றயாவரும் "துர்க் குணத்தில் உருவானேம்" என்றும், "பாவத்தில் கர்ப்பம் தரிப்பிக்கப்பட்டோம்" என்றும் (சங். 51, 5), "ஸ்திரியினி டத்தில் பிறந்தவன் சுத்தமாயிருப்பதெப்படி" என்றும் (யோபு 25, 4.), "எல்லா மனுஷரும் பாவம் செய்தபடியால்" என்றும் (ரோமர் 5, 12.), "நமக்குப் பாவமில்லையென்போமா னல்" என்றும் (1 யோவா. 1, 8.) தெளிவாய்ச் சொல்லி யிருக்கிறார்கள்.

ஆதாம் முதல் நியாயத்தீர்ப்புவரை, பாவம் எல்லாருக் குள்ளும் ஊடுருவி வந்திருக்க, சிலர் சொல்லுகிறபடி ஜென்ம பாவமில்லாமல் பரிசுத்த கன்னிமரியம்மாள் எப்படிப்பிறந் தாள்? தாய்தகப்பனில்லாமலே பிறந்தாளா? தாயும் தகப்பனு முடையவளாய்ப்பிறந்தாளா? தாய் அல்லது தகப்பனில்லாம லேபிறந்திருப்பாளானல், உலகமுழுமைக்கும் இவளேதெய்வ மென்றும் உலக மனுமக்கள் யாவரும் இவளைவணங்கவேண்டு மென்றும் பலசாஸ்திரங்களிலும், வேதத்திலும் எழுதியிருந் திருப்பார்கள். கிறிஸ்துவையோ தெய்வமென்றும், உலக இரக்ஷகரென்றும் சொல்லியிருக்கமாட்டார்கள். தாயும், தகப்பனுமுடைய மரியம்மாள் ஜென்ம பாவமுள்ளவளாய்ப் பிறந்ததால் தான் தேவ உத்திரவுப்படி, தேவதூதன் வந்து இவளுக்கு ஆசீர்வாதம் கொடுக்கும்படி நேர்ந்தது. இந்த ஆசீர்வாதம் கொடுத்ததின் நோக்கமென்னவென்றால், உலக முழுமையும் ஒரு வார்த்தையினாலுண்டாக்கின தேவன், எவாளுக்கு வாக்களித்தபடியே இவள் வயிற்றில் தாம் பிறக்

கப் போகிறதினால், அந்த வார்த்தையினால் இவளுடைய சரீரமாகிய கூடாரத்தை, ஜென்மபாவமற சுத்தம்பண்ணி அக்கூடாரத்தின்வழியாய் மாமிசதேகத்தில் பாவமில்லாதவராய் வெளிப்பட, ஆசீர்வாதம் கொடுத்தாரேயல்லாமல், 'எனக்குமேலே தெய்வமாயிரு' என்றாவது, என்னோடே சமரச தெய்வமாயிரு' என்றாவது அந்த ஆசீர்வாதம் கொடுக்கவில்லை. அப்படிக்கொடுத்திருக்கிறதாக யாராவது சாதிப்பார்களானால், அது அவர்கள் வாயாதாரமேயல்லாமல் அதற்கு வேதத்திலும் மற்ற சாஸ்திரங்களிலும் யாதொரு ஆதாரமில்லை. புதிய ஏற்பாட்டை எழுதின ஆக்கியோன்களும், அப்போஸ்தலர்களும், கிறிஸ்துவின் அப்போஸ்தலர்கள் என்று சொல்லுகிறார்களே யல்லாமல் பரிசுத்த கன்னிமரியம்மாளுடைய அப்போஸ்தலர்கள் என்று யாரும் சொல்லவுமில்லை; எழுதவுமில்லை.

பரிசுத்த கன்னிமரியம்மாளாவது தன்னைத்தெய்வமாகக் கொண்டாடச் சொன்னதாக யாதொரு ஆதாரமுமில்லை. மேலும் கிறிஸ்துவே தேவனென்றும், ஆத்தும இரக்ஷகரென்றும், சொல்லியிருக்கிறாள். (லூக்கா. 1, 47.) இப்படியிருக்க இவள் மோக்ஷராக்கினியென்றும், கிறிஸ்துவுக்குச் செலுத்தும் வணக்கம் இவளுக்கும் செலுத்தவேண்டுமென்றும் சொல்லிக்கொள்ளுகிறதாவது செய்கிறதாவது, அஞ்ஞானக்கொள்கையின் அனுசாரணையாகுமேயல்லாது வேறல்ல. பரிசுத்த கன்னிமரியம்மாள் தன்னை வணங்கவேண்டுமென்று சொன்னதாக யாதொரு ஆதாரமுமில்லாதிருக்கும்போது அவளுக்கு தெய்வத்துக்குரிய வணக்கம் செலுத்தி, தங்களுக்காகப் பரிந்து பேசி மோக்ஷத்துக்கு வழி நடத்தவேண்டுமென்று தொழுதுகொள்வார்களாகில், பரிசுத்த கன்னிமரியம்மாளுக்கு மரியாதை கொடுக்காமல், இவர்களுடைய வணக்கத்தினாலும் தொழுதலினாலும், அவளைப் பரியாசம் பண்ணுவது போலாகுமேயல்லாமல் கண்ணியமாகாது.

அர்ச்சிஷ்டவான்களை வணங்கவேண்டுமென்பார்களுமுண்டு. கொர்நேலியு பேதுருவின் பாதத்தில் விழுந்து

பணிந்துகொண்டபோது "எழுந்திரும்; நானும் ஒரு மனுஷன்தான். வணக்கத்துக்கு நான் பாத்திரனல்ல" என்று சொல்லிப்போட்டான். (அப்போஸ். 10, 26.) பரி. பவுலும் "தேவதூதர்களுக்குச் செய்யும் ஆராதனைகளில் விருப்பமுற்று, காணாதவைகளில் துணிவாய் நுழைந்து உங்கள் பந்தயப்பொருளை இழந்துபோகாதபடி பாருங்கள்" என்று கண்டித்திருக்கிறார். (கொலோசெ. 2, 19) தேவாலயங்களைக் கட்டி அவைகளுக்கு தேவதூதரின் நாமங்களைத்தரிப்பித்து, அவைகளை நினைவுகூருவது தேவனுக்கு ஏற்காத மாய்மால ஆராதனைகள் என்றாகும். பத்மு தீவிலே, பரதீசுக்கு ஆவிக்குள் எடுத்துக்கொள்ளப்பட்ட பரி.யோவானுக்கு ஒருதூதன் ஞான ஒளியாகிய கிறிஸ்துமணவாளனுக்கு, ஆவி ஒளியாகிய திருச்சபை மணவாட்டி அலங்காரம் பண்ணிவைக்கப்பட்டிருந்ததை காட்டினபோது, இவன் அவன் பாதத்தில்விழுந்து வணங்க, தூதன் உடனே இவனைநோக்கி "இப்படி செய்யாதபடிக்குப் பார். உன்னோடும் இயேசுக்கிறிஸ்துவைக்குறித்து சாக்ஷியிட்ட உன் சகோதரரோடும்கூட, நானும் ஒரு ஊழியக்காரன். தேவனைத்தொழுதுகொள்" என்று கண்டித்தான். (வெளி. 19, 10.) உயிரோடிருக்கிறவர்களுக்காக இறந்துபோனவர்கள் வந்து என்ன செய்யக்கூடும். (லூக்கா 16, 26.) பரிசுத்த கன்னிமரியம்மாள், தேவதூதர்கள், தீர்க்கதரிசிகள், அர்ச்சிஷ்டவான்கள் முதலியவர்களிடத்தில் காணப்பட்ட சில சிறந்த தேவ இலக்ஷணங்களுக்காக கூடுமானால் கண்ணியமாய் அவர்கள் எண்ணப்படத்தக்கவர்களேயல்லாமல், நித்திய மகத்துவத்திற்கும், வணக்கத்துக்கும் பாத்திரவான்களல்ல; ஏனென்றால், கிறிஸ்துவே சத்தியத்துக்குத் தலைவரும், விசுவாசத்துக்கு அதிகாரியும், நீதிக்கு எஜமானனுமாயிருக்கிறார்.

**சீஷன்:**—நீங்கள் இப்படிச்சொல்லுகிறீர்களே! வெளி. 12, 1ல் சொல்லப்பட்ட சூரியனையணிந்திருந்த ஸ்திரியை மரியம்மாளுக்கு ஒப்பிட்டு, திருச்சபையாகிய தாய் இவள் தானென்று சாதிக்கிறார்களே! இது எப்படியாகும்?

**குரு:**—"ஒரு ஸ்திரி சூரியனை அணிந்திருந்தாள். அவள்

பாதங்களின்கீழ் சந்திரனும் அவள் சிரசின்மேல் பன்னிரண்டு நக்ஷத்திரங்களுள்ள கிரீடமும் இருந்தது.'' (வெளி. 12, 1.) ஸ்திரியாய்க்காணப்பட்டவள் ஆவிக்குறிய தாயாகிய திருச்சபை (கலா. 4, 26). சூரியன் என்பது நீதியின் சூரியனாகிய கிறிஸ்துவைக்குறிக்கிறது. "என் நாமத்துக்குப்பயந்திருக்கிறவர்கள் மேல் நீதியின் சூரியன் உதிக்கும்'' (மல்கி 4, 2) அவள் பாதங்களின் கீழிருந்த சந்திரன் நியாயப்பிரமாணத்தைக்குறிக்கும். சிரசில் 12 நக்ஷத்திரங்கள் என்பது 12 அப்போஸ்தலர் மூலமாய் உலகமெங்கும் சத்தியம் வெளியாகவேண்டியதைக் குறிக்கும். அவள் சிரசிலிருந்த கிரீடம் பழய ஏற்பாட்டின் காலத்திலுள்ள நீதிமான்களுக்கும், சுவிசேஷத்தைப் பற்றிக் கொண்டிருக்கிற கிறிஸ்துவின் விசுவாசிகளான பரிசுத்தவான்களுக்கும் ஆக இருதாரத்தாருக்கும் கொடுக்கக்கூடிய ஜீவ கிரீடத்தை அணிந்திருந்தாள். இந்த ஸ்திரியோ மரியம்மாளுக்கு ஒப்பான பிறவியல்ல. இந்த இரகசியத்தை நன்றாயறிந்திருந்த பரிசுத்த பவுல் அப்போஸ்தலன் கலாத்தியர் 4, 26ல் "மேலான எருசலேமோ சுயாதீனமுள்ளவள். அவளே நம் எல்லாருக்கும் தாயானவள்'' என்று சொல்லியிருப்பதைக் கவனித்தால் இவளே ஆவிக்குறிய ஆத்தும தாய் என்று விளங்குகிறது. 'மேலான எருசலேம்' என்பது மோக்ஷ இராஜியம். அது ஆணுமல்ல; பெண்ணுமல்ல. சுயாதீனமுள்ளவள் என்றால்:—வித்தில்லாத சம்பிரதாயம்; அதாவது ஒன்றுமில்லாமையிலிருந்து ஆகக்கூடியது. நம்மெல்லாருக்கும் தாயானவள் என்றால் நான் முன்சொன்னபடியே, ஆண்ரூபம் பெண்ரூபமற்ற, சத்தியத்தைப் பற்றிக்கொண்டிருக்கிற விசுவாசமுள்ள ஆத்துமாக்களை, கிறிஸ்துவின் சத்திய ஆவிக்குள் பிறப்பிக்கும் தாயையே குறிக்கிறது. இது மரியம்மாளைக் குறிக்கவே குறிக்காது. ஆவிக்குறிய தாய்பிறந்த இடமோ கிறிஸ்துவின் திருவிலா. இந்த இரகசியத்தைப்பற்றி முன்னேயும் சொல்லியிருக்கிறேன்.

சீஷன்:—"பூமி உன்னிமித்தம் சபிக்கப்பட்டிருக்கும்; வருத்தத்தோடே அதன் பலனைப்புசிப்பாய்; அது முள்ளும்

குருக்கும் முளைப்பிக்கும்; உன் முகத்தின் வேர்வையால் ஆகாரம் புசிப்பாய்; நீ மண்ணாயிருக்கிறாய்; மண்ணுக்குத்திரும்புவாய்,'' என்று ஆதாமுக்கு தேவன் சொன்னாரே! இவைகளின் விபரங்களென்ன? (ஆதி. 3, 17-19.)

குரு:—'பூமி உன் நிமித்தம் சபிக்கப்பட்டிருக்கும்' என்னும் வார்த்தைகளின் இரகசியத்தை முன்சொல்லியிருக்கிறேன். 'நீ உயிரோடிருக்கும்நாளெல்லாம் வருத்தத்தோடே அதின் பலனைப் புசிப்பாய்':—"நீ பாவம் செய்வதற்கு முந்தி உன் மனோ தத்துவத்தில் ஆவிக்குள் ஆவியைப் புசித்துக் கொண்டிருந்தவன்; இப்போதோ என்றென்றைக்கும் மனக்கலக்கத்தின் திகிலோடு மாமிசத்துக்குறிய ஆகாரங்களைப்புசிப்பாய்,'' எனக்கருத்தாம். "அது உனக்கு முள்ளும் குருக்கும் முளைப்பிக்கும்'' என்றால், ஆதாமுடைய ஆத்துமா ஆவியொளியோடு ஞான ஒளிக்குள் சார்ந்துகொண்டிருந்த பாதை அவனுக்கு அடைபட்டதால் அச்சம், பஞ்சம், வறுமை, உழைப்பு, மனசாக்ஷிவேதனை, கட்டாயம், எத்து, சச்சரவு, ஓயாத கண்ணீர், சர்வத்திலும் ஆறுதல் இல்லாத சமாதானக்கேடு முதலியவைகளெல்லாம், இவன் ஜீவகாலம் முடிவு வரையிலும், அமைதலும் ஆறுதலுமில்லாத துக்கத்தைக் கொடுத்துக் கொண்டிருக்குமாம். ஆகையால் இவைகளை முள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. "நீ பூமிக்குத் திரும்பும்மட்டும் உன் முகத்தின் வேர்வையால் ஆகாரம் புசிப்பாய்'':—தேவன் இதைச் சாபத்திடாய்ச் சொல்லாமல் ஒரு கட்டளையாகக் கொடுத்தார். தங்கள் பிழைப்புக்காக பிரயாசப்பட்டுச் சம்பாதிக்க, எவர்களுக்குப் பிரியமில்லையோ, அந்தச் சோம்பேரிகளிடத்தில் சாத்தான் குடிகொண்டிருப்பான்; இப்படியே சத்தியத்தில் பழக எந்த ஆத்துமாவுக்குப் பிரியமில்லையோ, அவன் மண்ணும், தேவமகிமையற்றவனும், வெறும் மனுஷனுமிருப்பான், எனக்கருத்தாம். "ஆதாம் தன்மனைவிக்கு ஏவாள் என்று பேரிட்டான்; ஏனெனில் அவன் ஜீவனுள்ளோருக்கெல்லாம் தாயானவள்'' என்றிருக்கிறது. அப்படியானால் செத்தவர்களுக்குத் தகப்பன் ஆதாம்போலும். இதனால் நாம் அறிய

வேண்டியது:—ஜடப்பிரமாணமாகிய நியாயப்பிரமாணம் அவனிடத்திலும் ஆவிக்குரியதாகிய ஜீவப்பிரமாணம் திருச்சபையாகிய தாயிடத்திலும் இருக்கிறதான இரகசியம் வெளியாகிறது. ஜடப்பிரமாணமோ எழுத்துக்குரியது; அது அழியும் ஜீவப்பிரமாணமோ சத்திய ஆவியோடு கிறிஸ்துவுக்குள்ளிருக்கிறது; அது அழியாது. "தேவனாகிய கர்த்தர் ஆதாமுக்கும் அவன் மனைவிக்கும், தோல் உடைகளை உண்டாக்கி அவர்களுக்கு உடுத்தினார்." இந்த உடை மாமிசநிர்வாணத்தை மூடினது. அது ஆத்தும பாவ நிர்வாணத்தை மூடுகிற கிறிஸ்துவினுடைய நீதியின் வஸ்திரத்துக்கு முன் குறிப்பாகவும், மனுஷன் மாமிசதேகத்தைக்கொண்டு தேவனுக்கு ஆவிக்குள் செலுத்தும் பலியின் இரகசியத்தையும் காட்டுகிறது.

"மனுஷன் நன்மை தீமையறியத்தக்கவனாய் நம்மில் ஒருவரைப்போலானான்" என்று ஆதி. 3, 22ல் சொல்லியிருக்கிறது ஆதாம் பிசாசின் வார்த்தைக்குக்கீழ்படிந்து இணங்கி நின்றதால், நானும் தேவனைப்போலிரிக்கிறேனென்று எண்ணிக்கொண்டானாம். இவனுக்குரிய நீச புத்தி இக்காலத்திலுள்ள அநேகருக்குள்ளிருக்கிறது. தேவ ஞானமோ இவர்களைப்பரியாசம்பண்ணி ஒன்றுமில்லாமலாக்கிப்போடுகிறது. (1 கொரி 1, 19-21 வரை வாசித்துப்பார்க்கவும் )

"ஞானிகளை வெட்கப்படுத்தும்படி தேவன் உலகத்தில் பைத்தியமானவைகளைத் தெரிந்து கொண்டார். பலமுள்ளவைகளை வெட்கப்படுத்தும்படி தேவன் பலவீனமானவைகளைத் தெரிந்துகொண்டார். உள்ளவைகளை அவமாக்கும்படி உலகத்தின் இழிவானவைகளையும் அற்பமாய் எண்ணப்பட்டவைகளையும், இல்லாதவைகளையும் தேவன் தெரிந்து கொண்டார், மாமிசமான எவனும் தேவனுக்கு முன்பாகப் பெருமை பாராட்டாதபடிக்கு அப்படிச்செய்தார்," என்று 1 கொரி. 1, 27-30ல் சொல்லப்பட்டிருக்கிறது.

"மாமிசமான எவனும் பெருமை பாராட்டாதபடிக்கு

அப்படிச்செய்தார்" என்றால்:—திருத்துவ இரகசிய சம்பந்தமான முச்சொடராகிய தேவ ஆவி, தேவ ரூபம், தேவசாயலை மனுஷனின் ஆத்துமாவுக்குள் கொடுத்து சரீரத்தை உச்சியிலிருந்து உள்ளங்கால்வரை மண்ணைக்கொண்டு பொதிந்தார். இவன் பாவம் செய்து, ஆத்துமாவில் பெற்றிருந்த தேவ பகிமையை இழந்துவிட்டதால், இவன் வெறும் மண்ணாகவும், மிருக சுபாவத்தின் உயிருடையவனாகவுமிருந்து கொண்டு, நான் தேவனைப்போலிருக்கிறேன் என்று எண்ணுவது அல்லது சொல்லிக்கொள்வது எவ்வளவு வெட்கமான காரியம்! ஆத்துமாவுக்குறிய தேவமகத்துவம், பாவத்தினால் ஆதாமிலிருந்து எடுபட்டுப்போன பிற்பாடு, தேவன் அவனைக்கூப்பிட்டு, "நீ மண்ணாயிருக்கிறாய்! மண்ணுக்குத்திரும்புவாய்" என்று சொன்ன இரகசியம் இதுவே.

**சீஷன்:**—தேவன் இரக்கசித்தமுள்ளவரென்று சொல்லுகிறீர்களே! அப்படியானால் இவன் பாவம் செய்தவுடன், இவன் ஜீவ விருக்ஷத்தின் கனியை புசித்து என்றைக்கும் உயிரோடிராதபடி செய்யவேண்டுமென்று ஜீவ விருக்ஷத்துக்கு போகும்பாதையை அடைத்து இவர்களையும் வெளியே துரத்திவிட்டாரே! இவரிடத்தில் இரக்கசித்தம் எங்கேயிருக்கிறது?

**குரு:**—ஆதாமுக்கு: "தொடவும் புசிக்கவும் வேண்டாம்; சாகவேசாவாய்" என்பது தேவகட்டளை. இது மாறாதே! அவன் மீறித்தொட்டதினால், மாமிசம் செத்தது, புசித்ததினால் ஆத்துமாவும் செத்தது. இப்படியிருக்க, திரும்ப ஜீவ விருக்ஷத்தின் கனியை புசிக்க இவனுக்குத் தேவன் இடங்கொடுத்திருப்பாரானால், இவனுக்கு நித்திய ஜீவனாயிற்று. முன் அடைந்த நித்திய மரணத்தோடே நித்திய ஜீவனும் சேருமாகையால், உலக முழுமையையும் இவனையும் நரகத்தில் தள்ளி சர்வத்துக்கும் நியாயத்தீர்ப்பு அந்த நிமிஷத்திலேயே கொடுக்கவேண்டியது வரும். ஆகவே அவருடைய கிருபையும் இரக்கமும் நிறைந்த வார்த்தையின்படியே, சர்வத்தையும் அழிக்கவேண்டிய சமயம் நஞ்சு

மாத்தில் ஆதாமை வெட்டி அழிவுக்குள்படுத்தவேண்டிய தேவ நீதிக்கு : தாம் வருவதாய் வாக்களித்து, நீதியை நிறுத்தி, ஜீவவிருக்ஷத்துக்குப்போகும் பாதையை அடைத்து, இவர்களைத் தோட்டத்தைவிட்டு அப்புறப்படுத்தி, சர்வத்தையுமழிப்பதற்குப்பதிலாக ஏதேன் தோட்டத்தை மட்டும் பூமியை பிளந்து அதற்குள் மூடிப்போட்டார். (பாதாளம்) (எசேக் 31,18) (ஆகையால் ஞானமும்ஜீவவிருக்ஷமும் கிறிஸ்துவுக்குள்ளிருக்கிறது; அவரை விசுவாசிக்கிற எவனும் அவைகளை அவரிடத்தில் பெற்றுக்கொள்ளுகிருன்) ஆகவே ஆதாமும் அவன் மனைவியும் அந்த இடத்தில் தப்பித்துக்கொண்டார்கள்.

எசேக். 31, 18. "இப்படிப்பட்ட மகிமையிலும் மகத்துவத்திலும் ஏதேனின் விருக்ஷங்களில் நீ எதற்கு ஒப்பானவன். ஏதேனின் விருக்ஷங்களோடே கூட நீயும் பூமியின் தாழ்விடங்களில் (பாதாளம்) இறக்கப்பட்டு, பட்டயத்தாலே வெட்டுண்டவர்களோடே கூட விருத்தசேதனமில்லாதவர்களின் நடுவிலே கிடப்பாய். பார்வோனும் அவன் கூட்டமும் இதுவே என்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிருர் என்று சொல்".

**சீஷன்:**—ஏதேன் தோட்டத்தைப் பாதாளத்திலிரக்கிஞர். பார்வோனும் அவன் கூட்டமும் இதுவே என்று கர்த்தர் சொல்லுகிருரே! அதின்கருத்தென்ன?

**குரு:**—இப்பிரபஞ்சமாகிய உலகத்தை எகிப்துதேசத்துக்கு ஒப்பிட்டு, எகிப்தின் இராஜாவாகிய பார்வோனை இப்பிரபஞ்சத்தின் லோகாதிபதியாகிய பிசாசுக்கு ஒப்பிட்டு, சிவந்த சமுத்திரத்தை இவ்வுலகமாகிய நரகத்துக்கு ஒப்பிட்டு, மோசேயை நியாயப்பிரமாணத்துக்கு ஒப்பிட்டு, அவன் கையில் வைத்து நடத்தினகோலை கிறிஸ்துவின் சத்திய சுவிசேஷத்திற்கு ஒப்பிட்டு, எகிப்திலிருந்து நாற்பதுநாளில் கானானுக்குப் போகும் பிரயாணம் நாற்பது வருஷம் தாமதமாய் நடத்தப்

பட்டது. இவ்வுலக அழிவுக்கு ஜனங்கள் எப்படியாவது மனந்திரும்பவேண்டுமென்று கிறிஸ்து நம்மேல் இரக்கங்கொண்டு நீடியபொறுமையுள்ளவராய் உலகத்தை அழிக்காமல் இக்காலத்தில் தாமதித்திருக்கிறதற்கு ஒப்பிட்டு, மோசேயுடைய ஊழியத்துக்குப்பதிலாக யோசுவா நியமிக்கப்பட்டதை, ஆதியாகமத்திலிருந்து மல்கியா வரையிலும் பிதாவினுடைய அரசாக்ஷி முடிய, மத்தேயு, மாற்கு லூக்கா, யோவான்என்ற நாலு சுவிசேஷங்களிலும், குமாரனை கிறிஸ்துவின் அரசாக்ஷி தொடங்கினதற்கு ஒப்பிட்டு, யோசுவா 32 ராஜாக்களை யுத்தத்தில் ஜெயித்து இஸ்ரவேலரை கானானுக்குக் கொண்டுபோய் சேர்த்ததை கிறிஸ்துவும் விசுவாசிகளின் ஆவிக்குறிய சத்துருக்களை ஜெயித்து அவர்களைப் பரமகானானுக்கு வழி நடத்தும் விபரத்துக்குஒப்பிட்டு எகிப்திலிருந்துபுறப்பட்ட ஆறுஇலக்ஷம் சேனைகளில் கடைசியில் கானானுக்குள் இரண்டு பேர் மட்டும் பிரவேசித்ததை கிறிஸ்துவைப்பற்றின அக்காலம் இக்காலத்திலுள்ள விசுவாசிகளுடைய ஆவியோடு ஆத்துமா பரலோகம் சேரும்; மாமிசமோ இங்கேயே அழிந்துபோகும் (1 கொரி. 15, 50.) என்பதற்கு ஒப்பிட்டு, பார்வோனும் அவன் கூட்டமும் இதுவே என்று உரைக்கிறூர் என்று சொல்லப்பட்ட இரகசியமாம்.

சீஷன்:—யூதமார்க்கத்தாரும் இன்னம் அநேக மார்க்கத்தார்களும் தாங்களும் தங்கள் மார்க்கமும் முந்தினதுகள்; கிறிஸ்து மார்க்கம் பின்னல் வந்ததுதானே என்று சொல்லிக்கொள்ளுகிறூர்களே! இதின் விபரமென்ன?

குரு:—இதற்கு ஒரு திருஷ்டாந்தம் சொல்லுகிறேன், கேள். கானன் தேசம் வேவுபார்க்கப்போனவர்களில், யோசுவா, காலேப் என்னும் இருவர் ஒரு பெரிய திராக்ஷக்குலையை ஒரு நெடுந்தடியின் நடுவில் கட்டித்தொங்கவிட்டு முன்னல் காலேப்பும் பின்னல் யோசுவாவுமாக அரும்பிரயாசத்துடன் சுமந்துகொண்டு வரும்போது யோசுவாவின் முகத்துக்கு முன் பழம் தொங்கிக்கொண்டிருந்தபடியால், அவன் நடையிலேயே அதைப் பறித்துப் புசித்து தாகம் பசியில்லாமல் மாமிசம் பலப்பட்டு மனத்திருப்தியடைந்துவந்திருக்கிறான்

காலேப் குலையின் முன்னின்று சுமந்தபோதிலும், அவன் அதைத் திரும்பிப் பார்க்கமுடியாமலும், பழத்தை புசிக்க வழியில்லாமலும் போனதுபோல, திராக்ஷக்குலைக்கு ஒப்பனையான சத்தியம் எல்லாருக்கும் மத்திபமாயிருந்தும் அதைத்திரும்பிப்பற்றிக்கொள்ள மனமற்ற எந்த மார்க்கத்தி லுள்ளவர்களிலும் தாங்களே முந்தினோர் என்று சொல்பவர் யாவரும் அப்படியே போவார்கள். பிந்தினோர் என்று சொல்லப்பட்ட பூரண விசுவாசிகளோ, பின் வந்த யோசுவாவைப் போல சரீரப்பசியை ஆற்றிக்கொள்வதுமட்டுமல்ல, ஆத்துமப் பசியையும் ஆற்றி கிறிஸ்துவினால் சகல பரிபூரண நிறைவையும் பெற்றனுபவிக்கிறார்கள் இன்னம் திருஷ்டாந்தமாக மனுஷன் உருவாக்கப்பட்டபோது முந்தினது சரீரம்; பிந்தினதோ ஆத்துமா. சரீரம் அநித்தியத்துக்கும் அழிவுக்குமுரியது; பிந்தினதான ஆத்துமாவோ அழிவில்லாத நித்தியத்துக்குரியது. ஆகையால் கிறிஸ்துவானவர் பிந்தினோர் முந்தினோராயும் முந்தினோர் பிந்தினோராயுமிருப்பார்கள் என்று சொல்லியிருக்கிறார். (மத்தேயு 20, 16, 19, 30., 1 கொரி 15, 50.)

சீஷன்:—பத்துக்கற்பனையாகிய வேதத்தை எல்லார் மனசாக்ஷிக்குள்ளும் அமைத்து வைத்திருக்கிறார் என்று முன்னமே சொல்லியிருக்கிறீர்கள். அதில் புறமதஸ்தர்கள் காணாமல் போனதென்ன? கிறிஸ்தவர்கள் மட்டும் கண்டு கொண்டதென்ன?

குரு:—புறமதஸ்தர்களுக்கு அவர்கள் மனசாக்ஷியிலிருக்கும் வேதத்தில் மூன்று காரியம் மறைவு. கிறிஸ்தவர்களுக்கு அதில் ஒரு காரியம் மறைவு. புறமதஸ்தர்களுக்கு மறைவான மூன்று காரியம் எவையென்றால்:—(1) என்னை அன்றி உனக்கு வேறே தேவர்கள் உண்டாயிருக்கவேண்டாம் (யாத். 20. 3.) என்று தேவன் சொன்ன பிரமாணத்துக்கு நேர் விரோதமாய் அவர்கள் தெய்வம் ஒருவர்தான் உண்டென்று ஒன்றுபோல தங்கள் வார்த்தையினால் சாதிப்பார்கள்; அவர்கள் இருதயத்திலேயோ அக்கிரம சிந்தையினாலும் அநியாயத்தினாலும் சத்தியத்தை அடைக்கிவைத்துக்கொண்டு (ரோமர் 1, 18.)

மரித்துப்போன மனுஷர்களை தேவர்களாகவும் தேவிகளாக வும் கும்பிடுவதுமட்டுமல்ல, மற்ற சிருஷ்டிகளையும் தெய்வமாக கும்பிடுகிறதினல் (ரோமர் 1, 23.) அவர்கள் ஆத்துமா தேவ சமுகத்தை விட்டு விலகிப்போயிற்று, ஆத்துமா தெய்வத் தைப்பற்றிக்கொண்டிருந்த முதல்படி தவறினதில், வேதத் தில் சொல்லப்பட்ட முதல் மரணத்துக்குப் பங்காளிகளானர் கள்.

(2) மேலே வானத்திலும் கீழே பூமியிலும் பூமியின் கீழ் தண்ணீரிலுமுண்டாயிருக்கிறவைகளுக்கு ஒப்பான ஒரு சொரூபத்தையாகிலும் யாதொரு விக்கிரகத்தையாகிலும் நீ உனக்கு உண்டாக்கவேண்டாம்; நீ அவைகளை நமஸ்கரிக்கவும் சேவிக்கவும் வேண்டாம் என்பது தேவன் மனிதர்களுக்குக் கொடுத்த பிரமாணம் (யாத்திரை 20, 4.) இதின் கருத்தா வது:-வானலோக சிருஷ்டிகளிலும், பூலோகத்திலுள்ள சிருஷ் டிகளிலும், பூமியின் கீழ் தண்ணீரிலுள்ள மறைவான சிருஷ்டி களிலுமுள்ள எதையாவது, "தெய்வம் இப்படித்தா னிருப்பார்; அல்லது இதிலுமிருப்பார்" என்று சுட்டிப் பொருளாய்க்காட்டி என்னைக்கும்பிடவேண்டாம். என்னைத் தவிற அதை நீ நினைவு கூறவும் வேண்டாம், என்பதே. இதற்கும் நேர்விரோதமாய் இவர்கள் தேவ துரோகிகளாகி, உண்டாக்கினவரை விட்டுவிட்டு அவர் உண்டாக்கின சிருஷ்டி களெல்லாவற்றையும் கும்பிடுகிறார்கள்; ஆத்துமா தேவ சமு கத்திலிருந்து இரண்டாம்படி தவறி சர்வபாவத்துக்குள் பட்டு மரணத்துத்துக்கேதுவாயிற்று. வேதத்தில் சொல்லியிருக் கிற இரண்டாம் மரணம் என்பது இதுவே.

(3) இரவுபகலற்றயிடமாகிய நித்தியாநித்தியத்துக்குறிய ஒய்வு நாளைப்பற்றி ஒன்றுமே அவர்களுக்குத்தெரியாது. இதற்கு மூன்றும் மரணம் என்று ஞானி சொல்லியிருக்கிறார் இதற்கு நித்திய நரகதண்டனை எனக்கருத்தாம்.

மேலே சொல்லப்பட்ட மூன்று காரியங்களில் ஒய்வு

நாளைப்பற்றி கிறிஸ்தவர்களில் அநேகருக்குப் பூருவாய்த் தெரியாது.

சீஷன்:—கிறிஸ்தவர்கள் ஒய்வுநாள் தெரியாமலா அதை ஆசரிக்கிறார்கள்!

குரு:—உலகசிருஷ்டிப்பைப்பற்றி சொல்லிய அதிகாரத்தில் முதலாம் நாள் முதல் ஆறும் நாள்வரை, இரவும் பகலும் சேர்த்து 'சாயங்காலமும் விடியற்காலமுமாகி' என்று நாள் கணக்கிடப்பட்டிருக்கிறது இரவும் பகலும் சேர்க்காமல் (ஆதி 2, 2.) எழாம் நாளென்று சொல்லப்பட்டிருக்கிறது. இரவும் பகலும் இதற்குச் சேர்க்காவிட்டால் இதை நாள் என்றுவது இது எப்போது தோன்றினதென்றுவது யார் கணக்கிட்டு முடிவு சொல்லக்கூடும்? அதோடுகூடி நாலாம்நாள் படைப்பில் சூரியசந்திரன் தோன்றியிருப்பதால் நாள் குறிப்பு அந்த நாளிலிருந்து விளங்குகிறது. அதற்கு முந்தின மூன்று நாட்களுக்கும் சூரியசந்திரன் இல்லாததால் இரவு பகல் எங்கே? அவைகளுக்கு நாள் கணக்கு எவ்விதமாய்ச்சொல்லக்கூடும்? அல்லது சிலருடைய கணக்கின்படி சனிக்கிழமைதான் ஒய்வு நாள் என்று சாதிப்பார்களானால், முதல், உலகம் தோன்றும் போது எந்தநாள், எந்தநேரம், எந்த நிமிஷம் தோன்றினதென்று எப்படி கணக்கிட்டுக்கண்டு பிடித்தார்கள்? அக்காலத்து முற்பிதாக்களாகிய பரமஞானிகள் இதையெல்லாம் கணக்குப் பார்த்து பிதாவுடைய சிருஷ்டிப்பின் ஒய்வு ஆவிக்குள்ளான அந்தரங்க இரகசியமாயிருந்ததால், அவர்கள் புத்திக்குப் புலப்படாமல், கிறிஸ்துவானவர் உயிர்த்தெழுந்த இரக்ஷிப்பின் நாளையேஒய்வு நாளாகத்தீர்மானித்துநடத்திவந்திருக்கிறார்கள்.

சீஷன்:—தேவன் எழாம் நாளில் ஒய்ந்திருந்தாரென்று சொல்லியிருக்கிறதே! அவர் ஆறுநாள் படைப்பையும் சிருஷ்டித்து மிகவும் அலுத்துப்போனதினால் ஒய்ந்திருந்தாரோ?

குரு:—ஒய்ந்திருந்தார்; அவருடைய தெய்வீகதன்மைக்கு

யாதொரு இளைப்புகளைப்பு இருக்கிறதேயில்லை. இந்த ஓய்வு என்பது அந்த ஆறுநாள் சிருஷ்டிப்புக்கு ஓர்முத்திரையான ஓய்வேயல்லாமல் தமக்குள் இளைப்புகளைப்பு இருந்தது என்றர்த்தமல்ல; தமது திருவுள்ள ஆலோசனையில் 'இந்த ஆறுநாள் படைப்போடு யாதொன்றையும் கூட்ட அல்லது குறைக்க வேண்டுவதில்லை' என்பதற்கு முத்திரையாக அந்தப்படைப்பிலேயே ஓய்வு என்றர்த்தமாம். மோசேமுனிவர் ஆதி. 2, 3ல் 'தேவன் அதிலே ஓய்ந்திருந்தார்' என்று சொல்லியிருக்கிறுரே யல்லாமல் 'அவருக்குள் ஓய்ந்திருந்தார்' என்று சொல்லவேயில்லை.

சிஷன்:—அப்படியானல் மோசே முனிவர் என்ன கருத்தோடு 'ஓய்ந்திருந்தார்' என்று சொன்னுர்?

குரு:—அவர் சொன்னதில் மூன்று விதமான ஓய்வு விளங்குகிறது. எதுவென்றுல்:(1) உலகத்துக்குப்பொதுவான ஓய்வு (2) அவனவனுக்குரிய ஓய்வு. (3) முடிவுநேரத்தில், ஆவிக்குள்ளான மனமகிழ்ச்சியின் நித்தியானந்த ஓய்வு.

(1) உலகத்துக்குரிய ஓய்வு எதென்றுல்:—பிதாவாகிய தேவன் ஆறுநாள் படைப்பின் சிருஷ்டிப்புகளில் அடங்கியிருக்கிறது. இந்த ஓய்வின் துவக்கமும் முடிவும் காலக்கிரமங்களும் மனுஷன் திட்டம் பண்ணிக்கொள்ள முடியாதகால், பின்காலத்தில் லோக இரக்ஷகராகிய கிறிஸ்துவினுடைய. உயிர்த்தெழுதலின் மூலமாய் அந்த ஓய்வின் இரகசியங்கள் வெளியரங்கமாயிற்று. ஞாயிற்றுக்கிழமை; அதில் உலகத்துக்குரிய ஓய்வு மனுமக்களுக்குப் பொதுவாயிருக்கிறது. பிதாவாகிய தேவன் ஆறுநாள் படைப்பின் சிருஷ்டிகளை முன்வைத்துப்பார்க்கும்போது, தமது திருவுள்ளத்துக்கு'நன்றுயிருந்தது' என்று சொல்லியிருக்கிறுர். (ஆதி. 1, 31.) அவரது திருவுள்ளத்திற்கு நன்றுயில்லாதிருந்திருக்குமானல், ஏழாம் நாளிலும் வேலை செய்திருப்பார். அப்படியல்ல; ஆறு நாள் படைப்பிலேயே தமது திருவுள்ளத்துக்கு சிருஷ்டிகளெல்லாம் பூரண

மாய்விட்டதால், அதில் கூட்டவும் குறைக்கவும் வேண்டுவ தில்லை என்னும் கருத்தாய் அதிலே ஓய்ந்திருந்தார். நன்றாயிரு ந்ததென்றும் சொன்னார். சிருஷ்டிப்பு முழுவதையும் ஆறு நாளைக்குள் முடித்து அந்த ஆறுநாளை மனிதனுக்கு ஆகார மாகவும் ஆதாரமாகவும் (ஆருதாரம்) கொடுத்தார்.

(2) அவனவனுக்குரிய ஓய்வும் இதிலேதானிருக்கிறது. தன்ஜீவன் பிரியப்போகிற நேரத்துக்குமுன், தனக்கு ஞாபக சக்தியிருக்கும்போதே, 'தனக்காக என்ன செய்தேன்; பிறருக்கு என்ன செய்திருக்கிறேன்; தெய்வத்துக்கு எதைச் செய்தேன்' என்று யோசனை வரும்போது, உலகத்தாருக்கு அநியாயம் செய்திருக்கிறேனென்றும், என் மனதையும் மாமிசத்தையும் அவமானத்துக்கும் அநியாயத்துக்கும் ஒப்பு க்கொடுத்து வந்திருக்கிறேனென்றும், தெய்வத்தைப்பற்றி என் வாயினால் சொல்லிக்கொண்டவனேயல்லாமல், என் இருதயத்தில் அவரைப்புகழ்ந்து துதி செலுத்தினவனல்ல; ஆகையால் இந்த நேரத்தில் என் கதி என்ன ஆகுமோவென்று அவன் ஆத்துமா பரிதபித்து மனக்கலக்கமும் திகிலும் கொண்டு, தன் காரியாதிகள் முழுமையும் தனக்கு நன்றாகத் தோன்றாமல், நாணக்கேடாகவே தோன்றினால், இவன் நித்திய ஓய்வுக்குள் பிரவேசிக்காமல், நித்திய நரகத்துக்குள் பிரவேசிக் கிறவனாயிருப்பான். ஆகையால் கிறிஸ்தவ விசுவாசிகள் தங்க ளுடைய ஜீவன் பிரிவதற்குமுன்னதாகவே உலக விஷயத்தி லாவது, தங்களுக்குரியவிஷயத்திலாவது, பரத்துக்குரிய விஷய த்திலாவது, தாங்கள் நடந்துகொள்ளும் விதங்களில், ஜாக்கிர தையாயும் அதிக கவனத்தோடு விழிப்பாயுமிருந்து, ஆவிக் குரிய மனமகிழ்ச்சியின் நித்திய ஓய்வுக்குள் பிரவேசிக்க ஆயத்தப்பட்டுக்கொண்டிருக்கவேண்டும். எபி 4, 10ல் 'தேவன் தம்முடைய கிரியைகளை முடித்து ஓய்ந்ததுபோல, தானும் தன் கிரியைகளை முடித்து ஓய்ந்திருப்பான்' என்றிருக்கிறது.

படிப்பினை. (1) நாம் தேவன் ஒருவர் உண்டென்று உண்மையோடு விசுவாசிக்க வேண்டும். (2) பாவத்திலிருந்து

விடுதலையாக்கப்பட்டு அவரிடத்தில் ஆசீர்வாதம் பெற்றுக் கொள்ளவேண்டும். (3) மரணத்துக்குப்பின்பு நித்திய இளைப்பாறுதலுக்குள் பிரவேசிக்க விழிப்பு, எச்சரிக்கை, ஆயத்தமுள்ளவர்களாயிருக்கவேண்டும். இதுவே அவனவனுக்குரிய ஓய்வு. (எபி. 4, 9-10) "தேவனுடைய ஜனங்களுக்கு இளைப்பாறுகிற காலம் இனி வருகிறதாயிருக்கிறது. ஏனெனில் அவருடைய இளைப்பாறுதலிற் பிரவேசித்தவன் தேவன் தம்முடைய கிரியைகளைமுடித்து ஓய்ந்ததுபோல தானும் தன் கிரியைகளை முடித்து ஓய்ந்திருப்பான்." என்றிருக்கிறது,

நாம் இப்பொழுது அனுசரித்து வரக்கூடிய ஓய்வு உலகத்துக்குப்பொதுவான ஓய்வு; தனக்குரிய ஓய்வு ஜீவன் பிரியப் போகிற நேரம். இந்த இரண்டு ஓய்வும் பின்னால் ஆத்துமா பெறப்போகிற ஆவிக்குரிய நித்திய ஓய்வுக்கு நிழலாட்டங்களாயிருக்கிறது.

(3) நித்திய ஓய்வு. இந்த நித்தியாநித்தியத்தின் ஓய்வுக்குரிய இரகசியத்தைப்பற்றி கிறிஸ்துவானவர் தாமே வெளிப்படுத்தியிருக்கிறார். எப்படியென்றால்:—'யாக்கோபுக்கு காணப்பட்ட ஏணி (ஆதி. 28, 10-15). பூமியிலிருந்து வானமட்டும் எட்டியிருந்தது. அதற்கு மேலாகக்கர்த்தர் நின்றார்,' என்றிருக்கிறது. இதின் கருத்தாவது; ஏணி என்பது ஞானம் என்னும் ஏணியாம்; இதன் நுனி வானத்தை எட்டியிருந்தது: இது ஞானம் என்னும்கிறிஸ்துவின் அநாதி சிரசாம்; ஏணியின் நுனி பூமியிலிருந்தது: இது கிறிஸ்துவின் இருதயமாம்; இந்த ஏணியில் இரங்கவும் ஏறிப்போகவும் தக்க படிகள் இருந்தன: ஒவ்வொரு படியும் ஓய்வு நாளாம்; இதில் ஏறிப்போன தூதர்கள்: முற்காலத்திலும் பிற்காலத்திலுமுள்ள நீதிமான்களும் பரிசுத்தவான்களுமாம்; மேலேயிருந்து இறங்கி வந்த தூதர்கள்; இருதரத்தாரையும் பரலோகத்துக்கு அழைத்துக்கொண்டுபோக வந்தவர்களாம். (எபி. 1 14.)

இந்த ஏணியின் இரகசியத்தைப்பற்றி நமது இரக்ஷகர் தாமே நாத்தான்வேலுக்கு (யோவான். 1, 51.) தெளிவாய் வெளிப்படுத்தினர். அதாவது விசுவாசிகளுக்கு வானம் திறந்திருக்குமென்றும், தேவதூதர்கள் **மனுஷகுமாரனிடத்திலிருந்து** ஏறுகிறதையும் இறங்குகிறதையும் நீங்கள் இதுமுதல் காண்பீர்கள் என்றும் தெளிவாகச் சொல்லியிருக்கிறார். மனுஷ குமாரனிடத்திலிருந்து ஏறுகிறதையும் என்று சொல்லும் போது: பூமியிலிருந்ததாக யாக்கோப்புக்குக் காணப்பட்ட ஏணியின் நுனி கிறிஸ்துவின் இருதயம் என்று வெளியரங்க மாயிற்று. வானம் திறந்திருக்கிறதையும் என்று சொல்லும் போது: அவருடைய அனாதி நித்தியாநித்தியத்தின் சிரசைக் காட்டுகிறது. மனுஷ குமாரனிடத்திலிருந்து ஏறுகிறதை யென்றால்: முன் சொன்ன இருதாரத்தாரையும் தமக்குள்ளிருப்பதாகக் குறிக்கிறார். இறங்குகிறவர்கள் என்று சொல்லும் போது: இரக்ஷிப்பைச் சுதந்தரித்துக்கொண்டவர்களை பரலோகத்துக்கு அழைத்துக்கொண்டு போவதற்காக அனுப்புகிற அவருடைய தூதர்களைக்காட்டுகிறார். (எபி. 1, 14.)

இன்னம் இந்த நித்திய ஓய்வின் இரகசியத்தைப்பற்றி கிறிஸ்து தாமே சிலுவையில் தொங்குகையில் வலது பாரிசத்துக் கள்ளனைப்பார்த்து, "இன்றைக்கு நீ என்னுடனே கூட பிரதீசிலிருப்பாய்" என்று சொல்லியிருக்கிறார். 'இன்றைக்கு' என்கிறார். நாளைக்கு என்றால்: அடுத்த நாள் அதை அழிக்கும். கொஞ்ச நேரம் என்றால்: அடுத்த நேரம் அதை அழிக்கும். ஒரு நிமிஷம் என்றால்: அடுத்த நிமிஷம் அதை அழிக்கும். ஒரு இமைப்பொழுது என்றால்: அடுத்த இமைப்பொழுது வந்தவுடன் அது அழியும். இன்றைக்கு என்னும் தேவ வார்த்தைக்கோ, தேவபாஷையின் கணக்கின்படி இரவுமில்லை, பகலுமில்லை; இதற்கு முடிவில்லாத நித்தியம் என்றர்த்தமாம். ஆகையால் அப்படிச் சொன்னாராம்.

சீஷன்:—ஆறு நாள் சிருஷ்டிப்புகளையும் பார்த்து தேவன் நல்லதென்று கண்டார். அதற்கு ஆசீர்வாதம் கொடுக்க

வில்லேயே. ஏழாம் நாளே (மட்டும்) ஆசீர்வதித்தார் என்று சொல்லியிருக்கிறதே! (ஆதி: 2, 3.) இதின் அந்தரங்கமென்ன?

குரு:—தேவன் ஆதாமிடத்தில், உலகத்தையும் அதிலுள்ளவைகளெல்லாவற்றையும் ஆண்டுகொள் என்று சொன்னரேயல்லாமல் நீ வானலோகத்தையும் அதிலுள்ளவைகளேயும் ஆண்டுகொள் என்று சொல்லவில்லே. ஆதாம் சுயசித்தத்தினுல், தேவகற்பனேயை மீறியபடியால், ஆண்டுகொள்ளும்படி தேவன் நமக்குக்கொடுத்த இவ்வுலகம் ஆத்துமாவை மாயைக்குள் சம்பந்தப்படுத்தி ஆதாமோடு நம்மெல்லாரையும் பாவத்துக்கும், சாபத்துக்கும், மரணத்துக்கும் உட்படுத்திவிட்டது. இனி இரவு பகல் சேராத ஆசீர்வாதம்' பெற்ற நாளுக்கு ஆண்டவர் எவரோ, அவரே வானலோகங்களேயும் ஆளக்கூடியவராயிருந்து, நம்மை பாவம், சாபம், மரணம் என்னும் உபாதிகளினின்று விடுதலேசெய்து, நித்திய ஜீவனேயும் அளிக்கவேண்டும். இப்படிப்பட்ட நித்தியஜீவனுக்குரிய சகல சம்பூரணமும் கிறிஸ்துவுக்குள்ளடங்கியிருக்கிறது. (1 யோவா. 2, 25.) இவரே இரவு பகல் சேராத (சகரியா. 14, 7.) ஆசீர்வாதம் பெற்ற நித்திய ஓய்வுக்கு ஆண்டவர் (மாற்கு, 2, 27.) கிறிஸ்துவுக்குள் ஜீவிக்கிறவர்கள் நித்தியாநித்தியத்துக்குள் வாசமாயிருக்கிற அவருடன் நித்திய ஓய்வுக்குள் ஐக்கியமாவதைக் காட்டுப்படிக்கு "ஏழாம் நாளே ஆசீர்வதித்தார்" என்னும் கருத்தாய் மோசே முனிவர் ஏழாம் நாளே இரவு பகல் சேர்க்காமல் எழுதிவைத்திருக்கிறார்.

சீஷன்:—தேவன் ஆறு நாள் சிருஷ்டிகளேயும் முன்வைத்து ஏழாம் நாளே ஆசீர்வதித்தார். தமக்கு முன்னிருக்கும் இதைப்பரிசுத்தமாக்கினர் அதாவது ஏழாம்நாளேப் பரிசுத்தமாக்கினர் என்று சொல்லாமல், அதைப்பரிசுத்தமாக்கினர் என்று சொல்லியிருப்பதினுல், பரிசுத்தத்துக்கு வேறொரு நாளேக்காட்டுவதுபோல் விளங்குகிறதே! இதின் இரகசியமென்ன?

குரு:—அந்த நாளைப்பற்றி (சகரியா. 14, 7ல்) "ஒரு நாளுண்டு ; அது கர்த்தருக்குத்தான் தெரியும்; அது பகலுமல்ல இரவுமல்ல'' என்று சொல்லப்பட்டிருக்கிறது. பத்மூ தீவிலிருந்து பரதீசில் ஆவிக்குள் எடுத்துக்கொள்ளப்பட்ட யோவான் அப்போஸ்தலனும் அந்த நாளின் இரகசியத்தைத் திட்டமாய் அறிந்திருந்தவனானபடியால், "நான் கர்த்தருடைய நாளில் ஆவிக்குள்ளானேன்'' என்று வெளி. 1, 10ல் சொல்லியிருக்கிறான். பேதுரு அப்போஸ்தலனும் 2 பேது. 3,.13ல் "நீதி வாசமாயிருக்கும் புதிய வானமும் புதிய பூமியுமாகிய பரம எருசலேம், உண்டாகுமென்று காத்திருக்கிறோம்,'' என்கிறான். பரிசுத்த யோவானும் வெளி. 21, 1-2ல் புதிய வானமும் புதிய பூமியுமாகிய பரம எருசலேமாகிய பரிசுத்த நகரம் பரலோகத்தைவிட்டு இறங்கிவரக்கண்டேன், என்கிறான் ஆகையால், இவ்வுலகம் வெந்து ஊடுருவி பாதாளத்தில் சாடும் நேரத்திலேயே (2 பேதுரு 3, 10.) ஆவிக்குரிய உலகம் வானத்திலிருந்து இறங்கிவரும். அந்த நிமிஷத்தில் அக்காலத்து நீதிமான்களும் இக்காலத்திலுள்ள விசுவாசிகளான பரிசுத்தவான்களுமாகிய இருதாத்தாரும் மேகத்தில் ஏறி (1 தெச. 4, 14-18) பரலோகத்துக்கு ஆவிக்குள் ஆவியாய்ப் பாய்ந்து செல்வார்கள். அந்நேரத்தைக் குறிப்பிட்டுக்காட்டத் தக்கதாக 'அதைப் பரிசுத்தமாக்கினர்' என்று மோசே முனிவர் சொல்லுகிறார்.

ஆகையால் கிறிஸ்து அரசு செய்யவேண்டிய உலகம் இவ்வுலகமல்ல. இவ்வுலகம் புதிப்பிக்கப்பட்டு இதில் அவர் பரிசுத்தவான்களுடனே ஆயிரம் வருஷம் அரசாளப்போகிறதுமில்லை. இவ்வுலகமே பூரண நரகமாகும். ஆயிரம் என்பதற்கு சர்வத்துக்கும் முடிவு என்றர்த்தமாம். பரிசுத்தவான்கள் கிறிஸ்துவுடனே ஆயிரம் வருஷம் அரசாளுவார்கள் என்றால்:—அவனவன் மனோராஜியத்தில் மனந்திரும்பி குணப்பட்டநேரமுதல் அவனவன் ஜீவனின் முடிவுவரை ஆவிக்குள்ளாக கிறிஸ்துவுடனே நித்தியா நித்தியத்துக்குரிய பங்கை இங்கே பெற்றுக்கொள்வதைக் காட்டும்படியாக ஆயிரவருஷ

அரசாக்ஷி என்று சொல்லப்பட்டிருக்கிறதேயல்லாமல், ஆயிரம் வருஷம் கிறிஸ்துவுடனே இவ்வுலகத்தை அரசுசெய்வார்கள் என்பது கருத்தல்ல. நாம் அரசுசெய்யும் உலகமோ வானத்திலிருந்து இறங்கிவரும்; நாம் மேகத்திலேறி வானத்துக்குப் போகும் நேரத்தைக்காட்டுகிறது.

**படிப்பினை.** இருதாரத்தாருக்கும் ஆவிக்குரிய தெய்வீக வணக்கத்தில் முன் ஓய்வை நிழலாட்டமாய்க்காட்டி, பின் வானத்திலிருந்து இறங்கிவரும் இரவு பகலற்ற இடமாகிய புதிய உலகத்துக்குள் ஏறிச்செல்வதைக்காட்டத்தக்கதாக அதைப் பரிசுத்தமாக்கினார் என்று சொல்லியிருக்கிறது. ஆகையால் வெளி. 21, 23-25ல் சொல்லப்பட்டிருக்கிறது. வெளிச்சம் ஞான ஒளியாகிய கிறிஸ்துவே. அவருக்குள் ஆத்துமாக்கள் எல்லாம் ஐக்கியமாகிறதைக் காட்டுகிறது. (கர்த்தருடைய அருள்வேதத்தில் ஆயிரம் என்பதற்கு தேவபாஷையின் கணக்கின்படி சர்வத்துக்கும் முடிவு என்றர்த்தமாம்; நாற்பது நாற்பது என்று வரும் வேதவாக்கியங்களுக்கு அழிவு என்றர்த்தமாம்; எழு எழு என்று வரும் வாக்கியங்களுக்கெல்லாம் கிறிஸ்துவின் அருள் நிறைந்த பரிபூரணமாகிய திருச்சபையைக்குறிக்குமாம்.)

இப்பிரபஞ்சமாகிய மாய உலகத்துக்கு சூரியன் ஓர் விளக்காயிருப்பதுபோல, மேலான சத்தியலோகத்துக்கு கிறிஸ்துவே ஞானவிளக்காயிருக்கிறார். சூரிய வெளிச்சத்தில் ஜீவராசிகளெல்லாம் உலகத்தில் நடமாடி ஜீவிக்கிறதுபோல, தெய்வலோகத்துக்குள் பிரவேசிக்கப்போகிறவர்கள், சத்திய சுவிசேஷமாகிய அவருடைய வெளிச்சத்திலே நடந்து அதற்குள் செல்லவேண்டும்.

(வெளி. 22, 5.) 'அங்கே இராக்காலமிராது. விளக்கும் சூரியனுடைய வெளிச்சமும் அவர்களுக்கு வேண்டுவதில்லை. தேவனாகிய கர்த்தரே அவர்கள்மேல் பிரகாசிப்பார். அவர்கள் சதாகாலங்களிலும் அரசாளுவார்கள்'

சீஷன்:–'மனித மாமிசத்தோடு நாசியிலோடிய சுவாசம்' பிரபஞ்சத்தோடு அதிலுள்ள ஜீவராசிகளைப்போல் அழிந்து போகும்' என்றும், 'உயர ஏறும் மனுஷனுடைய ஆவியைப் பற்றி பின் யோசிப்போம்' என்றும் சொன்னீர்களே! அதைப் பற்றிய இரகசியமென்ன?

குரு:—மனுஷன் மூன்றுபாகங்களுள்ள ஒருவனயிருக்கிருன் என்று முன் சொல்லியிருக்கிறேன். (1 தெச. 5, 23.) இப்படியே பரி. பவுலும் எபி. 9, 8-9 வாக்கியங்களில் முதலாம் கூடாரம் நிற்குமளவும் பரிசுத்த ஸ்தலத்துக்குப்போகிற மார்க்கம் இன்னும் வெளிப்படவில்லையென்று பரிசுத்த ஆவியானவர் தெரியப்படுத்தினர். அந்தக்கூடாரம் இக்காலத்துக்கு உதவுகிற ஒப்பனையாயிருக்கிறதென்று சொல்லியிருக்கிருர். இக்காலத்துக்கு உதவுகிற ஒப்பனையான கூடாரம் என்று சொல்லும்போது, இது மனுஷனுடைய ஆவி, ஆத்துமா, சரீரமென்ற கூடாரத்தையே ஒப்பிட்டுக்காட்டியிருக்கிறதென்று 2 கொரி 5, 1ம் வாக்கியத்தால் தெளிவாகிறது. பூமிக்குரிய கூடாரமாகிய நம்முடைய வீடு அழிந்துபோனலும் தேவனல் கட்டப்பட்ட கைவேலையில்லாத நித்திய வீடு பரலோகத்தில் நமக்குண்டென்று அறிந்திருக்கிறோம் என்றார். ஆகையால் கூடாரத்தைப்பற்றி நாம் அறியவேண்டியது மூன்று. வார்த்தையினலுண்டாக்கப்பட்ட கூடாரம் ஒன்று; கையினலுண்டாக்கப்பட்ட கூடாரம் ஒன்று; வார்த்தையினலும் கையினலும் உண்டாக்கப்படாத கூடாரம் ஒன்று; ஆக மூன்று. வார்த்தையினலுண்டாக்கப்பட்ட கூடாரம் இப்பிரபஞ்சமாகிய உலகம்; கையினலுண்டாக்கப்பட்ட கூடாரம் மனுஷனுடைய மாமிச தேகம்; வார்த்தையினலும் கையினலுமுண்டாக்கப்படாத கூடாரமோ பரலோகம். ஆத்துமாவோடு ஆவிபோய்ச் செல்லவேண்டிய உலகம் அதுவே. பரலோகம், பூலோகம், பாதாளலோகமென்ற மூவுலகம் மனுஷனுடைய மாமிச தேகமாகிய கூட்டுக்குள் அமைத்துவைக்கப் பட்டிருக்கிறது. தேவன் பத்துக்கற்பனையை எழுதிக்கொடுத்தபோது மோசேயை எச்சரிக்கை செய்யவில்லை; கற்பலகைகளை மோசே உடைத்த

போதும் தேவன் அவரை எச்சரிக்கை செய்யவில்லை; மலையை ஒரு அடி அடிக்கச் சொல்ல அவர் இரண்டடி அடித்தும் எச்சரிக்கை செய்யவில்லை; தேவாலயக் கூடாரத்தைச் செய்யும்படி தேவன் சொன்னபோதோ, 'நான் காட்டிய மாதிரியின்படி செய்ய நீ எச்சரிக்கையாயிரு' என்று சொல்லியிருக்கிறார். (யாத்தி. 25, 40., எபி. 8, 5.) தேவன் இந்த விஷயத்தில் அவரை எச்சரித்த நோக்கம் எதுவென்றால்:- மனுஷனுடைய சரீரம் பரலோகம், பூலோகம், பாதாளலோகமாகிய மூன்று உலகங்களுக்கும் சம்மந்தப்பட்டிருக்கிறபடியால் இவைகளுக்கு ஒப்பிட்டு அதைச் செய்ய வேண்டுமென்று எச்சரித்தார். அதாவது: மனுஷனுடைய சரீரம் கண்டத்துக்குமேல் பரலோகத்துக்குச் சமானமும், கண்டத்தின்கீழ் நெஞ்சுப்பதைப்பு வரை பூலோகத்துக்குச்சமானமும் நெஞ்சுப்பதைப்பிலிருந்து வயிறு முதலானவைகளெல்லாம் பாதாள லோகத்துக்குச் சமானமுமாக ஒப்பிட்டிருப்பதால் முழு உலகமும் மனுஷனுடைய கூட்டுக்குள் அடங்கியிருக்கிறதாக வேதம் சொல்லுகிறது. (பிரசங்கி 3, 11.)

இதில் ஆவிஸ்தானம் கண்டத்துக்குமேலே; ஆத்துமஸ்தானம் கண்டத்தின்கீழ் நெஞ்சுப்பதைப்புவரையும்; சரீரஸ்தானம் என்பது வயிறோடு சேர்ந்த மாமிசதேகம்.

இனி ஆவிஸ்தானம் என்பது விவேகம், ஞானம், பரிசுத்தம், சத்தியம் இந்நான்கும் சேர்ந்தவைகளேயாம். ஆத்துமஸ்தானம் என்பது புத்தி, சித்தம், சுயத்துவம், தேவத்வம், சாஸ்திரஅறிவு இவ்வைந்தும் சேர்ந்தவைகளேயாம். சரீரஸ்தானம் என்பது ஊண், உரக்கம், போகம். ஆவி தேவனை அறியும்; ஆத்துமா தன்னைத்தான் அறியும்; சரீரம் உலகத்தை அறியும். நான் முன் சொல்லியிருக்கிறபடி, ஆதாம் சுயசித்தத்தினால் பாவம்செய்து, ஆத்துமா பிரபஞ்சத்தோடு பிசாசையும் பாதாள லோகத்தையும் நோக்கிவிட்டபடியால், ஆத்தும ஒளி ஆவிஒளியை சந்தித்து, ஆவிஒளி ஞானஒளியாகிய கிறிஸ்துவோடு ஆனந்தித்துக்கொண்டிருப்பதற்கு பதிலாக,

பாவத்தினிமித்தம் தேவசமுகம் அதை விட்டு விலகவே, ஆவி ஒளிக்கும் ஆத்துமஒளிக்கும்இடையில் பாவம் புகையைப்போல் இருபக்கமும்சூழ்ந்து கொண்டது. ஆகவே தன்னையும் சிருஷ்டிகர்த்தாவையுமறியக் கூடாதபடி இருளடைந்துவிட்டது.

எசே. 28, 13-15ல் 'நீ தேவனுடைய தோட்டமாகிய எதேனிலிருந்தவன். பத்மராகம், புஷ்பராகம், வைரம், படிகப் பச்சை, கோமேதகம், யஸ்பி, இந்திரநீலம், மரகதம், மாணிக்கம், முதலான இரத்தனங்களும் பொன்னும் உன்னை மூடிக்கொண்டிருக்கிறது' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆவிஸ்தானத்துக்குள் அடங்கியிருக்கும் விவேகம், ஞானம், பரிசுத்தம், சத்தியம் இந்நான்கையும், ஆத்துமஸ்தானத்திலடங்கியிருக்கும் புத்தி, சித்தம், சுயத்வம், தேவத்வம்,, சாஸ்திர அறிவு இவ்வைந்தையும் ஆக ஒன்பது கற்களாகக்காட்டி, ஆவியோடு ஆத்துமா சம்மந்தப்பட்டிருக்கத்தக்கதாக, பொன் என்னும் தேவசாயலாகிய ஒளியால், மூடப்பட்டிருந்ததைக் காட்டியிருக்கிறது. 'உன்னில் அநியாயம் கண்டுபிடிக்கிறவரையிலும் நீ குறையற்றிருந்தாய்' என்று சொல்லும்போது, ஆதாம் பாவம் செய்தவுடனே ஆவியோடு ஆத்துமாவைப் பொதிந்திருந்த பொன் என்னும் தேவசாயலின் ஒளி அவனைவிட்டு விலகிவிட்டமையால் ஆவிஒளி தேவனை அறியாமலும், ஆத்துமஒளி தன்னையும் ஆவியையும் அறியாமலும், சூரியனை மறைக்கும் மேகத்தைப்போல் பாவம் என்னும் இருள் சூழ்ந்துகொண்டது.

**சீஷன்:**—மனுஷனுடைய கூட்டுக்குள், பாவம் என்னும் இருள் எந்தயிடத்தில் இருந்து கொண்டு இப்படிமூடிக்கொண்டது?

**குரு:**—மனுஷனுடைய கூட்டுக்குள் மனம், இருதயம் என்பவைகள் ஒன்றுக்கொன்று எதிரிடையாயிருக்கின்றன. இருதயத்திலிருந்து ஆவிக்குரிய வழி நித்தியத்துக்குப் போறது. மனதிலிருந்து உலகத்தோடு மாமிசஜீவனுக்குரியவழி நரகத்துக்குப்போகிறது. (கலா. 5-17 ரோ. 7, 22-23.)

**சீஷன்:**—மனம் எந்த விதத்தில் நரகத்துக்கு வழி நடத்தக்கூடியது?

**குரு:**—மனதில் உலகம் இருக்கிறது. உலகத்துக்குள் மாமிசமிருக்கிறது. மாமிசத்துக்குள் பாவமிருக்கிறது. பாவத் துக்குள் அந்தகாரம் மரணம் இருக்கிறது. மரணத்துக்குள் பிசாசு இருக்கிறது. பிசாசுக்குள் பாதாளம், நரகம் இருக் கிறது. இதுதான் மனதோடுசார்ந்த மாமிசஜீவனுக்குரியவழி.

ஆவிக்குரிய வழியோ இருதயத்தோடு சார்ந்திருக்கிறது. இருதயத்துக்குள் ஆத்துமஒளி யிருக்கிறது. ஆத்துமஒளிக்குள் ஆவிஒளி யிருக்கிறது. ஆவிஒளிக்குள் ஞானஒளியிருக்கிறது ஞானஒளிக்குள் கிறிஸ்து ஒளியாயிருக்கிறார். கிறிஸ்துவாகிய ஒளிக்குள் அன்பின்ஒளியிருக்கிறது. அன்பின் ஒளிக்குள் பிதா பேரொளியாய் நித்தியாநித்தியமாயிருக்கிறார். இதனால் நாம் அரியவேண்டியது: உலகம் மனதோடு சார்ந்திருப்பதால் உலகத்துக்குப் பொய் ருசி; மாமிசத்துக்கு பாவம் ருசி; ஆத்து மாவுக்கோ கடும் போராட்டம் (ரோமர் 7, 22-23.) ஆகையால் தேவன் ‘உன் மனதைக்கொடு’ என்று சொல்லாமல், ‘உன் இருதயத்தைக்கொடு’ என்கிறார்.

சீஷன்:—மனதையும்சேர்த்துக்கேளாமல், இருதயத்தை மட்டும் தேவன் கேட்கிறாரே! இதின் காரணமென்ன?

குரு:—மனதில் பாவம் குடிகொண்டிருந்து, ஆவியோடு சார்ந்துகொண்டிருக்கும் ஆத்துமாவை வஞ்சித்துக்கொண் டிருப்பதால், தேவன் மனதைக்கேட்காமல், இருதயத்தை சுத்தம் பண்ணுவதற்காகக் கேட்கிறார். மனுஷன் பாவம் செய்யக்கூடுமேயல்லாமல், புண்ணியம் செய்யக்கூடியவனல்ல; உலகத்திலே ஒருவனாகிலும் இல்லை. ஒருபாவி தன்னைத்திரும்ப அவரிடத்தில் ஒப்புக்கொடுத்தாலன்றி அவன்பாவம் போகாது. எந்தப்பாவியும் திரும்பத்தன்னை ஒப்புக்கொடுத்தால்தான், அவர் சுத்தாபரிசுத்தமும் சர்வவல்லமையுமுள்ள தேவனு

யிருப்பதால், அவனை சுத்திகரிக்கக்கூடும். ஆகையால் அவர் இருதயத்தைக் கேட்கிறார்.

மேலும் மாம்சமும், உலகமும் அதற்குரிய ஜீவனும் தேவனுக்குப் பகையாயிருப்பதாலும், அவருடைய பிரமாணத்துக்குக் கீழ்படியாமலும், கீழ்படியக்கூடாத நிலைமையில் இருப்பதாலும் அழியக்கூடியது. ஆத்துமாவோடு ஆவியோ அழியக்கூடியதல்ல. ஆகையால் அதைமாத்திரம் கேட்கிறார். மேலும் அப்படி கேட்பதற்கு இன்னோர் காரணமுமுண்டு. இந்த சரீரமாகிய கூடாரத்தையும், அதிலுள்ளவைகளையும், அவரே உண்டாக்கினபடியால் அவைகள் அவருக்குச்சொந்தம். ஆகையால் அதைக் கேட்கிறார்.

சிஷன்:—அவருக்குச் சொந்தமாயிருந்தால், அவர்தாமே வந்திருந்துகொள்ளலாமே! அதற்காக நம்மிடம் கேட்க வேண்டியதில்லையே!

குரு:—ஒரு மனுஷன் ஒரு வார தவணைக்கு ஒரு வீடு கொடுத்து வீட்டுச் சாவியையும் கொடுத்தான். நான் என் சாமான்களை வீட்டுக்குள் வைத்து பூட்டிவிட்டு வெளியே போய்விட்டேன். கொடுத்தவனோ என் உத்திரவில்லாமல், வீட்டைத்திறந்து, அதற்குள் பிரவேசித்திருக்கிறான். நான் வந்து ‘நீ எப்படி வீட்டிற்குள் பிரவேசிக்கலாம்’ என்று அவனைக்கேட்டதற்கு, ‘என் வீடுதானே’ என்று சொல்லுகிறான். வார்த்தையின்படி அவன் வீடாயிருந்தபோதிலும், ஒருவாரத்துக்கு அவன் எனக்கு ஒப்புக்கொடுத்திருக்கிறபடியால், தவணைவரை அவன் வீடாகுமா? நியாயப்படி கவனித்தால் அவன் வீட்டைத் திறந்தது நீதிக்கு விரோதம். அப்படிப்போல ஆதியில் தேவன் உலகத்தை உண்டாக்கி, அதை ஆண்டு கொள்ளும்படி அவருடைய சுயாதீன சித்தத்தை மனுஷனுக்கு கொடுத்திருந்தபடியால் இவன் பாவத்தைச் செய்தாலும் கீழ்படிதலோடு அவரைத்தேடி, மனக்கண்ணீர் சொரிந்து, திரும்பவும் தன்னை அவரிடம் ஒப்புக்கொடுத்தாலல்லாமல், இவன்

பாவம் போகமாட்டாது. (எசே. 33, 15.) அவர் இவனிடம் வருவதற்கும் இவன் இடம் கொடுக்கவில்லை. ஆகையால்தான் அவருடைய சொந்தவீடாயிருந்தாலும், அவர் அதை இவனிடம் ஒப்புக்கொடுத்திருந்தபடியால், வந்து கேட்கிறார். இவன் பாவம் போக சுத்திகரிக்கப்படவேண்டுமானால், நீதியின் ராஜா உட்பிரவேசிக்க இவன் அவருக்கு மனத்தாராளமாய் இடம் கொடுக்கவேண்டும்.

சீஷன்:—எசேக். 33, 15ல் தான் வாங்கின அடைமானத்தையும் கொள்ளையிட்ட பொருளையும் திருப்ப ஒப்புக்கொடுக்கவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறதே! இதின் கருத்தென்ன?

குரு:—வாங்கின அடைமானம் என்பது தேவன் தமது சொந்த உலகத்தை ஒன்றுமில்லாத வெறும் மனுஷன்கையில் ஒப்புக்கொடுத்ததைக்குறிக்கும். கொள்ளையிட்ட பொருள் என்பது 'நீ அதைத்தொடாதே; தொட்டால் சாவாய்' என்று சொல்லியிருந்தும், மனுஷன் தேவவார்த்தையை மீறி, அவர் சொத்தை அபகரித்து, அவரைப் போலாகவேண்டுமென்று கொள்ளை செய்தான்; இதனால் சாத்தானுக்குப் பிள்ளையானான். இனிமேல் தன்னைத்தான் மனப்பூரணமாய் அவரிடம் ஒப்புக்கொடுத்தால்தான், அவருடைய ஜீவப்பிரமாணம் அவனுக்குள் வழிகாட்டியாயிருந்து, அவனை தேவனுக்குப்பிள்ளையாக்கும்.

சீஷன்:—வெளி. 22, 11-12ல் 'நலம் செய்கிறவன் நலம் செய்யட்டும்; அனியாயம் செய்கிறவன் அனியாயம் செய்யட்டும்; அவனவனுக்கு அளிக்கும் பலன் என்னோடு வருகிறது' என்று தேவன் சொல்லுகிறாரே! இதற்கு திருஷ்டாந்தமாக ஒரு மனிதன் இறந்து மோக்ஷத்துக்குப் போகிறான். அவன் மகன் நரகத்துக்குப்போகிறான். அச்சமயத்தில் அவன் தன் தகப்பனைக்கூப்பிட்டு "உனக்குக்கிடைக்கும் மோக்ஷத்தில் எனக்குக்கொஞ்சம் பங்குகொடு." என்றால் கொடுப்பானா? அல்லது 'எனக்குக்கிடைத்திருக்கும் நரக தண்டனையிலாவது

கொஞ்சம் பங்கு நீ வாங்கிக்கொள்' என்றால் ஒத்துக் கொள்வானா? ஒத்துக்கொள்ளமாட்டான். வேதவாக்கியத்தின் படி அவனவன் செய்த பாவம் அவனவனோடே; அவனவன் செய்த புண்ணியம் அவனவனோடே. இப்படியே சாஸ்திரங் களும் ஒத்திருக்க ஆதாம் செய்த பாவம் அவனோடு போகாமல் எல்லா மனுஷருக்குள்ளும் வந்துவிட்டதென்றால், எந்த வழி யாய் வந்துவிட்டது?

குரு:—இது இயற்கை; முடிவிற்குக் கொண்டுவருவது மகா அரிது. இனி சிருஷ்டிப்பின்படி கவனிக்கவேண்டும். நாகப்பாம்பின் முட்டைக்குள் நஞ்சிருக்கிறதென்று பொதுவாக யாவருக்கும் தெரிந்த விஷயமே! அப்படியானால் நாகப்பாம்பு தன்நஞ்சை முட்டைக்குள் கக்கிவைக்காதிருக்க, முட்டைக்குள் நஞ்சு எவ்விதமாய் வந்தது? ஆண்பெண் சேர்க்கையில், இரத் தத்துக்குள் தன்னுருவம்போல கரு அமையும்போதே நஞ்சும் அதனுடன் ஊடுருவி அமைந்திருக்கிறது. அதுபோலவே ஆதாம் ஏவாளுடைய மாமிசதேக சம்பந்த இரத்தத்தினால் பிள்ளைகளைப்பிறப்பிக்கும்போது அவர்கள் செய்த பாவமும் இவர்களுக்குள் ஊடுருவி, கருவில் அமைந்து, நிறைந்து இப் படியே எல்லாருக்குள்ளுமிருக்கிறது. (யாத். 20, 5.) 'பிதாக் களுடைய அக்கிரமத்தைப்பிள்ளைகளிடத்தில் மூன்றாம் நான்காம் தலைமுறை மட்டும் விசாரிக்கிறவராயிருக்கிறேன்." மூன்றாம் நான்காம் என்றால்: மூன்றும் நான்கும் ஏழு என்றர்த்தமாம். ஏழு என்றால் நிறைவு என்றர்த்தமாம் அந்த வாக்கியத்தின் கருத்தென்னவென்றால்: ஆதாம் செய்த பாவம் இயற்கை யாகவே நியாயத்தீர்ப்பு வரையிலும் எல்லாருக்குள்ளுமிருக்கு மாம். இது அறாது; ஒழியாது; விலகாது. இதிலிருந்து மனிதனை விடுவிக்கிறதற்காக 'என்னை விசுவாசி; அப்போது இரக்ஷிக்கப்படுவாய்,' என்று கிறிஸ்துவானவர் சொல்லியிருக் கிறார். 'விசுவாசம்' என்பது ஒரு தந்திக்கம்பியைப்போலாம். மனிதனின் இருதயமும் தேவனுடைய இருதயமும் தந்தி ஆபீஸ்கள் போலவாம். பாவத்திலிருந்து கிறிஸ்துவின் இரத் தத்தினால் நாம் மீட்கப்பட்டு தேவனிடம் சேரவேண்டுமானால்

அவர் நமக்குக் கொடுத்திருக்கிற விசுவாசம் என்னும் மனேந்திரக்கருவியின் தந்தியின் மூலமாய் மாத்திரம் நம்முடைய காரியாதிகளை அவருக்குத் தெரியப்படுத்தவேண்டும். அப்போது 'கேளுங்கள் கொடுக்கப்படும்' என்ற திருவாக்கின்படி அவரிடத்திலிருந்து பதில் கிடைக்கும். அப்போது இயற்கைப் பாவம் நமது மாமிசத்திலே செத்து, கிறிஸ்துவுடனே ஆவிக்குள் நாம் உயிராயிருப்போம். (ரோமர் 8, 1-4.)

சீஷன்:—மனதில் பாவம் எந்தயிடத்திலிருக்கிறது?

குரு:—மனுஷனுடைய உந்திஸ்தானத்திலிருந்து உச்சிக்குளிவரையிலும், **நான்** என்னும் அகங்காரமானது சகலபாவத்தையும் பிறப்பிக்கத்தக்கதாக, மனக்கண்ணுக்குந் தெரியாமலே மாமிசத்துக்குள்மறைவாயிருந்துகொண்டு, வெளியரங்கமாகும் சுழல்சக்கரமாகிய நாவினல் தன் நினைவுக்குத்தக்கபடி ஏராளமான பொய்களைப் பிறப்பித்து, (நீதி. 6, 14. திரியாவரம் என்பது நாவாகிய சுழல்சக்கரம்) கண் வழியாய் வெளியுலகத்தைக் கவர்ச்சியினுலிழுத்து, ஆயுள் சக்கரமாகிய இருதயத்தில் (யாக் 3, 6.) சுய இச்சையினுல் அடிக்கடி அனியாயங்களை இணைத்துப் பிணைத்துக்கொண்டிருக்கிறது. ஆகையால் பரி. பவுல் ரோமர் 7, 17ல் 'ஆதலால் **நான்** அல்ல; எனக்குள் வாசமாயிருக்கிற பாவமே அப்படிச்செய்கிறது' என்றூர், இருதயம் எப்போதும் தெய்வத்தை நோக்கிக்கொண்டிருந்தாலும், மனம் அதோடு சார்ந்திருக்கவேண்டியதாயிருக்க, மனத்துக்குத்தெரியாமல் மாமிசத்துக்குள் ஒளித்துக்கொண்டிருக்கும்பாவம், மனக்கண்ணை மூடிக்கொண்டிருப்பதால்தான், ரோமர் 7, 22-23ல் 'உள்ளான மனுஷனுக்கேற்றபடி தேவனுடைய நியாயப்பிரமாணத்தின்மேல் பிரியமாயிருக்கிறேன். ஆகிலும் என் மனதின் பிரமாணத்துக்கு விரோதமாய்ப் போராடுகிற வேறொரு பிரமாணத்தை என் அவயவங்களில் இருக்கக் காண்கிறேன். அது என் அவயவங்களில் உண்டாயிருக்கிற பாவப்பிரமாணத்துக்கு என்னை சிறையாக்கிக்கொள்ளுகிறது' என்று சொல்லியிருக்கிறது.

உள்ளான மனுஷன், இருதயத்தில் வசிக்கும் ஆத்துமாவோடு ஆவிக்குரியவன். புறம்பான மனுஷன், பூரணமாமிசதேகியாகிய இப்பிரபஞ்சத்துக்குரியவன். பாவிக்காவது பரிசுத்தவானுக்காவது, இன்பத்திலும் துன்பத்திலும் இருதயம் தெய்வத்தை எப்போதும் நோக்கிக்கொண்டிருக்குமாம். இதற்குநேர்விரோதமாய், மனதில் உலகமிருப்பதாலும், பாவம் மாமிசத்துக்குள் மறைவாயிருந்துகொண்டு, தெய்வத்தை நோக்கிக்கொண்டிருக்கும் இருதயத்துக்கு ஓயாமல் உலகத்தைப் பலவாறு நிழலைப்போல்காட்டி, அதை மயக்கி அதை மாமிசசித்தத்துக்குள் வசப்படுத்திக்கொள்வதால் 'என் மனதின் பிரமாணத்துக்கு விரோதமாய்ப்போராடுகிற வேறொரு பிரமாணம் என் அவயவங்களில் இருக்கிறது; அது என்னை எப்பொழுதும் பாவத்துக்குச்சிறையாக்கிக்கொண்டிருக்கிறது; ஆவி மாமிசத்துக்கு விரோதமாகவும், மாமிசம் ஆவிக்கு விரோதமாகவும் இச்சித்துக்கொண்டிருக்கிறது' என்றும், 'நீங்கள் செய்யவேண்டுமென்றிருக்கிறவைகளைச் செய்யாதபடிக்கு இவைகள் ஒன்றுக்கொன்று விரோதமாயிருக்கிறது' என்றும் (கலா. 5, 17.) சொல்லப்பட்டிருக்கிறது.

சீஷன்:—ஆவியும் மாமிசமும் ஒன்றுக்கொன்று விரோதமாய், இச்சையினால் என்ன விதமாய் இழுத்துக்கொண்டிருக்கிறது?

குரு:—இதின் விபரம் சொல்லுகிறேன்; கேள். ஒரு இடத்தில் காந்தத்தையும் அதற்குச் சமீபமாய் இரும்பையும் வைத்தால் சும்மாயிருக்குமா? இருக்கமாட்டாது. ஒன்றை ஒன்று இழுத்துக்கொண்டிருப்பது கண்ணுக்குத்தெரியாது. அப்படிப்போல் மனுஷருக்குள்ளும் ஒருவருக்கொருவர் பாவ செயலை அந்தரங்கமாய் எண்ணிக்கொண்டிருப்பது யாருக்கும் தெரியாது. காந்தத்தை 'ஏன் இப்படி இழுக்கிறாய்,' என்று கேட்டால் 'ஐயோ! நான் சும்மாயிருக்கிறேன். அந்த இரும்புதான் என்னை இழுக்கிறது' என்று சொல்லுகிறது. இரும்பைப்பார்த்து 'ஏன் அதை 'இப்படி இழுக்கிறாய்' என்று

கேட்டால் 'காந்தம் என்னை இழுத்துக்கொண்டிருக்கிறது,' என்று சொல்லுகிறது. இப்படியிருக்க இதற்கு வழக்குச் சொல்ல யாரால் கூடும்? காந்தமில்லாமல் இரும்பு இழுக்கப்படுவதுமில்லை; இரும்பில்லாமல் காந்தம் இழுக்கிறதுமில்லை. இது யாவருக்கும் தெரிந்தவிஷயமே. அப்படிப்போல உலகத்தில் ஆணுக்கு விரோதமாய்ப் பெண்ணும், பெண்ணுக்கு விரோதமாய் ஆணும், பார்வையில் பேச்சு நன்றாய்ப் பேசினபோதிலும், அவர்கள் இருதயத்தில் ஒருவருக்கொருவர் இச்சித்து மனக்கவர்ச்சியில் இழுத்துக்கொண்டிருப்பது அவர்களைத்தவிர யாருக்கும் தெரியாது. இப்படியாக ஆவிக்கு விரோதமாய் மாமிசமும், மாமிசத்துக்கு விரோதமாய் ஆவியும் இச்சித்துக்கொண்டிருக்கிறது. இது உலகத்தில் தீரு வழக்காயிருக்கிறது.

சீஷன்:—இப்படி இது அரு வழக்காயிருந்தால், இதைத் தீர்ப்பதெப்படி?

குரு:—இதைத்தீர்க்க முடியாதென்று சொல்லவில்லை. காந்தத்துக்கும் இரும்புக்கும் ஊடே ஒரு கல்லை வைத்து விட்டால், அவைகளின் ஒட்டுறவு விட்டுவிடுவதுபோல, பிரபஞ்சத்தைச்சார்ந்த மாமிசத்துக்கும் ஆத்துமாவைச் சார்ந்த ஆவிக்கும் ஊடே கிறிஸ்துவாகிய ஞானக்கல் வந்திரங்கி தங்கிவிட்டால், இந்தவழக்கு தீர்ந்துவிடும். (எசாயா 28, 16.) 'ஆகலால் கர்த்தாகிய ஆண்டவர் உரைக்கிறதாவது:— இதோ, அஸ்திபாரமாகிய ஒரு கல்லை நான் சீயோனிலே வைக்கிறேன்; அது பரீக்ஷிக்கப்பட்டதும், விலையேறப்பெற்றதும், திட அஸ்திபாரமுள்ளதுமான மூலைக்கல்லாயிருக்கும்; விசுவாசிக்கிறவன் பதறான் 1 கொரி. 3-10.

இதற்கு திருஷ்டாந்தமாக ஒரு ஆலமரமிருக்கிறது அதின் காய், கனி, இலை, வேர், கிளை ஒரு மனுஷனுக்குள்ளடங்கியிருக்கும் பாவசெயலுக்குச்சமானம் இந்த மரம் வேர் அற வெட்டுப்பட்டாலொழிய மனுஷனுக்குள்ளிருக்கும் பாவம் போகாது.

சீஷன்:—இதை எந்த விதமாய் வெட்டுகிறது?

குரு:—ஆலவிதை 'நான்' என்பவனும். வேரிலிருந்து மரம் முழுவதும் 'நான்' என்னும் விதையிலிருந்து இச்சையினால் பிறப்பிக்கப்படும் ஏராளமான பாவங்களுக்குச் சமானமாம். மரத்தை வெட்ட கோடாரிவேண்டும். பாவத்தை வேரற வெட்டும் கோடாரிசத்தியவசனம் என்னும் கோடாரியே இந்த கோடாரி ஆத்துமா என்பவன் கையில் அகப்படவேண்டும். இது எந்த விதமாய் அவனுக்குக்கிடைக்கும்? நாலுபடிகள் கடந்தால் இது அவனுக்குக்கிடைக்கும். முதலாவது: ஆத்துமாவில் பாவத்தைப்பற்றிய உணர்வு தோன்றவேண்டும்; இரண்டாவது: தன் பாவங்களெல்லாவற்றையும் நினைவு கூர்ந்து கிறிஸ்துவினிடத்தில் அறிக்கை செய்யவேண்டும். மூன்றுவது: கிறிஸ்துவைப்பற்றிய பூரண விசுவாசம் வேண்டும்; நாலாவது: தன்னைத்தத்தம் பண்ணி அவரிடத்தில் ஒப்புக்கொடுத்துவிட வேண்டும். இந்த நான்கு படிகளையும் தாண்டினவுடனே நீதிக்குரிய பட்டயம் அவன் கையில் கிடைக்கும். அவன் அந்த மரத்தை வேரற வெட்டி ஒன்றுமில்லாமல் செய்து விட்டான். இப்போது பாவம் போச்சுதா? இல்லையா? பாவம் இன்னும் போகவில்லை. வேரற வெட்டினவுடன் சகல பாவங்களும் நீக்கப்பட்டாலும் ஒரு பாவம் நின்றுகொண்டது.

சீஷன்:—அந்த ஒரு பாவம் எது?

குரு:—பழையபடி ஆலமரத்தைப்போன்ற சகல பாவங்களையும் உண்டாக்கக்கூடிய 'நான்' என்பவனுக்குள்ளிருந்து புறப்படும் 'இச்சை' யென்னும் ஆலவிதையே அந்தப்பாவமாம். இந்த விதை கண்ணுக்குத்தெரியாததால், பட்டயத்தின் கூர்மைக்கு அகப்படுகிறதில்லை. ஆகையால் பழையபடி ஆலமரத்தைப்போன்ற ஏராளமான பாவங்களைப் பிறப்பிக்கும். இதைப் பரம அக்கினி வந்து சுட்டெரித்தாலொழிய நிர்மூலமாகாது.

முன் சொன்ன நாலுபடிகளையும் ஒருவன் தாண்டினுன் என்றுல்: ஒன்பது கற்பனைகளையும் அதிகபிரயாசத்துடன்

நிறைவேற்றின நீதிமான் எனக்கருத்தாம். பத்தாம் கற்பனேயோ ஆவிக்குறியதானதால் ஒருவனுகிலும் நிறைவேற்றப் படக்கூடியதல்ல. ஆகையால் 'கிறிஸ்து நியாயப்பிரமாணத்தின் முடிவாயிருக்கிருர்' என்று பவுல் அப்போஸ்தலன் சொல்லுகிருர். (ரோமர் 10, 4.)

சிஷன்:—நியாயப்பிரமாணத்தின் முடிவென்பதென்ன?

குரு:—நியாயப்பிரமாணத்தின் முடிவு என்பது: கற்பனேகளில் கடைசிக் கற்பனேயாகிய பத்தாம் கற்பனேயே. இந்தக் கற்பனே 'பின்னும் பிறனுக்குள் யாதொன்றையும் இச்சியாதே' என்பதாம். ஒன்பதாம் கற்பனேயில் 'பிறனுடைய மனேவியை இச்சியாதே' என்று சொன்ன தேவன் 'பின்னும் பிறருக்குள் யாதொன்றையும் இச்சியாதே' என்று பத்தாம் கற்பனேயிலும் சொல்லியிருக்கிருர். 'யாதொன்றையுமிச்சியாதே' என்று சொல்லும்போது சர்வமும் இதில் அடக்கமாயிருப்பதால் மனுஷரில் பரிசுத்தவான் என்று பேரெடுத்த ஒருவனுகிலும் இதை நிறைவேற்றக்கூடியவனல்ல. கிறிஸ்து ஒருவரே பாவமில்லாதவராய் மாமிசத்தில் தோன்றி மாமிசத்தில் சிலுவையிலே மாணத்துக்குள்ளாக நிறைவேற்றினவர். ஆகையால் 'கிறிஸ்து நியாயப்பிரமாணத்தின் முடிவாயிருக்கிருர்' என்று ரோமர் 10, 4ல் சொல்லப்பட்டிருக்கிறது.

சீஷன்:—கிறிஸ்துவானவர் என்ன விதமாய் நிறைவேற்றினுர்?

குரு—இவர் சர்வலோகத்தின் பாவங்களுக்காகவும் சிலுவையில் ஜீவன் விடும் நேரத்தில் 'முடிந்தது' என்று சொன்னபோது நிறைவேற்றினுர். இவர் நிறைவேற்ருதது ஒன்றுமில்லாதிருக்க அவர் பிதாவினிடத்தில்போய் பரிந்து பேசுகிருர் என்று சொல்லியிருக்கிறது. சகலத்தையும் முடித்தஇவர், இங்கே முடியாதது ஒன்றுமில்லாதிருக்க பிதாவினிடத்தில் பரிந்து பேசிக்கொண்டிருப்பது எதற்காக

வென்ருல்: ஒன்பது கற்பனைகளையும் நீதிமான்கள் தாண்டி ஞலும், பத்தாம் கற்பனை ஆவிக்குரியதாயிருப்பதால், அதைத் தாங்களே நிறைவேற்றிக்கொள்ள சக்தியற்றவர்களாயிருக் கிருர்கள்; அவர் பரிந்து பேசுவது இனி பாவிகளுக்காக அல்ல; பரிசுத்தவான்களுக்காகவே பரிந்து பேசி, (ரோமர் 8. 26-27.) முற்றுமுடிய இரக்ஷிக்கவல்லவராயிருக்கிருர். (எபி 7, 25.)

ஒன்பது கற்பனைகளையும் ஒரு விசுவாசி தாண்டி ஆவிக் குரிய ஜீவியம் செய்யும்போது, உலகத்தார் யாவரும் அவனை மெச்சிக்கொள்ளுவார்கள். என்னத்தினுலென்ருல் அவனு டைய அவயவங்களில் புறம்பான செய்கையினுலே யாதொரு பாவத்தையும் மற்றவர்கள் கண்டுபிடிக்க முடியாததால் அவர் கள் அவனைப் புகழுகிருர்கள். இந்தப்புகழ்ச்சியை அவன் தேவ னுக்குக் கொடுக்கவேண்டியதிருக்க தானே ஏற்றுக்கொள்ளப் போய், ஆவிக்குரிய அந்தரங்கமான பெருமை அவனும் அறி யாமலே அவனுக்குள் உண்டாயிற்று. அந்த விசுவாசியோ மாமிசத்திலே பாவத்துக்குச்செத்து சத்தியத்தைக்கொண்டு கிறிஸ்துவுடனே ஆவிக்குள்ளுயிரானவன். சாத்தானே அந்த விசுவாசியின் மாமிச சம்பந்தான பலகிரியைகளின் மூல மாய் அவனை வசப்படுத்திக்கொள்ள முடியாததால், இவன் (சாத்தான்) பல வேஷம் தரிக்கக்கூடியவனுனதால், கடைசி யாக அவனுக்காக ஒளியின் வேஷம் தரித்து (2 கொரி. 11, 14.) ஆவிக்குள்ளாக நின்றுகொண்டு, மாமிசத்தினுள் 'நான்' என்னும் இச்சையின் வேசித்தனத்தை, ஆவிக்குள் அவனை யறியாமலே நினைப்பூட்டி, அதில் அடிக்கடி அவனை அமிழ்த் திப்போடுகிருன். ஆகையால் ஆவிக்குரிய ஜீவியம் செய்கிற வர்களிடத்தில் அந்தரங்கமாயிருந்துகொண்டுவரும் பெருமை, வேசித்தனம் என்பவைகள் தெய்வத்துக்கும், இதைச் செய் கிறவர்களுக்கும், பிசாசுக்கும் தெரியுமேயல்லாமல், மற்றவர்க ள் சாமான்யமாய் கண்டுபிடிக்ககூடியதல்ல. சமையாசமையங் களில் ஆவியானவருடைய வெளிச்சம் அவனுக்குத்தோன்றி, அவனது அந்தரங்கபாவத்தை உணர்த்திக்காட்டும்போது, அவன் யாரும் அறியாமல் மனக்கண்ணீர் சொரிந்து இந்

எப்போது விலகுமென்று அவரை வேண்டிக்கொள்ளுகிறான். அப்போது அவன் ஆத்துமா துக்க சாகரத்தில் அமிழ்ந்தி அடிக்கடி தேவனைத்தேடுகிறான். ஆவியானவர் மறுபடியும் அவனிடம் வந்து வெளிச்சத்தின் கிரியைகளை நடப்பிக்கிறார். கொஞ்ச நாள் பொறுத்து சாத்தான் வேஷமாறி அவன் அஜாக்கிரதையாயிருக்கும்போது பார்த்து, ஆவிக்குள்ளான பெருமையோடு துர் இச்சையைக்கொண்டு ஆத்துமாவைக் கெடுத்து தேவ ஞானத்தைத்தடுக்க திடீரென்று அந்த விசுவாசியைப் பாவத்தில் தள்ளி விடுகிறான். இப்படியே மாறி மாறிப் போராடுவதால், ஆவிக்குரிய பெருமையோடு துர் இச்சையைக்கொண்டு சில விசுவாசிகளை வரவர சமுசயத்துக்குள்படுத்திவிடுகிறான். கடைசியாக அவர்கள் சத்தியத்தில் வல்லமையில்லையென்றெண்ணி கிறிஸ்துவைவிட்டுச்சோரம் போய் அவரைத் தெய்வமில்லையென்று சொல்லிக்கெட்டுப் போகிறார்கள் ; பிறரையும் கெடுத்துப்போடுகிறார்கள். இப்படிக் கெட்டுப்போவதற்குக் காரணமென்னவென்றால்: இவர்கள் மனப்பூரணமாய் அந்தரங்கத்துக்குள் கிறிஸ்துவுக்குத் தங்களைத் தத்தம் பண்ணினவர்களல்ல.

**சீஷன்:**—நீங்கள் சொன்ன வாக்கியங்களிலிருந்து மாமிசத்தினுள் மறைந்திருக்கும் ஆலவிதைபோன்ற நான் என்பவனை, அக்கினிவந்து சுட்டெரிக்கவேண்டுமென்றும், இச்சியாதே என்னும் இந்தக்கொடிதான பிரமாணத்தை கிறிஸ்து மட்டும் சிலுவையிலே நிறைவேற்றி இதினிமித்தம் விசுவாசிகளுக்காக இன்னம் பரிந்து பேசிக்கொண்டிருக்கிறார் என்றும் அறிந்துகொண்டேன். நீங்கள் முன் சொன்னவாக்கியங்களில் ஆவி, ஆத்துமா, இருதயம், மனம், சரீரம் என்பவைகள் ஒன்றுக்கொன்று குழப்பமாயிருக்கிறதே யல்லாமல் எனக்கு நன்றாய் விளங்கவில்லை; ஒற்றுமைக்கு வந்து சேரவுமில்லை.

**குரு:**—நீ தத்தளிக்கவேண்டாம்; ஆத்துமா, ஆவி, இருதயம், மனம், மாமிசம் இவைகளின் தத்துவங்களைக்காட்டி,

பரம அக்கினி வரும்பாதையையும் சொல்லுகிறேன் ; கேள். நான் முன்சொல்லியிருக்கிறபடி, ஆதாமுக்கு நாசியில் ஜீவ சுவாசத்தை ஊதினார். இவன் நாசியில் ஓடிய சுவாசமட்டும் மிருகங்கள், பறவைகள், ஊறும் பிராணிகள், மனுஷர் யாவருக்கும் பொது. எப்படியென்றால் வெளியாகாயத்தை நாசிவழியாய் சுவாசித்து முழுச்சரீரமும் உயிர்ப்பிக்கப்படுகிறது. இந்த சுவாசம் பிரபஞ்சமாகிய உலகத்தோடும், மாமிசத்தோடும் சேர்ந்து, மற்றும் ஜீவப்பிராணிகளைப்போல, அழியக்கூடியதென்று பிரசங்கி 3, 18-21. வாக்கியங்களில் தெளிவாய் முன் எடுத்துக்காட்டியிருக்கிறேன், யோசே முனிவன் எழுதிவைத்த ஆதி, 2, 7ல், மனுஷன் ஜீவாத்துமாவானனென்று எழுதியிருக்கிறது. இதில் அநேக விசேஷித்த காரியங்களுண்டு. ஆயினும் சுருக்கம் சொல்லுகிறேன். ஜீவாத்துமாவானன், ஆவியானன், அல்லது ஆத்துமாவானன் அல்லது ஜீவனானன், அல்லது உயிரானன், அல்லது சரீரமானன், என்று தனிப்பேர் கொடுக்காமல் எல்லாவற்றையும் சேர்த்து தொகுப்பாய், மனுஷனே ஜீவாத்துமாவானன் என்று சொல்லுயிருக்கிறது. ஜீவனோடு மாமிசதேகமும், மற்ற ஜீவராசிகளைப்போல பிரபஞ்சத்தில் அழியுமென்றும், ஆத்துமாவோடு ஆவிமட்டும், மனுஷர்களுக்கு விசேஷமாக பிரத்தியேகமாயிருக்கிறதென்றும் விளங்குகிறது.

சிஷன்:—தேவன் மனுஷனுடைய நாசியில் தமது வாயினல் ஊதினார். ஊதின அந்த ஆவி, மனுஷனுடைய நாசியில் சுவாசித்துக்கொண்டிருக்கிறது. இந்த சுவாசம் நின்றுபோனல் மனுஷன் முற்றிலும் ஒன்றுமில்லாமலே போகிறன். அப்படியிருக்க ஆத்துமா பிரத்தியேகமாயிருக்கிறது என்கிறீர்களே! அது எங்கேயிருக்கிறது?

குரு:—யோபு 27, 2ல் 'என் சுவாசம் என்னிலும் தேவன் தந்தஆவி என் நாசியிலுமிருக்கிறது' என்று சொல்லியிருக்கிறது இன்னமும் யோபு 34, 14ல் சுவாசம் வேறு, ஆவி வேறு என்று பிரித்துக்காட்டியிருக்கிறது. ஆகையினல்

மனுஷனுடைய நாசியிலோடிய சுவாசம் வெளி ஆகாயம் என்றும், அவர் ஊதின ஆவியோ மனிதனுடைய சிரசு ஸ்தானத்திலடங்கி, ஒரு தீபத்தைப்போல பிரகாசித்துக்கொண்டிருக்கிறதென்றும் விளங்குகிறது. நீதி. 20, 27லும் 'மனுஷனுடைய ஆவி கர்த்தர் தந்த தீபமாயிருக்கிறது' என்றும் 'அது உள்ளத்தில் உள்ளவைகளையெல்லாம் ஆராய்ந்து பார்க்கும்' என்றும் சொல்லியிருக்கிறது. இதனுல் நான் முன் சொல்லியிருக்கிறபடியே ஆத்துமஸ்தானம் கண்டத்துக்குக் கீழ் என்றும், ஆவிஸ்தானம் கண்டத்துக்கு மேலே யென்றும் ஆத்தும ஒளி ஆவி ஒளியைக் கண்டால்தான் பரமஅக்கினி நமக்குள் ஊடுருவி மனக்கண் திறக்கப்பட்டு (எபே. 1, 19; அப்போஸ். 26, 18.) ஆத்துமா ஒளி ஆவி ஒளியைக்கண்டு ஆவிஒளி ஞானஒளியாகிய கிறிஸ்துவுக்குள் நித்தியாநித்தியமாய் வசிக்கும். நான் உனக்கு முன் சொன்னபடியே ஆத்துமாஒளிக்கும், ஆவிஒளிக்கும், இருதயத்துக்கும் மனதுக்கும் ஒற்றுமையில்லாமல், பாவம் ஒன்றுக்கொன்று எதிரிடையாக்கிவிட்டது. கிறிஸ்துவானவர் சொல்லிக்கொடுத்து விட்டுப்போன தபசுநிலையிலிருப்பாயானுல், பரமஅக்கினி இறங்கிவரும். சகல பாவங்களும் நீக்கப்படும்; எல்லாம் ஒருமையாகி நீயும் அவரோடு ஐக்கியமாகலாம்.

சீஷன்:—தபசு நிலையைப்பற்றி கிறிஸ்துவானவர் என்ன சொல்லியிருக்கிருர்?

குரு:—'நீயோ ஜெபம் பண்ணும்போது, உன் அறை வீட்டுக்குள் பிரவேசித்து உன் கதவைப் பூட்டி, அந்தரங்கத்திலிருக்கிற உன் பிதாவை நோக்கி ஜெபம் பண்ணு. அப்பொழுது அந்தரங்கத்தில் பார்க்கிற உன் பிதா வெளியரங்கமாய் உனக்குப்பலனளிப்பார்,' என்று மத். 6, 6ல் சொல்லுகிருர். முதலாவது 'உன் அறை வீட்டுக்குள் பிரவேசித்து,' என்று சொல்லுகிருர். முதலில் மனம் பல விஷயங்களில் ஓடவிடாதபடி அதை நிதானசக்தியில் நிறுத்தி (நீதி. 1, 3.) அதை அடங்கியிருக்கச் செய்யவேண்டுமாம். 'உன்

கதைவைப்பூட்டு' என்ருல்: ஆத்துமாவென்பவன் இருதயஸ் தானத்திலிருந்துகொண்டு மனதோடு சார்ந்து கண்ணிமைக் குள் சர்வலோக சிருஷ்டிகளிலும் பரவிசெல்லக்கூடியவனும். ஆகையால் வானத்திலோடிய மேகங்களைக் கணக்கிட்டாலும், அணுக்கள்போன்ற கொடிமாசான இவனுடைய ஆலோசனை களை அளவிடமுடியாததால் (யோபு 38, 37.) பஞ்சபூதங்களை வாகனமாகக்கொண்டு பஞ்சக்கருவிவழியாய் (பஞ்சக்கருவிகள் என்பவை: கண், காது, மூக்கு, வாய், மெய் ஆகிய ஞாபக சக்தி. சர்வலோகங்களிலும் சென்று வரப்போக இருக்கக் கூடியவன். ஆகையால்தான் 'உன் அறையைப்பூட்டு' என்று கர்த்தர் சொல்லியிருக்கிருர்.)

சீஷன்:—அறைகள் என்ருல் எத்தனை அறைகள்? அவைகள் எங்கெங்கே இருக்கின்றன? அவைகளை பூட்டுவ தெப்படி?

குரு:—அறைகளைப்பற்றிச் சொல்லுமுன், அவைகளையும் உன் தியானத்தையும் கெடுத்துக்கொண்டிருக்கிற சாத்தானைப் பற்றி இன்னேர் அந்தரங்கம் சொல்லுகிறேன்; ஞாபகத்தில் வைத்துக்கொள். கிறிஸ்துவானவர் மத். 10, 16ல் 'சர்ப்பங் களைப்போல் விவேகவுள்ளவர்களும், புருக்களைப்போல கபடற்ற வர்களுமாயிருங்கள்,' என்று சொல்லுகிருர். இதன் கருத் தாவது:—நாகபாம்பின் வாயின் இருபக்கங்களிலும், இரண் டிரண்டு நஞ்சுப்பற்கள் உண்டு. அவைகளை நன்ருய் கவனித் தால், தோல்பைகள்போலிருக்கும். அதனுள் நீல நிறமான நஞ்சு இருக்கிறது. இந்தச்சர்ப்பம் எந்த ஜீவராசிகளைத் தீண்டி னலும், தன் சரீரத்தைத்தானே தீண்டினலும் உடனே மரணம் நேரிடும். இப்படியிருக்க ஒரு பெருந்தவளையைப் பிடித்து, தன் வாய் நிறையவைத்து, மென்று விழுங்கும் போது, இருபக்கங்களிலுமிருக்கும் நஞ்சுப்பற்களில் ஏதாவது ஒன்று பட்டிருக்கவேண்டுமே. அப்படிப் பட்டிருந்தால், உடனே மரணம் நேரிட்டிருக்குமல்லவா? தன் நஞ்சு தன்னில் பட்டு பாம்பு மரணமாகிவிட்டது என்று யார் சொல்லக்கூடும்?

அப்படியுமல்ல. இதன் காரணமென்னவென்றால்:—நாகப்பாம்பானது எந்த இடத்திலாவது இரைபிடிக்கப் போகிறதற்கு முன், தன் நஞ்சு தன்னைக்கொல்லுமென்றறிந்திருப்பதால், இருபக்கங்களிலிருக்கும் நஞ்சுப்பையுள்ள கொக்கிப்பற்களை வெகு விநயமாய் சுருக்கிக்கொண்டு, அவைகளைப் பிடித்துத் தின்னும். பசியிருந்தபோதிலும் தன் எண்ணம் முழுவதும் நஞ்சுப்பைகளின்மேல் ஞாபகம் பண்ணிக்கொண்டிருப்பதால், இரை சாப்பிடும்போதும் எச்சமயத்திலும் தன்னைத்தானே நஞ்சுக்குத் தப்புவித்துக்கொள்ளுகிறதாம்.

இன்னோர் காரணமுமுண்டு. எந்தப்பாம்பு மரணமானாலும் கண் மூடுகிறதில்லை. இதனால் நாம் அறிந்துகொள்ளும் படிப்பினை யென்னவென்றால்:—கர்த்தர் சொல்லுகிற திருவசனத்தின்படி நாம் மனவிழிப்பாயிருந்து, நான் என்பவனால் ஆக்கப்பட்ட இப்பிரபஞ்சத்துக்குள்ளடங்கிய நம்முடைய முழுச் சரீரத்தில், சாத்தான் ஏவாளுக்குள் ஊட்டின நஞ்சுவித்தின் விஷம் உந்திஸ்தானத்திலிருந்து நாவுஸ்தானம் வரையும் நாகப்பாம்பு படம் எடுத்திருப்பது போல அடக்கமாயிருக்கிறது என்று அறிந்துகொள்ளும்படி அப்படிச் சொன்னார். நான் என்ற அகங்காரம் ஏராளமான பாவங்களைப்பிறப்பித்து, ஆத்துமாவை மரணத்துக்குட்படுத்தி விடுகிறபடியால், நாகப்பாம்பு தன் விஷப்பையின்மேல் நினைவும் விழிப்புமாயிருந்து தன் உயிரைத் தப்புவித்துக்கொண்டிருப்பதுபோல, நாம் ஒவ்வொருவரும் நமக்குள்ளிருக்கும் 'நான்' என்பவனாகிய இயற்கைப் பாவத்தின்மேல், மரணபரியந்தம் நினைவும் விழிப்புமாயிருந்து, மனம் என்பவனைக்கொண்டு ஒடுக்கி, எச்சமயம் 'நான் அல்ல; உன் செயல்' என்று நம்மை கிறிஸ்துவுக்கு மனவிழிப்போடு ஓயாமல் நினைவுக்குள் ஒப்புக்கொடுத்துக்கொண்டிருக்கவேண்டும். அப்போது நாம் சகல விஷயங்களிலும் 'நான்' என்பவனால் வரும் சகல ஆபத்துக்கும் சகல பாவத்துக்கும் தப்பிக்கொள்ளலாம். இப்படிப்பட்டவர்களிடம் பரிசுத்த ஆவியானவர் தாராளமாய்க் குடியிருப்பார். இதற்காகவே கிறிஸ்து இரக்ஷகர் புறாக்களைப்போல கபடற்றவ

களாயிருங்கள் என்றும் சொல்லியிருக்கிறார். கபடற்றவர்கள் என்றால்: இருதயத்தில் சுத்தமுள்ளவர்கள். புறாவைப்போல் என்றால்: புறா அசுசியானவைகளைத் தேடாது; தொடாது. மணிகளைமட்டும் பார்த்துப்பொறுக்கும். அப்படியே கிறிஸ்து வின் ஆவியானவரும் சுத்தமுள்ள இருதயத்தில் மாத்திரம் தங்குவார் என்ற கருத்தாய்ச் சொன்னாராம். ஆகையால் ஆவிக் குரிய பலத்த விசுவாசிகள் கர்த்தரை நோக்கித்தியானம் பண்ணும்போது, கண்ணைக் காட்டிலேயும் கருத்தை வீட்டி லேயும் வைத்துத்தியானம் செய்யாமல், முழு ஆத்துமா வோடும், முழு இருதயத்தோடும், முழு மனதோடும், முழு பலத்தோடும் தங்களை மறந்து ஆத்துமாவோடு ஆவிக்குள் தியானம் செய்வார்களானால், "நான் அல்ல; எல்லாம் உம் முடைய செயல்" என்று சொல்லி, அவர்களைத் தத்தம் பண்ணு கிறவர்களாய்க் காணப்படுவார்கள். அப்போது கிறிஸ்து வினுடைய ஆவியின் அக்கினிச்சுடரால், மூலாதாரத்தில் ஒளி த்து மறைவாயிருந்த 'நான்' என்பவனோடு சேர்ந்த சர்வபாவங் களும் நிர்மூலமாய்த்தகனிக்கப்பட்டு அவர்கள் ஆத்துமா ஆவி யோடு சேர்ந்து கிறிஸ்துவின் ஜீவ ஒளியைப்பெற்று அவருக் குள் சுகவாழ்வைப் பெற்றுக்கொள்ளும்.

நான் முன் சொன்ன அறைகளும் அவைகளிலுள்ள விபரங்களும் உன் மாமிசதேகமான வீட்டுக்குள்ளே அடங்கி யிருக்கிறது.இதைச் சோதித்துக் கண்டுபிடிப்பதற்கு பிரசங்கி 12ம் அதிகாரத்தைப்பார்.

உன் வாலிபகாலத்தில் உன் சிருஷ்டிகரை நினை. (பிர. 12, 1.) அதாவது: சிசுவில் தெய்வத்தை அறிந்துகொள்ள முடியாது. சிசு பரிசுத்தமான நிலைமையிலிருந்தபோதிலும் தன்னையும் தாயையும் அறியக்கூடாதிருப்பதால், தேவனை இழுத்துக்கொள்ளமுடியாது. விருத்தாப்பியமான காலத்தில் சகல விஷயத்திலும் அனுபோகஸ்தனாயிருந்தபோதிலும், பெலன் ஒடுங்கி, நரம்பு தளர்ந்து, ஞாபகசக்தி குறைந்து, மனம் பலவாறாய்ச் சிதறுண்டு, சாத்தானுடைய தூதர்

களாகிய பல வியாதிகளால் பீடிக்கப்பட்டு, பல்லுதிர்ந்து, கண் மங்கி, செவிதாழ்ந்து, நாவுகுளறி, சள்ளிருமல் கொண்டு, மெள்ள மெள்ளத்தள்ளாடி இப்படி அவஸ்தைப்பட்டுக்கொண்டிருக்கையில், ஓர்மையான புத்தியாய் தெய்வத்தை இழுத்துக் கொள்ளமுடியாது வாலிபகாலத்தில் பூரணமான மனதோடு எதையுமிழுத்துக்கொள்ள சக்தியிருக்கும்போதே தெய்வத்தைத் தேடிக்கொள் என்னும் கருத்தாகச் சொல்லப் பட்டிருக்கிறது.

'தீங்கு நாட்கள் வாராததற்குமுன்னும்' (பிரச 12- 1) உன் சரீரஜீவனுக்கு அழிவு வருவதற்கு முன்னும்;

'எனக்குப் பிரியமானவைகளல்லவென்று நீ சொல்லும் வருஷங்கள் வாராததற்கு முன்னும்' (பிரச. 12-1.) பார்வை நல்லதொனி, கேட்கஇடம், நல்லமணம், ருசி, பசி, தாகம், இவ்வளவும் அற்றுப்போகுமுன்னும்;

'சூரியனும், வெளிச்சமும், சந்திரனும், நக்ஷத்திரங்களும் அந்தகாரப்படாததற்கு முன்னும்' (பிரச. 12-2.) இவைகள் இருளடைந்து போவதற்குள்ளாகவும்; (இவைகளின் தனி விபரம் பின்னால் சொல்லுகிறேன்.)

'மழைக்குப்பின் மேகங்கள் திரும்பத்திரும்ப வாராததற்கு முன்னும்' (பிரச. 12-2.) சகலவிதமான கவலைகளும் திகில்களும் உன்னைமூடிக்கொள்வதற்கு முன்னும்;

'வீட்டுக்காவலாளிகள் தள்ளாடி' (பிரச 12-3.) சரீரத்தைக் காத்துக்கொண்டிருக்கிற வேலையாட்களாகிய கண், நாசி, செவி, வாய், கை, கால் சக்தியற்றுப் போவதற்குள்ளாகவும்;

'பெலசாலிகள் கூனிப்போய்' (பிரச. 12, 3.) உன் ஊண் சத்து உருகிப்போகுமுன்னும்;

'எந்திரம் அறைக்கிறவர்கள் கொஞ்சமானதினால் ஓய்ந்து' (பிரச. 12, 3.) உன்பற்களெல்லாம் உதிர்ந்து போவதற்குள்ளாகவும்;

'பலகணிவழியாய்ப் பார்க்கிறவர்கள் இருண்டு போகிறதற்கு முன்னும்' (பிரச. 12, 3.) உன் கண் குருடாய்ப் போகிறதற்குள்ளாகவும்;

'எந்திர சத்தம் தாழ்ந்ததினால்' (பிரச. 12, 4.) உன் தொண்டை இருபக்கங்களிலிருக்கும், பெருநரம்பு இரண்டும் தளர்ந்து;

'தெருவாசலின் கதவுகள் அடைபட்டு' (பிரச. 12, 4.) ஜெகஜாலப்பட்டணமான உன்னுடைய இருதய ஸ்தானங்களிலிருந்து வார்த்தைகள் புறப்படும் வாசலான தொண்டையில் சத்தம் அடங்கிப்போவதற்குள்ளாகவும்;

'கீதவாக்கியக் கன்னிகைகளெல்லாம் அடங்கிப்போகாததற்கு முன்னும்' (பிரச. 12, 4 ) நரம்பு என்னும் கயிறுகளால் பூட்டப்பட்டிருக்கும் சரீர முழுமையிலுள்ள தனு கெட்டுப்போகிறதற்குள்ளாகவும்;

'மேட்டுக்காக அச்சமுண்டாகி வழியில் பயங்கள் தோன்றி' (பிரச. 12, 5.) மரணபயங்கரத்திநிமித்தம் உன்னிருதயத்தின் யோஜனைகளெல்லாம் உனக்கு அபாயமாய்த் தோன்றுகிறதற்குமுன்னும்;

'வாதுமைமரம் பூப்பூத்து' (பிரச. 12, 5.) நரைதிரையாகிறதற்குள்ளாகவும்;

'வெட்டுக்கிளியும் பாரமாகி' (பிரச. 12, 5.) தலைப்பேன்களை கையெடுத்துச் சொரிகிறதற்கு சக்தியற்றுப் போவதற்குள்ளாகவும்;

'பசிதீபனமும் அற்றுப்போகாததற்கு முன்னும்' (பிரச. 12, 5.) உண்பனே, தின்பனே, குடிப்பினே இம்மூன்றும் வெறுப்புத்தோன்றுகிறதற்குள்ளாகவும்;

'மனுஷன் தன் நித்திய வீட்டுக்குப் போகிறதினலே' (பிரச. 12, 5) ஆத்துமாவோடு . ஆவியென்பவன் தெய்வ லோகத்துக்குப் போகிறதற்குள்ளாகவும்;

'துக்கங்கொண்டாடுகிறவர்கள் வீதியிலே திரியாததற்கு முன்னும்' (பிரச. 12, 5.) சரீரத்தின் நவத்துவாரங்களும் வியாதியால் அடைபட்டு துன்பம் துயரத்தைக்கொடுக்கிறதற்குள்ளாகவும்;

'வெள்ளிக்கயறு கட்டுவிட்டு' (பிரச. 12, 6) நரம்புப் பூட்டுகளின் கணு தெரித்துப்போகிறதற்குள்ளாகவும்;

'பொற்கிண்ணி நசுங்கி' (பிரச. 12, 6) ஆத்துமா யாதொரு நம்பிக்கையுமற்று, துக்கசாகரத்தில் அமிழ்ந்தி கேட்டுக்குள் போகிறதற்குள்ளாகவும்;

'ஊற்றினருகே சாலுடைந்து' (பிரச. 12, 6.) மூத்திரப்பை கசிவெடுத்துப் போகிறதற்குள்ளாகவும்;

'துறவண்டையில் உருளே நொறுங்கி, (பிரச. 12, 6) செப்பட்டை உருளே இரண்டும் நகண்டு போகிறதற்குள்ளாகவும்;

'இவ்விதமாய் மண்ணனது தான் முன்னிருந்த பூமிக்குத் திரும்பி' (பிரச. 12, 7.) நாசியிலோடிய வெளியாகாயமாகிய காற்று ஆகாயத்தோடும், மண்ணே ஆகாரமாய்ப் போஷித்து வந்த இந்த மாமிசதேகம் அந்தப்பழைய மண்ணேடு சேர்ந்து போகாததற்குமுன்னும்;

'ஆவி தன்னைத்தந்த தேவனிடத்திற்கு மறுபடியும் போகாததற்குமுன்னும்' (பிரச. 12, 7.) ஆத்துமாவோடு ஆவி பரலோகத்தின் தேவனிடத்துக்குப் போகாததற்குமுன்னும்;

'உன் வாலிபபிராயத்தில் உன் சிருஷ்டிகரை நினை.'

அநேக தத்துவஞானிகளான யோக அப்பியாசிகள், மனிதருடைய நாசியிலோடும் சுவாசமாகிய வலது சரந்தைச் சூரியகலை யென்றும், இடதுபக்கமாய் ஓடும் சுவாசத்தை சந்திர கலை யென்றும், வலது பக்கம் ஓடும் சுவாசம் பகலென்றும், இடதுபக்கமாய் ஓடும் சுவாசம் இரவென்றும், இடகலை பின் கலை யென்றும், கருஞ்சாரை வெண்சாரை யென்றும், சிலர் அதை ஆண் பெண் என்றும், சொல்லுவார்கள். இந்த சுவாசத்தை கணக்கின்படி அவயவத்துக்குள்ளடக்கி சாதன அப்பியாசம் செய்து வந்தால் முக்தியடையலாமென்றெண்ணி இவ்வப்பியாசம் செய்து வந்ததில், சிலருக்கு மூல அக்கினி எழும்பி, கணக்குமீறி, சிரசு வெடித்ததுமல்லாமல், சிலர் பலத்த வியாதிகளாலும் மாண்டார்கள். சிலருக்கு பைத்தியம் உண்டாகி அங்குமில்லாமல் இங்குமில்லாமல் கெட்டழிந்தார்கள். இக்காலத்திலும் அநேகர் இப்படி முடிவுக்கு வாராததும் ஆத்துமாவுக்கு பிரயோஜனமற்றதுமான வீண் அப்பியாசங்களை நம்பிக்கெட்டார்கள். இன்னமும் தங்களையும் பிறரையும் அநேகர் கெடுத்துக்கொண்டிருக்கிறார்கள். பரம சற்குருவாகிய கிறிஸ்துவானவரோ, 'என்னை சுவாசி, அப்பொழுது நீ இரக்ஷிக்கப்படுவாய்' என்று சொன்னரே யல்லாமல் 'நாசியிலோடும்சுவாசத்தை இழுத்தடக்கி, இதையே நம்பி சாதனப்பியாசம் செய்து வந்தால், நீ இரக்ஷிக்கப்படுவாய்' என்று சொல்லவில்லை. ('வி' என்னும் பதத்துக்கு சமஸ்கிரத தத்துவஞானத்தில் 'முன் சுவாசித்தல்' என்றர்த்தமாம்.) கொடுமையானதும் மரணபயங்காரத்துக்குரியதுமான வீண் அப்பியாசத்தைச் செய்யும்படி தேவன் கட்டளை கொடுத்திருப்பாரானல் பெலவீனமானவர்கள், தரித்திரதிசையிலுள்ளவர்கள், சிசுக்கள், பெண்கள், விருத்தாப்பியர் முதலியவர்கள் எல்லாரும் என்ன செய்வார்கள்?

சத்திய வேதத்திலோ 'என்னை விசுவாசி; அப்பொழுது நீ இரக்ஷிக்கப்படுவாய்' என்று கிறிஸ்துவானவர் சொல்லியிருக்கிறார். 'சத்திய ஆவியை நீ உன் ஆத்தும நாசியில் என்னை நம்பி சுவாசிக்க, உன் ஆத்துமாவில் உயிரடைந்து நித்திய ஜீவனைப் பெற்றுக்கொள்வாய்' என்று கிறிஸ்து சொன்னாரேயல்லாமல், 'உன் சரீரநாசியில் ஓடும் வெளியாகாயத்தை இழுத்து அடக்கி அப்பியாசம் செய்து உன்னைக் கெடுத்துக்கொள்' என்று சொல்லவில்லை

பிரசங்கி 12, 2ல் 'சூரியனும், சந்திரனும், நக்ஷத்திரங்களும் அந்தகாரப்படாததற்கு முன்னும்' என்றிருக்கிறது.

சூரியன் என்பது: ஆலோசனை சங்கம் நிறைந்த இடமாகிய ஆத்துமா வசிக்கும் இருதய ஸ்தானத்தைக் குறிக்கும்.

வெளிச்சம் என்பது: தேவன் நமக்கு நாசியில் ஊதிவைத்திருக்கும் விளக்குப்போன்ற தீபப்பிரகாசத்தைக் குறிக்கும்.

சந்திரன் என்பது: சிரசு ஸ்தானத்தில் அடங்கியிருக்கும் பர ஒளியைக் குறிக்கும்.

நக்ஷத்திரங்கள் என்பது: மனுஷனுடைய மனசாக்ஷிக்குள் அமைத்து வைத்திருக்கும் வேதத்தைக் குறிக்கும்.

மேற்காட்டிய ஆயுள் சக்கரத்தில் மனம் இருதயம் என்பவை உள்ளத்தில் ஒன்றுக்கொன்று எதிராக இருக்கின்றன.

மனதில் உலகம் இருக்கிறது. உலகத்துக்குள் மாமிசம் இருக்கிறது. மாமிசத்துக்குள் பாவம் இருக்கிறது. பாவத்துக்குள் அந்தகாரம் மரணம் இருக்கிறது. மரணத்துக்குள் பிசாசு, பாதாளம், நரகம் இருக்கிறது. மாமிச சிந்தைக்குரிய வழி இதுவே.

# ஆலோசனைச் சங்கம்.

இதில் மனச்சாட்சியின் சுயாதீனசித்தம் இருக்கிறது.

பாதாளம்

நரகம்

பிசாசு

மரணம்

அந்தகாரம்

பாவம்

மாமிசம்

உலகம்

மனம்

ரோ. 7. 22-25




சுயம்பிரகாச
மான
நித்தியாநித்தி
யம்




1. யோசிக்கிறது
2. ஆராய்ச்சி செய்கிறது
3. நியாயம் எடுத்து கூறுவது
4. பொறுமையற்று கோபம் கொள்ளுகிறது (அகங்காரத்துக்கு பூனை.)
5. தீர்மானிக்கிறது
6. சலிப்படைகிறது
7. துணிந்து செய்கிறது
8. நடத்துகிறது

இருதயத்தில் ஆத்துமா இருக்கிறது. ஆத்துமாவுக்குள் ஆவி. ஆவிக்குள் ஞானம். ஞானத்துக்குள் கிறிஸ்து. கிறிஸ்துவுக்குள் அன்பு. அன்புக்குள் பிதா. நித்தியா நித்தியமான ஆவிக்குரிய வழி இதுவே. (ரோமர் 8, 6-13)

இதற்குமேல் வட்டத்தில் ஒன்று யோசிக்கிறது; ஒன்று ஆராய்ச்சி செய்கிறது; ஒன்று நியாயங்களை எடுத்துக்காட்டுகிறது; ஒன்று பொறுமையற்றுக்கோபம் கொள்ளுகிறது; (இதுதான் அகங்காரத்தின் முனை;) ஒன்று தீர்மானிக்கிறது; ஒன்று சலிப்படைகிறது; ஒன்று துணிந்து செய்கிறது ஒன்று நடத்துகிறது. மேலே சொல்லிய இருதயத்துக்கும் மனதுக்கும் இடையில்: சிந்தனை, சித்தம், பொறுமை, சாந்தம், இரக்கம், கிருபை, பசி, கோபம், தாகம், நித்திரை, சுறுசுறுப்பு, ஆசை இருக்கின்றனவாம். இவகைள் தோட்டமென்றும் சொல்லப்படும். 'திராக்ஷத்தோட்டத்தைக் கெடுக்கும் சிறு நரியையும் பெரு நரியையும் பிடியுங்கள்'(உன்னதப்பாட்டு 2,15) என்பது மனுஷனுடைய இருதயமாகிய தோட்டத்தைக் கெடுக்கும் கண்ணும் காதுமாம்.

பஞ்சலோகம் ஐந்து; அப்பு, தேயு, வாயு, பிருதிவி, ஆகாயம்; இவ்வைந்தும் வெளியுலகம். பஞ்சபூதம் ஐந்து; கருஈரல், பித்து, தாமரைக்காய், மண்ணீரல், நுரையீரல்; இவ்வைந்தும் உள்ளுலகம். பஞ்சலோகம் ஐந்து; பஞ்ச பூதம் ஐந்து; ஆகப்பத்து

இவைகளெல்லாம் சேர்ந்து இருதயத்துக்கும் மனதுக்கும் இடையில், அணுக்களான கொடிமாசுபோன்ற ஆலோசனைகளை இமைப்பொழுதில் ஏராளமாய்ப் பிறப்பிக்கக்கூடியதாம். ஆகையால் வானத்திலோடிய மேகங்களைக் கணக்கிட்டாலும், மனுஷனுடைய நினைவுகளை அளவிடமுடியாதாம்.

சமயத்துக்குத்தக்கபடி நினைவுகள் எல்லாம் ஒரு பந்துபோல் எழும்பி நாவோடு சேர்ந்து, பல பாஷைகளில் பல விதமாய் ஏராளமான வார்த்தைகளை மழைபோல் பொழி

வதினால் நாவுக்கு கிரியாவரம் என்றும் (நீதி 6, 14,) சுழல் சக்கரம் என்றும் பேர். மனதுக்கும் இருதயத்துக்கும் இடையில் கணக்குக்கடங்காத ஆலோசனைகளால் நிறைந்திருக்கும் சங்கமாகிய இடத்துக்கு ஆயுள் சக்கரம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. (யாக்கோபு 3, 6)

சீஷன்:—முன் குழப்பமாயிருந்தவைகளை தெளிவாய்ச் சொல்லிவிட்டீர்கள். மனம் இருதயத்தோடு சார்ந்தால் தானே, சமுசயம் நீங்கி, காரியம் சித்தியாகும் அதற்கு வழியென்ன?

குரு:—நீ கேட்கும் விஷயம் தபசு நிலையைப்பற்றி சொன்னபோது கொஞ்சம் சொல்லியிருக்கிறேன். இன்னமும் அதின் முடிவு சொல்லுகிறேன்; கேள். மனிதர்கள் மண் ஆலயங்களை உண்டுபண்ணி, மண் பீடம் போட்டு, எச்சில் பட்டதும் அழிந்துபோகிறதுமான காட்டுப் புஷ்பங்களையும் அந்நிய ஜீவராசிகளையும் துண்டித்து, பீடத்தின் மேல் வைத்து, தூபம் காட்டி, கும்பிட்டு, தாங்கள் படைத்தவைகளைத் தாங்களே புசிப்பார்கள். தேவனே தாம் உண்டு பண்ணிக் கொடுத்த நமது சரீரமாகிய ஆலயங்களிலே வாசம் பண்ணுகிறார். 1 கொரி. 3. 16ல் சொல்லியபடி நமே அவருக்கு ஆலயம்; நாம் நமது மனம் என்பவனை கிறிஸ்துவுக்குப் பீடமாக்கி (மனப்பீடம் எபி. 13, 10.) அதின் மேல் வாடாததும் சதாகாலங்களிலும் ஒழியாததும் நித்தியத்துக்குரியதுமான அன்பு என்னும் பூவைதூவி நமது பாவங்களை எல்லாம் நினைவுகூர்ந்து, ஆவிக்குள்ளாக ஞபாகப்படுத்தி, மனப்பீடத்தின் மேல் அவைகளை விறகாக அடுக்கி, பாவத்தினால் வரும் மரணம், தேவநீதி, நியாயத்தீர்ப்பு முதலியவைகளை நினைத்து, நம்மை மறந்து, ஐம்புலன்களையும் ஒடுக்கி, நம்மை அவரிடத்தில் முழுமனதோடு ஒப்புவித்து ஆத்தும விசாரணை செய்து, துக்க சாகரத்தோடு மனக்கண்ணீர் சொரிந்தால், அது மனப்பீடத்தைச் சுற்றியிருக்கும் அறைகளின் நாலு பக்கங்களிலும் சுற்றி, ஆறுபோல் ஓடி நிற்கும். இப்படிச்செய்தால் நமது

சரீரமாகிய கூடாரத்தின் அவயவங்கள் எல்லாம் அடங்கி ஒடுங்கி நிற்கும். இப்படி அவயவம் அடங்கி ஒடுங்கினால் மனதடக்கமாகும். மனதடக்கமானவுடன் நான் என்பவன் தேவ நீதியினால் சாகிறான். அப்போது கிறிஸ்துவானவர் சொன்னபடி சரீரத்திலுள்ள அரைகளெல்லாம் பூட்டப்படும். அப்போது மூல அக்கினி எழும்பும். ஆத்துமாவோடு உன் ஆவியை தேவனுக்கு சுகந்த வாசனையுள்ள ஜீவபலியின் தீப தூபமாகப் படைத்து (ரோமர் 12, 1) ஆவிக்குள் தியானம் செய். அந்நிமிஷத்திலேயே கிறிஸ்துவின் அருணோதயமாகிய ஜீவ ஒளி நமது சரீரமாகிய கூடாரத்தினுள் ஊடுருவி இரங்கும். (1 இராஜா. 18, 38.) எசாயா 60, 1-ல் 'உன் ஒளி வந்தது; கர்த்தருடைய மகிமை உன்மேல் உதித்தது' என்றும், 60, 20ல் 'உன் சூரியன் இனி அஸ்தமிப்பதுமில்லை; உன் சந்திரன் மறைவதுமில்லை; கர்த்தரே உனக்கு நித்திய வெளிச்சமாயிருப்பார்' என்றும், ஆபகூக் 3, 11ல் 'சந்திரனும் சூரியனும் தன் தன் மண்டலத்தில் நின்றன' என்றும் சொல்லியிருக்கிறது. உடனே மனக்கண் திறக்கப்பட்டு (எபேசி. 1, 19; அப்போஸ். 26, 18;) 'நான் அல்ல; எனக்குள் வாசமாயிருக்கிற பாவமே அப்படிச்செய்தது' என்று சொன்ன நீ (ரோமர் 7, 17), இனி 'நான் அல்ல; எனக்குள் வாசமாயிருக்கிற தேவ கிருபையே அப்படிச்செய்தது' என்றுசொல்லுவாய் (1 கொரி 15, 10). அவர் அருளிய பரம வெளிச்சத்தினால் ஆத்துமாவோடு ஆவி பாவமாகிய பனஇருளைக்கடந்து (யோபு 29, 3-4) அக்கினி தீர்த்தமாடி (மத்தேயு 3, 11.), இரவு பகலற்ற இடமாகிய நித்தியா நித்தியத்துக்குள் ஞான ஒளியாகிய கிறிஸ்துவுடனே ஜீவனுள்ளோரின் வெளிச்சத்திலே சதாகாலங்களிலும் அரசாளும். எசாயா 35, 10).

யோபு 29, 3-4. 'அப்போது அவர் தீபம் என் தலையின் மேல் பிரகாசித்தது; அவர் அருளின வெளிச்சத்தினால் இருளைக் கடந்து போனேன். தேவனுடைய இரகசிய செயல் என் கூடாரத்தின்மேல் இருந்தது. அப்போது சர்வ வல்லவர் என்னோடிருந்தார்.'

மத்தேயு 3, 11. 'அவர் பரிசுத்த ஆவியினாலும் அக்கினியினாலும் உங்களுக்கு ஞான ஸ்நானம் கொடுப்பார்.' அக்கினி தீட்சை என்பது ஆன்மா கிறிஸ்துவின் ஆவியைத் திரும்பப் பெற்றுக்கொள்வதேயாம்.

எசாயா 35, 10. 'கர்த்தரால் மீட்கப்பட்டவர்கள் திரும்பி, ஆனந்தக்களிப்புடன் பாடி சீயோனுக்கு (ஆவிஸ்தானத்துக்கு) வருவார்கள்; நித்திய மகிழ்ச்சி அவர்கள் தலையின் மேலிருக்கும்; சந்தோஷமும் மகிழ்ச்சியுமடைவார்கள்; சஞ்சலமும் தவிப்பும் ஓடிப்போம்.'

இப்படி அவருக்குள் நாம் ஐக்கியமானவுடன், பாவ இருள் நீங்கிப்போயிற்று; மெய்யான ஒளி இப்பொழுது இந்த உலகத்திலிருக்கும் போதே நமக்குள் பிரகாசிக்கிறது. (1 யோவான் 2, 8.) இவ்விதமாக கிறிஸ்துவின் ஜீவ ஒளியைப்பெற்ற பின் ஆத்துமா என்பவன் ஆவியோடு சரீரமாகிய கூட்டை விட்டு பிரிந்து வெட்கமும், பயமுமின்றி, தைரியம் என்னும் குதிரையேறி (எபி. 4, 16.) பரலோகத்துக்குப்போகும்போது, பரலோக இராஜியம் முழுவதையும் இவனுக்கு வெளிப்படுத்திக் கொண்டிருந்த சத்தியம் மந்திரியாக வலது பக்கமாகவும், அன்பு சகோதரனாக இடது பக்கமாகவும், நீதி பட்டயமாக ஆவிக்குரிய சத்துருக்களைத் தடுப்பதற்கு பின்பக்கமாகவும் தொடர்ந்து, ஆவியானவர் ஜெயக்கொடி பிடித்து இவனுக்கு முன்னின்று வாயுவேக மனோவேகமாக தேவனுடைய கிருபாசனத் தண்டைக்கு (எபி. 4, 16.) வழி நடத்திக் கொண்டு போகிறார். திரள் கூட்டங்களான தேவதூதர்களும் சூழ்ந்து கொண்டு போவார்கள். (லூக்கா. 16, 22; எபி. 12, 1; எபி. 12, 22-24., உன்னதை 6, 10; பரம இரகசியம்.)

---

## கிறிஸ்து ஆவிக்குரிய உலகத்தை வெளிப் படுத்த ஸ்தாபிக்கப்போகிற விபரம்.

---

**சீஷன்:**—அற்பப்பசியினுல் சொற்ப புத்தியைக்கொண்டு அத்திமரத்தை சபித்த இவருக்குள் தேவ இலக்ஷணம் எப்படியிருக்குமென்று சிலர் ஆக்ஷேபிக்கிருர்களே! இதின் விபரமென்ன?

குரு:—(மத். 21, 17-23.) பசியினுல் இயேசுவானவர் இந்த அத்திமரத்தைச் சபிக்கவில்லை. ஏனென்ருல் குருத்தோலை ஞாயிறுக்கு முந்தின சனிக்கிழமை இவர் பெத்தானியாவில் சீமோன் வீட்டில் விருந்துண்டதாக விளங்குகிறது (யோவான் 12, 1-2)

மறுநாள் ஞாயிற்றுக்கிழமை பவனிபோய் அஸ்தமிக்கும் வரை எருசலேமிலும் ஆலயத்திலும் இருந்திருக்கிருர். அஸ்தமித்தவுடன் பெத்தானியாவுக்குப் போகிருர். சிலர் ஒலிவ மலைக்குப்போனுர் என்று சொல்வதுமுண்டு இரண்டும் சரியே; ஏனென்ருல் பெத்தானியாவுக்குப் போய் அந்த இரவிலேயே ஒலிவ மலைக்குப் போயிருக்கிருர் திங்கட்கிழமை காலை 8 மணி சுமாருக்கு ஒலிவமலையைவிட்டு எருசலேமுக்குத் திரும்பி வரும் வழியில் அத்திமரத்தைக் கண்டு கனியைத் தேடினுர். அதில் கனிமட்டுமல்ல: கோடைக்காய் பிஞ்சு முதலியவையும் இல்லாதிருக்கக் கண்டு 'இனி ஒருக்காலும் உன்னிடத்தில கனி உண்டாகாதிருக்கக்கடவது' என்று சபித்தார். பலஸ்தீனு தேசம் நீர் வளம், நில வளம் பொருந்தி, செழிப்புற்ருேங்கிய தேசம். சாதாரணமாக அத்தி, அரசு, ஆல் இவைகளில் கோடை காலங்களிலும் ஒரு ஒட்டுப் பழம், ஒரு ஒட்டுக்காய், ஒரு ஒட்டுப் பிஞ்சாவது இருப்பது சகஜம். எந்த ஜாதி விருக்ஷங்களைவிட மேற்சொல்லிய மூன்று விரு

க்ஷங்களும் 'நித்தம் கக்கத்தில் பிள்ளை வைத்திருக்கும் ஜாதி' யென்று ஓர் நாட்டு சுலோகமுண்டு. அப்படியிருக்க இதிலோ ஒரு. பழமுமில்லாமல் வெறுமையாயிருந்தது ஆச்சரியமே. இரக்ஷகர் பசியினால் பழம் தேடி இருப்பாரானால், இதில் இல்லாவிட்டாலும், செழிப்பான மற்ற மரங்களில் போய்த்தேடியிருப்பார்; அல்லது சீஷர்களை அனுப்பிக் கொண்டுவரச் சொல்லியிருப்பார். அப்படியுமல்ல; அவருக்குப் பசியிருந்தது மெய்யானால், ஞான திருஷ்டியில் 'இன்ன இடத்தில் பழங்கள் இருக்கின்றன; போய்க்கொண்டு வாருங்கள்' என்று சொல்லியிருப்பார். இது அப்படியுமல்ல; இவர் பசியினால்தான் சபித்தார் என்று சொல்வதற்கிடமில்லை. வனாந்தரத்தில் பிசாசினால் சோதிக்கப்பட்டபோது நாற்பதுநாள் உபவாசமாயிருந்தாரே! அப்பொழுது அவருக்கு ஆகாரம் கொடுத்தவன் யார்? இவருக்குப்பசி தாங்க சக்தியுமுண்டு; பசியில்லாதிருக்கும்படி செய்து கொள்ளவும் கூடும்; பசியுண்டாக்கிக்கொள்ளவும் செய்வார். இப்படி சர்வதத்துவமும் நிறைந்த இந்தக்கர்த்தன், அத்திமரத்தில் தன் பசிக்குப்பழமில்லை யென்று சபித்தது ஆச்சரியந்தான்.

இதன் இரகசியமென்னவென்றால்: இந்த அத்தி அவ்விடத்திலுள்ள எவ்வித விருக்ஷங்களைப் பார்க்கிலும் உயரமாய் வளர்ந்ததும், பலகிளைகளுள்ளதும், இலை தழை முதலியவைகளால் நிறைந்து தூரத்துப் பார்வைக்கு கண்ணைக்கவரக்கூடிய அழகும் செழுமையுமுள்ளதாய்க் காணப்பட்டது.

இது நின்ற இடமோ: நானாபக்கங்களிலிருந்து எருசலேமுக்கு வருகிறவர்கள் இந்த மரத்தடியில் வந்து பிரியக்கூடிய நடுப்பாதையில் இருந்ததாம்.

எருசலேமுக்கு யாத்திரை பண்ணும் பல ஊர் பிரயாணிகள் தூரத்தில் வரும்போதே இந்த மரத்தின் செழிப்பைக் கண்டு 'அதில் கனியிருக்கலாம். பறித்துப் புசித்து இளைப்பாறிப் போகலாம்' என்று நம்பிக்கை கொண்டு அதனடியில்

வந்து பார்த்தபோது, அவர்களையெல்லாம் ஏமாறப்பண்ணி, கண் காக்ஷியைக்காட்டி, தன்னை நம்பி வந்தவர்களை வஞ்சித்ததுமல்லாமல் தானும் வெறுமையாயிருந்தது. சர்வலோக சமரச சம்மந்த சர்வத்திலும் நிரந்தரமயமாய் இருக்கக்கூடிய திரிகால சம்மந்த மூர்த்தியோ, அந்த இரகசியங்களையெல்லாம் அறிந்திருந்தவராகையால், தாம் ஆவிக்குரிய உலகத்தை விசுவாசிகளுக்கு பெரிய வெள்ளிக்கிழமை ஸ்தாபிக்கப்போகும் இரகசியத்தை, முன்னாலேயே சீஷர்களுக்குத் தெரிவித்து, அத்திமரத்தைச் சுட்டிப் பொருளாகக் காட்டி, நியாத்தீர்ப்பு வரையில், அ தை த ஒரு நிலைகொண்ட தீர்க்கத்தரிசனமாய் அவர்களுக்கு ஞாபகப்படுத்தவும் அதனால் சத்தியத்தை அவர்களுக்கு விளக்கிக்காட்டவும் அதைச் சபித்தாரேயல்லாமல் பசியினால் சபித்தவரல்ல.

இப்படியே யூத மார்க்கத்தாரும், 'ஆலயம் எங்களுடையது ; ஆசாரியத்துவம் எங்களுடையது ; நாங்களே தீர்க்கத்தரிசிகள் ; தேவன் எங்களுடையவர் ; பலி செலுத்த வேண்டியவர்கள் நாங்கள்தான் ; இரக்ஷிப்பைப்பெற்று மோக்ஷத்துக்குப்போக விரும்புகிறவர்கள் எங்கள் வழியாய்த்தான் போகவேண்டும்' எனப்பெருமைகொண்டு, சர்வாங்க தகன பலி, குற்ற நிவாரணபலி முதலியபலிகளை, தேவன் மோசேயைக்கொண்டு கொடுத்த பிரமாணத்தின்படி, உள்ளான மனசாக்ஷியின் கீழ்படிதலோடும் தாழ்மையோடும் (1 சாமு 15, 22; மீகா 6, 6-8 ல்) செலுத்தாமல் கண்காக்ஷிக்குரிய வெளியாசாரமாகிய சடங்குகளைக் கைக்கொண்டு. தங்கள் மனசாக்ஷியை பெருமைக்கும் அக்கிரமத்துக்கும் விற்று, தேவ சொத்தைக் கொள்ளையடித்து தின்றுகொண்டிருந்ததுமன்றி, பிறர்முன் தங்களை நீதிமான்களைப்போலவும், பரிசுத்தவான்களைப்போலவும் நடித்து, உலகத்தாருக்கு அந்த அத்திமரத்தைப்போல வெளிவேஷத்தைக் காட்டி, அவர்களை, வஞ்சித்து தங்கள் இருதயத்திலும் தேவ மகிமை பொருந்திய ஆவிக்குரிய கனியற்றவர்களாகி, யூதமார்க்கத்தை நம்பின மற்ற ஜனங்களையும் ஏமாற்றிக்கொண்டிருந்தார்கள். ஆகையால்

கிறிஸ்துவானவர் தமது ஆத்தும விசாரணையில்: யூதர்கள் முன்சொன்ன நிலைமையிலிருக்கக்கண்டு, புது உடன்படிக்கையின் பிரமாணத்தை ஆவிக்குரிய உலகத்தோடு ஸ்தாபித்து அதை விசுவாசிகளுக்கு வெளியரங்கமாக்கப் போகிறதால், அவர்களை கனியற்ற அத்திமரத்துக்கொப்பனையாக சீஷர்களுக்கு எடுத்துக்காட்டி, அத்திமரத்தைச் சபித்தாரேயல்லாமல், அவர் பசியினால் சபித்தவரல்ல.

படிப்பினை: நாலா பக்கங்களிலிருந்து வந்தவர்களுக்கு அத்திமரம் மத்திபமாய் நின்றதுபோல, உலகத்தார் யாவருக்கும், சத்தியம் பொதுவாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது, எனக் கருத்தாம்.

நானுபக்கங்களிலிருந்து வந்த பாதைகளெல்லாம் பற்பல தேசங்களுக்குள்ளிருக்கும் பொய்யான மார்க்கங்களுக்கு ஒப்பனையாம்.

மரத்தின் பல கிளைகள் ஒவ்வொரு ஜாதியின் பல கொடி வழிகளின் கோத்திரங்களுக்கு ஒப்பனையாம்.

மரத்தின் இலைகள் உலகத்திலுள்ள ஜனங்களுக்கு ஒப்பனையாம்.

மரத்தின்வேர் நியாயப்பிரமாணத்துக்கு ஒப்பனையாம்.

மரத்துக்குரிய அந்தஸ்துக்கு எல்லாம் சரியாயிருந்த போதிலும் என்னதான் இல்லை? கனிமட்டுமில்லை.

இன்னமும் இதின் இரகசியக்கருத்து என்னவென்றால்:- 'உலகத்தாருக்குள்ளிருக்கும் பற்பல மார்க்கங்களில் பல ஞானங்கள் ஏற்பட்டிருந்தபோதிலும் அவை உயிரற்ற ஞானம்' என்றும், கிறிஸ்துவின் ஞானமோ இரக்ஷிப்பின் ஒளியுள்ளஞானம்' (2 தீமோ 3, 15) என்றும், (இரக்ஷிப்பு என்பது:

ஆத்துமா மாயையினின்று விடுவிக்கப்படுவதாம்), 'மற்ற மார்க்கங்களிலுள்ள ஞானங்களுக்கெல்லாம் ஒளியிருந்தாலும் அவை மாய ஒளி ; முன் தோன்றி மறையும் ; ஆத்துமாக்களை வஞ்சித்துப்போடும்' என்றும், 'சத்தியமார்க்கத்தின் ஒளியோ கிறிஸ்துவின் ஞான ஒளி' யென்றும், 'இது சாமானியமாய் ஒருவனுக்குத்தோன்ருது ; தோன்றிஞல் உயிருக்குள் உள் ஒளியாய் ஊடுறுவி, ஆத்துமாவை உயிர்ப்பித்து, நித்தியா நித்தியத்துக்குரியதாக்கும், என்றும், 'முன்மோசேக்குக்கொடுத்த உடன்படிக்கையின் மாமிசத்துக்குரிய பலியல்ல புது உடன்படிக்கையின் ஆவிக்குரிய மனப்பலி செலுத்த வேண்டும்' என்றும், 'நான் உங்களுக்கு வெளிப்படுத்தி ஸ்தாபிக்கப் போகிற உலகம் இவ்வுலகத்துக்குரியதல்ல; ஆவிக்குரிய உலகம்' என்றும் (யோவான் 18, 36-38 ), 'பாவத்தை மன்னிக்கக்கூடாத நியாயப்பிரமாணத்தின் பலியல்ல, விசுவாசப்பிரமாணத்தின்படி, பாவத்தை மன்னிக்கிற மனத்தாழ்மை, கீழ்படிதலோடு கூடிய ஆவிக்குரிய மனப்பலி செலுத்தவேண்டும்' என்றும் (1 சாமு. 15, 22), 'அத்திமரத்தை நம்பிவந்தவர்களெல்லாம் பசிதீராமலும் இளைப்பாராமலும் போனூர்கள், ஆகையால் ஜீவ அத்தியாகிய என்னிடம் திரும்புங்கள் ; என் சத்தியத்தை உங்களுக்குப் போஜனமாகவும் என் ஆவியை உங்களுக்கு ஜீவ தண்ணீராகவும் கொடுத்து இளைப்பாறுதல் தருவேன்' என்றும் (மத். 11, 28.), 'என் முன்பாக சகல கள்ள மார்க்கங்களும், இதற்கு முன் நடந்த நிழலாட்டமான சகல பலிகளும் கட்டோடே ஒழியும்' என்றும், 'யூதமார்க்கத்தாரும் மற்ற மார்க்கத்தாரும் அத்திமரத்தைப் போல, ஆவிக்குரிய கனியற்றவர்களாயிருக்கிறூர்கள்' என்றும் சீஷர்களுக்கு விபரமாய் விளக்கி, புத்தி போதனை கற்பிக்க அத்திமரத்தை முழுமையாக சபித்தாரேயல்லாமல் அவருடைய பசியிஞல் சபித்தவால்ல.

சீஷன்:—இயேசு அவர்களை நோக்கி, "நீங்கள் சந்தேகப்படாமல் விசுவாசமுள்ளவர்களாயிருந்தால், இந்த அத்திமரத்துக்குச் செய்ததை நீங்கள் செய்வதுமல்லாமல், இந்த

மலையைப்பார்த்து 'நீ பேர்ந்து சமுத்திரத்திலே தள்ளுண்டு போ' என்று சொன்னாலும் அப்படியேயாகும் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்' என்றும், (மத்தேயு 21, 21.), "கடுகு விதையளவு விசுவாசம் உங்களுக்கிருந்தால் நீங்கள் இந்த மலையைப் பார்த்து : இவ்விடம் விட்டு அப்புறம் போ' என்றுசொல்ல அப்புறம்போம்" என்றும் (மத். 17, 20) சொல்லியிருக்கிறாரே ! கடுகளவு விசுவாசம் இக்காலத்தில் ஒருவருக்குமில்லையா அவர்கள் அப்படி மலையைபேர்ந்து சமுத்திரத்தில் விழு என்றால் விழுமா ? இதின் அந்தரங்கமென்ன?

குரு:—பழய ஏற்பாட்டின் காலத்திலும் ஆதித்திருச்சபையிலும் எத்தனையோ தீர்க்கதரிசிகள், நீதிமான்கள், பரிசுத்தவான்கள், அப்போஸ்தலர்கள், சத்தியத்துக்காக கொடுந்துன்பங்களின் மூலமாய் தங்கள் உயிரையும் கொடுத்து இரத்த சாக்ஷிகளாய் மரித்திருக்கிறார்கள். அநேகர் தங்கள் சொத்துக்களை சத்தியத்துக்காக பரிகொடுத்து அநியாயக்காரர்களினிமித்தம் ஆட்டுத்தோல் முதலியவைகளைப்போர்த்துக் கொண்டு, வேஷமாறி, வனாந்தரங்கள், மலைகள், மலைகளின் குகைகள், பூமியின் வெடிப்புகள் முதலியவைகளில் மறைந்து திரிந்தலைந்தார்கள் ; உலகம் அவர்களுக்குப் பாத்திரமாயிருக்கவில்லை. அநேக பரிசுத்தவான்கள் வாளால் அறுப்புண்டார்கள் ; சிரச்சேதம் பண்ணப்பட்டார்கள் ; எண்ணெய்க்கொப்பரைகளில் போடப்பட்டார்கள் ; தோல் உரிக்கப்பட்டார்கள் ; நாடகசாலைகளில் விளக்கைப்போல கொளுத்தப்பட்டார்கள் ; அநேகர் தீபாந்தரங்களுக்கு அனுப்பப்பட்டார்கள். இவ்விதமாய்ச் சத்தியத்துக்காக கிறிஸ்துவினிமித்தம் உயிர் மறந்த பலத்த விசுவாசிகள் மலையைப்பார்த்து 'சமுத்திரத்தில் விழு' என்றால், அது விழுமா ? அப்படி அவர்களில் யாராவது விழச்சொல்லி, அது விழுந்ததாக வேதத்திலும் சாஸ்திரங்களிலுமில்லை.

தற்காலத்தில் அநேக பரிசுத்தவான்கள் தங்களை தேவ ஊழியத்துக்கு ஒப்புக்கொடுத்து, அந்நியதேசங்களிலிருந்து ஜாதி இனத்தை விட்டுப்பிரிந்து, ஏராளமான பணத்தையும்,

பெண்டு பிள்ளைகளையும், உயிரையும் சத்தியத்துக்காக தாரை வார்த்திருக்கிறார்கள் என்பதைப் பற்றி யாவருக்கும் தெரிந்த விஷயமே. அவர்களெல்லாரும் கடுகளவு விசுவாச மில்லாமலா இப்படிச் செய்தார்கள்? அவர்கள் மலையைப் பார்த்து 'சமுத்திரத்தில் விழு' என்று சொல்லி அது விழுந் ததாக சரித்திரங்களிலில்லை. யாராகிலும் 'விழு' என்று சொன்னால் மலை அல்லது மரம் அப்படி விழப்போகிறது மில்லை இப்படியிருக்க இரக்ஷகர் எதற்காக இப்படிச் சொன் னாறென்றால் 'உனக்குக் கடுகளவு விசுவாசம் இருந்தால்' என் பதற்கு அதாவது : நீ கிறிஸ்துவைப்பற்றி போதனை கேட்கிற அல்லது வாசிக்கிற அல்லது தியானிக்கிற நேரத்தில், அவர் மெய்யான தேவன் தான் என்று உன்னை மறந்து, உன் மன முழு ஓர்மை (கடுகளவு) யாகுமானால்' என்றர்த்தமாம் 'மலை யைப்பேர்ந்து' : மனிதனுடைய இருதயத்தில் மட்டுமல்ல, சரீரம் முழுமையிலுமுள்ள ரோமங்களிலுமுள்ள ஒவ்வொரு ரோமத்திலும் மலைப்பிரமாண்டமான பாவங்கள் தொங்கிக் கொண்டிருப்பதாக சாஸ்திரங்கள் முறையிடுகின்றன ; 'சமுத் திரத்தில் விழு'என்றால்:—அந்நேரத்தின் கடுகளவு விசுவாசத் துக்கு சத்திய ஒளி உனக்குள் வந்தவுடனே, மலையைப்போ ன்ற பாவமாகிய இருள் உன் இருதயத்தையும் உன் அவைய வங்களையும் சமுத்திரம் போன்ற வெளி ஆகாயத்தில் விலகி விடுமெனக் கருத்தாம். (1 யோவான் 2, 8.)

கணக்கிலடங்கா மலைப் பிரமாண்டமான பாவங்கள் மனி தனுடைய ரோமங்களில் தொங்கிக் கொண்டிருக்குமானால், இருதயத்தில் எவ்வளவு பாவங்கள் குடிகொண்டிருக்கலாம். இமைப்பொழுது நேரத்தில், கடுகளவு விசுவாசத்துக்கு மலைப் பிரமாண்டமான பாவம் உன் அவயவங்களை விட்டு விலகு மானால், அவரைப்பற்றிய பூரண விசுவாசத்தை நீ மரணபரி யந்தம் சுத்த மன சாக்ஷியோடு உன் ஆத்துமாவில் காத்துக் கொண்டால் சர்வ பாவங்கள் உன்னை விட்டு விலகி, நீ ஆவிக் குள் அவரால் பரிசுத்தமாக்கப்பட்டு, அவருக்குப் பிள்ளையா வாயென்பது அதிக நிச்சயமல்லவா? இதற்காகவே ஆண்ட வர் அப்படிச் சொன்னாராம்.

**சீஷன்:**—'பிர்மச்சக்கரம்' என்பது நான் கேள்விப்படாத ஆச்சரியமான வார்த்தை. 'பிர்மம்' என்பதென்ன ? 'சக்கரம்' என்பதென்ன ?

குரு:—சமஸ்கிரத கிரந்த தத்துவ ஞானத்தில் பிர்மரிஷி, இராஜ ரிஷி என்று சொல்வதுண்டு. பிர்மரிஷி என்ருல்: திரிகால சம்மந்தமுள்ளவராய், தாமாக இருக்கிறவராகவே இருக்கிறவர். இவரே யாதொரு துணை காரணங்களின்றி சகலத்தையும் சிருஷ்டிக்கக் கூடியவர். இவருக்கு சுத்தபர பிர்மம் என்றும், பிர்மரிஷியென்றும், இவரே கிறிஸ்து என்றும், சாஸ்திரங்கள் மூலமாயும், வேதத்திலும் தெளிவாயிருக்கிறது. இவருடைய ஆக்கினைச் சக்கரத்தை சிலுவையென்றும், பிர்மரிஷியின் சக்கரமென்றும் சொல்லுவதுண்டு, இவரைக்குறித்து சர்வலோகங்களும் உண்டாகிறதற்கு முன்னதாகவே 'அவர் சர்வ மகத்துவத்தின் வல்லமையினுலே வான மண்டலங்களாகிய பரமண்டலங்களின் சக்கரத்திலே உலாவுகிருர்' (யோபு 22, 14.) என்றும், கீழே அவருடைய அருள் நிறைந்த அன்போடு, நீதிக்குரிய ஆக்கினைச் சக்கரமாகிய சிலுவையென்னும் பிர்ம சக்கரத்தை நான்கு திசைகளுக்குள்ளடங்கிய தண்ணீர்களின்மேல் வட்ட வடிவமாகத் தீர்த்தார் (யோபு 26, 10.) என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

கிறிஸ்துவின் சிலுவைக்கு முன்னடையாளங்களாகவே, அவர் நான்கு திசைகளை ஸ்தாபித்து († Cross) சர்வலோகத்தையும் நான்கு திசைகளுக் குள்ளமைத்து, இவைகளெல்லாவற்றையும் நான்கு சுவிசேஷத்துக்குள்ளமைத்து, இவைகளெல்லாவற்றையும் குறுக்குமறுக்கான சிலுவை போன்ற மனுஷனுடைய சரீரமாகிய கூட்டுக்குள்ளமைத்து வைத்திருக்கிருர். (பிரச. 3, 11.) பாவத்தினுல் கறைப்பட்டு அநீதிக்குரியவைகளான யாவையும் நிவர்த்தி செய்வதற்காக, சிலுவையென்னும் பிர்மச்சக்கரம் உலகம் தோன்றுமுன் மனுஷருக்காக ஆயத்தமாக்கப்பட்டிருந்தது என்று தெளிவாகிறது.

சீஷன்:—இராஜ ரிஷி என்றால் என்ன ?

குரு:—வித்தில்லா சம்பிரதாயம் வித்துள்ள சம்பிரதாயம் என்று சாஸ்திர வழமையாய்ச் சொல்வதுண்டு. வித்தில்லாத சம்பிரதாயம் என்பது: தகப்பனற்று மனுஷனைத் தனிப்பிறவியாய்ப் பிறப்பதைக்குறிக்கும். (இது பெரிய இரகசியம்.) இதுவே தெய்வத்துக்குரியது. இதுதான் பிர்ம ரிஷியாகும். அது கிறிஸ்துவே.

வித்துள்ள சம்பிரதாயம் என்பது: தாய் தந்தையின் சேர்க்கையால் தோன்றுவதே. இந்தப்பிறவிக்கு: இராஜ ரிஷி என்று பெயர். இது மரணத்துக்கேதுவான மனிதனைக் குறிக்கும் (அழிவுள்ள வித்து; 1 பேது 1, 23.) பிர்ம ரிஷிக்கும் இராஜ ரிஷிக்கும் வித்தியாசம் என்னவென்றால்:—பிர்ம ரிஷி ஒன்றுமில்லாமையிலிருந்து சகலத்தையும் சிருஷ்டிக்கக் கூடியவர். இராஜ ரிஷியோ: அவர் சிருஷ்டித்ததைக் கொண்டு அநேகத்தை உண்டாக்கக்கூடியவன். இவன் உகல முழுவதையும் ஆள அதிகாரம் அவரிடத்தில் பெற்றவன். அவர் சர்வலோகத்தையும் நம்மையுமாளுகிற ஜெகசக்ராதிபதியான ஆத்தும அரசனாயிருந்து, இந்த அதிகாரத்தை மனிதனுக்குக் கொடுத்தவர்.

மனுஷர் மாமிசம் என்னும் தாய் வயிற்றில் பிறந்து, பாவத்தின் கொடுமையினால் மரணம் என்னும் தாயால் விழுங்கப்படுகிறார்கள். (மரணம் என்பதை ஒருதாயாக சமஸ்கிரத கிரந்த தத்துவஞானத்தில் பாவித்திருக்கிறது) இதனால் எந்த மனுஷனும் எப்படிப்பட்ட தர்ம விஷயங்களினாலும் எப்பேர்ப்பட்ட கொடிய தபசு நிலைகளிலிருந்தாலும் மரணம் என்னும் கொடிதான தாய்க்கு தப்பிக்கொள்ளமுடியாது. ஆகையால் பிர்ம ரிஷியாகிய கிறிஸ்து, நமக்காக மாமிசமென்னும் தாய் வயற்றிலே தகப்பனில்லாமல் சுத்த பரிசுத்தமுள்ள தனிப் பிறவியாய்ப் பிறந்து, நம்மைப்போல மாம்சிச தேகத்தில் இராஜ ரிஷி கோலமுமாகி (மனுஷ சாயல் பிலி. 2, 6,)

நாம் பாகதியடைய, நாம் நிறைவேற்றி முடிக்கக்கூடாத யாவையும் தாமே (ரோமர். 8, 3.) தமது மாமிசத்தில் பிர்மச் சக்கரம் என்னும் சிலுவையிலே மரண பரியந்தம் நமக்காக தம்மைத்தாழ்த்தி நிறைவேற்றி (பிலி. 2, 8) இராஜாக்கள் யோகத்தையும் முடித்து, மரண மென்னும் தாய் வயற்றி லிருந்து மூன்றும் நாள் உதயமாகி (மரித்தோரிலிருந்து முதல் பிறந்தவர் வெளி: 1. 5; கொலோ: 1. 18.) சூரியயோகத்தை முடித்து (நீதியின் சூரியன் மல்கி: 4. 2.) மோக்ஷ மகிமைக் குபோகும் பாதையைத் திறந்துவைத்ததால், இவர் மெய்யான பிர்ம ரிஷியும் மெய்யான இராஜ ரிஷியுமானுர். (மெய்யான தேவனும் மெய்யான மனுஷனுமானுர்; இமமானுவேல்.)

(பிலிப்பி: 2. 6-7) 'இவர் தேவனுடைய ரூபமாயிருந் தும், தேவனுக்கு சமமாயிருப்பதைக் கொள்ளையாடின பொருளாக எண்ணுமல், தம்மைத்தாமே வெறுமையாக்கி அடிமையின் ரூபமெடுத்து, மனுஷசாயலானுர்.'

(கொலோ: 1, 18.) 'எல்லாவற்றிலும் முதல்வராயிருக் கும்படி, அவரே ஆதியும், மரித்தோரிலிருந்து எழுந்த முதற் பேறுமானவர்.'

## யுத்தகாண்டம்.

---

**சீஷன்:**—ஏதேன் தோட்டத்தில் நடந்த சம்பவங்களைப் பற்றி எல்லாம் சொன்னீர்கள். 'அவர் உன் தலையை நசுக்கு வார். நீ அவர் குதிங்காலைக்கொத்துவாய்' என்பதைப்பற்றிய இரகசியமென்ன?

**குரு:**— 'நீ அவர் குதிங்காலை நசுக்குவாய்' என்பது: ஆதாம் செய்த பாவத்தினிமித்தம் சர்வமும் பாவத்துக்குள் ளானதால், சர்வலோகத்தின் பாவங்களையும் சாபங்களையும் நிராகரித்து தேவனுக்கும் மனுஷனுக்கும் பிசாசினுலுண்டான

பகையை நிவர்த்திசெய்யும்பொருட்டு, தேவகுமாரனானவர் மனுஷருக்காகப் பிணைபட்டு, தாம் வருவதாக முன் வாக்களித்தபடியே காலம் நிறைவேறினபோது ஸ்திரீயின் வித்தாகத் தோன்றி மரணத்தியாகம் செய்ததைக்குறிக்கிறது. அவர் உன் தலையை நசுக்குவார்' என்பது: ஏதேனில், ஆதாம் பாவம் செய்தவுடனே அவனையும் சர்வலோகத்தையும் தேவ வல்லமையின் மகத்துவத்துடன் நீதியின்படி சர்வ சங்காரம் செய்து நியாயத்தீர்ப்புக் கொடுக்கும் நேரம், அனாதி தீர்மானத்தின்படியே இயேசுவானவர் மனுஷனுக்காகப் பிணைப்பட்டு தேவ நீதிக்கு திருப்திகரமுண்டாக்கவும், மனுஷனை உலகம், பிசாசு, மாமிசம், மரணம் என்னும் சத்துருக்களினின்று தம்முடைய இரக்கத்தினாலே விடுவிக்கவும், பிசாசோடு சிலுவையென்னும் பிரமசக்கரத்தில் பலத்த போர் செய்து அவனை ஜெயிப்பதைக்குறிக்கும்.

யோவான்: 12, 37-ல் "இப்பொழுது என் ஆத்துமா கலங்குகிறது. நான் என்ன சொல்லுவேன். பிதாவே, இந்த வேளையினின்று இரக்ஷியுமென்று சொல்வேனோ? ஆகிலும் இதற்காகவே இந்த வேளைக்குள் வந்தேன்" என்று கிறிஸ்துவானவர் சொல்லுகிறார்.

'இப்பொழுது என் ஆத்துமா கலங்குகிறது' : சர்வ லோகத்தின் பாவங்களும் சாபங்களும், தேவநீதியும் ஆதாமை ஏதேன் தோட்டத்தில் தாக்கி அழிக்கவேண்டியிருக்க கிறிஸ்துஇரக்ஷகரானவர் மனுஷனுக்காகப் பிணைக்கப்பட்டதினிமித்தம் மேற்சொன்னவைகள் யாவும் அவரைத்தாக்கினதால் இப்படிச்சொல்லுகிறார்.

'நான் என்ன சொல்லுவேன்' : அனாதி திருத்துவ ஆலோசனையில் தாம் ஒப்புக்கொண்டபடி சர்வலோகத்தின் பாவத்தையும் சாபத்தையும், தேவ நீதியையும், மத்தியஸ்தராகவும் பிணையாளியாகவும் தாம் நிறைவேற்றப்போகிறதினால் இப்படிச்சொன்னார்.

'பிதாவே, இந்த வேளையினின்று இரக்ஷியுமென்று சொல்வேனே இந்த வேளை என்றால் என்ன நேரமாயிருந்தது? ஆதாம் ஏதேன் தோட்டத்தில் நஞ்சுமரத்தடியில் பாவம் செய்தவுடனே தேவநீதி வானத்திலிருந்திறங்கி, அவனையும் சர்வலோகத்தையுமழித்து, பிதாவாகிய தேவன் நியாத்தீர்ப்பு கொடுக்கப்போகிற நேரத்திலே, குமாரனாகிய தேவன் இரக்க சித்தம்கொண்டு தமது நீதியை நிறைவேற்ற மனுஷருக்கு வாக்களித்தபடியே கெத்சேமனே தோட்டத்தில் சிலுவை மரத்திலே தம்மைப் பிராணத்தியாகத்துக்கு ஒப்புக்கொடுக்கப் போகிற வேளை. (சகரியா 13, 7.) தேவன் தமது நீதியின் படி நஞ்சுமரத்தடியில் ஆதாமில் தாக்கவேண்டிய தமது உக்கிர கோபத்தை சிலுவை மரத்தில் மனுஷருக்காகப் பிணைப் பட்ட கிறிஸ்துஇயேசுவின்மேல் தாக்கும்படியாக வானங்களை கிழித்திறங்கினார். (எசாயா 64, 2-4 ; சங்கி. 97, 2-6.)

பிசாசுக்கும் கிறிஸ்துவுக்கும் கடும்போர் ஆரம்பித்து விட்டது. சூரியன் லோக இரக்ஷகர் போர் புரியும் கஸ்தியை உலகத்திலுள்ள ஜீவராசிகள் யாதொன்றும் பார்க்க வொண்ணாதபடி தன் கதிர்களை இழுத்து ஒடுக்கி தன் ஒளியை மறைத்துக்கொண்டது. காரிருளும் அந்த காரமும் அந் நிமிஷமே பூமி எங்கும் மூடிக்கொண்டது. (மத். 27, 45.) தேவன் வானத்திலே குமுறினார். (சங். 18, 13) முழங்கிக் கர்ச்சித்தார். (எசாயா 42, 13) வான சேனைகள், தேவ தூதர்கள், கேரூபீன்கள், சேராபீன்கள், அஞ்சி நடுக்கி நடக்கப்போகிற சம்பவங்கள் என்னமோ என்று உற்றுப்பார்த்து ஆராய்ந்துகொண்டிருந்தார்கள். (1 பேது. 1, 10-11). பூமி அசைந்து அதிர்ந்தது. பர்வதங்களின் அஸ்திபாரங்கள் குலுங்கி நடுங்கின. (சங்கீ. 18, 7,) காட்டு மிருகங்கள்: நாட்டு மிருகங்கள், ஊரும் பிராணிகள், பக்ஷி பறவைகளெல்லாம் பயந்து தங்கள் தங்கள் இருப்பிடம் சேர்ந்து மறைந்தன. மனுஷர்கள் தட்டுத்தடுமாறி ஓடி ஒளித்து அந்தந்த இடங்களில் பதுங்கிக்கொண்டார்கள். பாதாள லோகத்தின் அந்தகார லோகாதிபதி நடந்துகொண்டிருக்கும் சம்பவங்

களைப்பார்த்து தன் பரிவாரங்களாகிய எமகணங்கள், பூத கணங்கள், வேதாளங்களுடன் நடுங்கித்திடுக்கிட்டு : தங்களுக்கு ஆபத்து கிட்டிவிட்டதோ ; தங்களுக்கென்று ஆயத்தம் பண்ணப்பட்டிருக்கும் ஆக்கினை வந்துவிட்டதோ என்று எண்ணிக்கடைசியாக, லோக இரக்ஷகர் நிறைவேற்றும் மீட்பின் கிரியையை அபத்தமாக்குவதற்கு அவரோடு போர் புரிய எத்தனித்தாள் அச்சமயம் கர்த்தர் கார்மேகத்தைக் கூடாரமாக வளைத்து, அந்தகாரம், பாவம், மரணம், காரிருள், பிசாசு, பாதாளம் என்பவைகளை தமது பாதத்தின் கீழ் (சங்கி. 18, 7–16; கொலெ. 2, 13-15) வாகனமாகக் கொண்டு, சிலுவை என்றும் பிரமசக்கரத்தினலே, தேவநீதியோடு தமது மாமிசத்திலே தாக்கி அவைகளை ஊடறுத்து சர்வ சங்காரம் செய்து. பாதாளத்திலிரங்கி, தம்முடைய மரணத்துக்குள் சிலுவையிலே வெற்றி சிறந்து ராஜயோகத்தை முடித்து, மூன்ரும் மணிநேரம் முந்தி இறந்தவர்கள், இப்போது இறக்கிறவர்கள், இனிமேலிறக்கப்போகிறவர்களாகிய திரிகால சம்பந்தமான நீதிமான்கள்' பரிசுத்தவான்கள், விசுவாசிகளுடைய ஆத்துமாக்களையும் மனேகதத்துவத்தில் ஆவிக்குள்ளிழுத்து பிதாவாகிய தமது திருவுள்ளத்தில் ஒப்புக்கொடுக்கிற நேரமாயிருந்தபடியால், 'பிதாவே என் ஆவியை உம்முடைய கைகளில் ஒப்புவிக்கிறேன்' என்று சொன்னர் (லூக்கா 23, 46.)

'பிதாவே என் ஆவியை உம்முடைய கைகளில் ஒப்புவிக்கிறேன்' என்ருல் : தம்முயிர் சிலுவையில் பரிதபிக்கப்பட்ட நிலைமையிலிருக்கும்போது, தமக்கு மேலாக ஒரு தெய்வம் இருக்கிறதாகவும், அவரிடத்தில் தம்முடைய ஆவியை அடைக்கலமாக ஒப்புக்கொடுக்கிறதுபோலவும் சிலர் எண்ணுவதுண்டு. அது அப்படி அல்ல ; மல்கியா 2, 15ல் 'அவர் ஒருவனை அல்லவா படைத்தார்; ஆவி அவரிடத்தில் பரிபூரணமாயிருந்ததே பின்னை என் ஒருவனைப்படைத்தார். அவன் பரிசுத்த சந்ததியைப் பெறத்தானே' என்று சொல்லியிருக்கிறது. இதில் நாம் அறியவேண்டியது. மனுஷனைப்

படைத்து தமது ஆவியை அவனுக்குள் ஊதும்போது அவர் பரிபூரண நிறைவுள்ளவராயிருந்தார். இப்படிப்பட்டவர்களுக்கு பிறக்கும் பிள்ளைகளுக்கெல்லாம் ஊதாமல் ஒருவனுக்குள் மட்டும் ஊதி ஒரு வித்தாகவைத்தார். அந்த மனுஷனுக்குள்ளிருந்த வித்து அவனில் தோன்றிய உலகமனுமக்களெல்லாருக்குள்ளுமிருக்கிறது. ஆகையால் பிறக்கும் பிள்ளைகளுக்குள்ளெல்லாம் ஊத வேண்டிய அவசியமில்லை. அப்படியே, அவன் பாவச்செயலும் எல்லாருக்குள்ளும் நிறைந்திருந்து அவனைப்போல் நம்மெல்லாரையும் மரணத்துக்குள்ளாக்கிவிட்டது. (ரோமர் 5, 17-19.)

ஆதாம் செய்தபாவத்தினுல் மனுஷன் தன் தேவசாயலை இழந்தான். அவனுல் நாமெல்லாரும் அதை இழந்தோம். ஆவியை அவனுக்குள் ஊதின இவரே, திரும்பவும் மனுஷனில் அந்தச்சாயலைப் புதிப்பிக்கவேண்டி நம்மைப்போல் மாமிஷதேகமெடுத்து, சுத்தபரிசுத்த பிள்ளையாய்ப்பிறந்து, நம்மைத் தமது சொந்த இரத்தத்தினுல் பரிசுத்தமுள்ள சந்ததியாக்க சிலுவையிலே மரணத்துக்குள்ளானுர். (1 கொரி 15, 45.) 'அந்தப்படியே, முந்தின மனுஷனுகிய ஆதாம் ஜீவாத்துமாவானுன் என்றெழுதியிருக்கிறது; பிந்தின ஆதாம் உயிர்ப்பிக்கிற ஆவியானுர்.'

யோவான் 12, 32ல் 'நான் உயர்த்தப்படும்போது, எல்லாரையும் என்னிடத்தில் இழுத்துக்கொள்ளுவேன்'. என்று சொல்லுகிறுர். ஆதாமுடைய பாவத்தில மரித்த திரிகால சம்மந்தமான விசுவாசிகள், நீதிமான், பரிசுத்தவான்களுடைய ஆத்துமாக்களோடு ஆவிகளை, தாம் அவர்களுக்காக மரணத்துக்குள்ளாகி, தமது ஆவியினுல் உயிர்ப்பித்து பிதாவாகிய தமது திருவுள்ளத்தில் அடைக்கலம் வைக்கிற நேரமாயிருந்ததால் 'பிதாவே உம்முடைய கைகளில் என் ஆவியை ஒப்புவிக்கிறேன்' என்று சொன்னுர்.

'என் ஆவி என்பதில் திரிகாலசம்மந்தமான எல்லா விசு

வாசிகளின் ஆவிகளும் அவருக்குள் அடக்கம். (கொலோ 3, 3.) 'ஏனென்றால் நீங்கள் மரித்தீர்கள்; உங்கள் ஜீவன் கிறிஸ்துவுடனே தேவனுக்குள் மறைந்திருக்கிறது.'

அவர் ஆவிகளை பிதாவாகிய தமது திருவுள்ளத்தில் ஒப்புக்கொடுத்த நேரம் கல்லறைகள் திறக்கப்பட்டு பரிசுத்தவான்கள் வெளியரங்கயானார்கள். (ம.த். 27, 51-52.)

அவர் அடக்கம் பண்ணப்பட்டு மூன்றும் நாள் மரணமென்னும் தாய் வயிற்றிலிருந்து உதயமாகி (வெளி. 1, 5; 1 கொரி. 15, 55-57.) சூரியயோகத்தை முடித்தார். 'முள்ளும் குறுக்கும் முளைப்பிக்கும்' என்ற தேவசாபத்தால் மோக்ஷபாதை அடைபட்டிருந்தது. கிறிஸ்து இரக்ஷகர் நமக்காக முள்முடி சூடி. சாபத்தை நீக்கி, நாம் ஆவிக்குள் ஆவியாய் அவரைத் தரிசித்து, ஜீவகிரீடம் பெற்றுக்கொள்ள மோக்ஷ மகிமைக்குள் போகும் பாதையை திறந்துவிட்டார். (யோவான் 10, 7-9; 14, 6.)

அவருக்கே என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களிலும் கனமும், மகிமையும், துதியுமுண்டாவதாக. ஆமேன்.

